# அகத்திய மாமுனிவர் அருளிய பரிபூரணம் - 1200

பதிப்பாசிரியர்

எஸ். பி. ராமச்சந்திரன்




தாமரை நூலகம்
7, N.G.O. காலனி,
வடபழனி, சென்னை - 600 026.
தொலைபேசி எண் :480 02 49.

| | | |
|---|---|---|
| வெளியீடு | : | 191 |
| முதல் பதிப்பு | : | மே. 1997 |
| உரிமை பெற்றது | : | |


## நூலைப்பற்றி

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகத்திய மாமுனிவர் அருளிய பரிபூரணம் - 1200 |
| பதிப்பாசிரியர் | : | எஸ். பி. இராமச்சந்திரன் |
| வெளியிடுவோர் | : | தாமரை நூலகம் 7, N.G.O. காலனி, வடபழனி, சென்னை- 600 026. |
| பதிப்பு ஆண்டு | : | மே. 1997 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| நூல் வடிவம் | : | 21 செமீ X 14 செ.மீ |
| தாளின் தன்மை | : | 16 கி. வெள்ளைத்தாள் |
| பைண்டு | : | ஸ்ட்ரா போர்டு / ரெக்ஸின் |
| அச்சு எழுத்துக்கள் | : | 12 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : | 304 + 8 = 312 |
| பிரதிகள் | : | 1000 |
| நூலின் விலை | : | சாதா பைண்டிங் ரூ. 100-00<br>ரெக்ஸின் பைண்டிங் ரூ. 125-00 |
| டைப் செட்டிங் | : | நிறைமதி பப்ளிஷர்ஸ், பெரம்பூர் - 11. |
| அச்சிட்டோர் | : | கிரியேடிவ் ஆப்செட், சென்னை - 34. |

36-

# பொருளடக்க அட்டவணை அகராதி

| பொருள் | பக்கம் |
|---|---|

ஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃஃ

⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘⌘

உ

பரமபதி துணை

## அகத்திய மாமுனிவர்
## அருளிய

# பரிபூரணம் - 1200

பூரணமாய் நிறைந்தபரி பூரணமேகாப்பு
 போதமயமானபூ ரணத்தைப் பாட
காரணமாய்க் கருவுருவா யெங்கு நிறைந்திருந்த
 கண்மணியி நடுவாகிக் கருணை தரும்பொருளை
ஆரணமாய் முக்கோணத் தடியில் நடுவாகி
 அசையாத பொருளாகி யருவுருவுமாகி
வாரணமாய் மூலமதில் நந்தி யென்னும்பிள்ளை
 வாசியெனும் பூரண மனோன்மணி காப்பாமே. 1

ஆமப்பா பூரணத்தை அனுதினமுநோக்கி
 அதினுடைய விபரமதை யாரறிந்து சொல்வார்
நாமப்பா சொல்வத்ற்கு நாவில்வலுவுண்டோ
 நாதாந்த மனோன்மணியி நடுவொளியின் கீழே
சோமப்பா நிறைந்த பூரணத்தைக்கண்டால்
 துலங்குகின்ற பூரணத்தால் சோதியுடகிருபை
தாமப்பா அல்லாமல் வேறுபொரு ளுண்டோ
 தன்னிலையைத் தானறிந்து தாரணியைக்காரே. 2

காரப்பா பூரணத்தால் பிருதிவியைக்கண்டு
 கருணையுள்ள பிருதிவியு நடுவெளி யினுள்ளே
சேரப்பா மனதறிவால் பூரணமாய் நீயும்
 சேர்ந்து மிக நீயுமொரு காரணமாய் நின்றால்
நீரப்பா தான்பெருகிப் பூரணமாய்நிற்கும்
 நிலையாத பூரணத்தில் நிலைத்துமிகநின்றால்
தேரப்பா மனந்தேறி அந்தமுர்தங் கொள்ளு
 சிவயோக சிந்தையிலே பூரணமாய் நில்லே. 3

நில்லப்பா பூரணத்தில் தன்னிலையைப்பற்றி
நிலைத்தமன துறுதியினால் தீபமதைக்கண்டு
செல்லப்பா மூலமதில் கனலதனைத்தூண்டி
திருவான அப்புகையைத் தீபமதில்செலுத்த
வில்லப்பா விசைபோலே அக்காலில்தீபம்
விபரமுடன் யிறங்குகின்ற கருணையென்னசொல்வேன்
உள்ளப்பா நீயாகிஉளுந் துருளும் போதளவில்
உருமையுடன் பூரணமாய் நின்றதுவைப் பாரே. 4

பாரப்பா பூரணமாய் நின்றதுவைப் பார்த்தால்
பரமவெளி தன்னிலொரு தன்னொளிவு காணும்
ஆரப்பா அறிவார்கள் தன்னொளிவு தன்னை
அரகரா அறிந்தவர்கள் பூரண தேகமுமாம்
வீரப்பா செய்யாமல் பூரணத்தைநம்பி
விபரமுட நீயொடுங்கும் நடுமனையைப்பாரு
நீரப்பா தான்பெருகிப் பிருதிவி தன்னோடே
நேர்ந்துகொண்ட பூரணத்தை நீயிருந்துபாரே. 5

பார்க்கையிலே பூரணங்கொண் டெழுந்துபாரு
பதிவான பிரிதிவியு மப்புங்கூடி
சேர்க்கையுள்ள நாதவிந்து சத்தி சிவ்மாச்சு
சிவசக்தி யானதுவும் ரவிமதியுமாச்சு
மார்க்கமுள்ள ரவிமதியும் ராப்பகலுமாச்சு
மயங்காதே ராப்பகலும் பகல்ராவும் சேர்ந்து
தீர்க்கமுடன் விடிந்துதென்ற பொருளையறியார்கள்
சிவசிவா யிப்பொருளை மந்திரமாய்க்கேளே. 6

கேளப்பா நீயிருந்து மனது பூரணமாய்
கேசரத்தி லாடுவது அகாரபீடமதாம்
வாளப்பா அப்பீட மிருக்கு மிடந்தானும்
வளமான பிருதிவியாம் காரமது ரெண்டு
சூளப்பா ஒன்றான மனோன் மணியின் வீடு
சுத்த மென்ற பெரும்பாளில் மகாரநடுமனையாம்
ஆளப்பா மகாரமது ஓங்காரமாகி
அது வட்டங் கொண்டதொரு விந்துநிலையாச்சே. 7

ஆச்சப்பா விந்துநிலை எங்கேயென்றுபாரு
அந்த நிலை சொல்லுவது பூரணமே சொல்லும்
நீச்சப்பா வெகுநீச்சு விந்து நிலைதானும்
நிலையாத கேணியடா பூரண நீரப்பா
பாச்சப்பா அந்நீரை உகாரபதிமேலே
பத்திகொண்டு பூரணமாய்ப் பாச்சின தால்மைந்தா
மூச்சப்பா வென்றதொரு நாதமதுக் குயிராய்
முளைத்தெழுந்த தீபவொளி முதுகிடமாய்ப்பாரே. 8

**பிரம்மதெண்டின் விபரம்**

பாரப்பா முதுகினிடம் பூரணமாய் நீயும்
பதிவாக நீயிருந்து பார்த்ததினால் மைந்தா
நேரப்பா நடுவீதி கம்ப மதினோரம்
நிறைந்தபரி பூரணத்தை யாரறியப்போறார்
பேரப்பா பெத்ததொரு மகிமைதனைச் சொல்வோம்
பிரமமென்ற தெண்டினுட விபரமதைக்கேளு
ஆரப்பா மனைதானும் ஆருமனையென்றால்
அரகரா சொல்லுகிறோம் அங்கமாய்க்கேளே. 9

**ஆறாதாரம்**

கேளடா பூரணமாய் மனதுருமையாகக்
கிருபையுள்ள மூலமடா நந்தியுடகம்பம்
மேலடா பிரமாதி பட்டணத்துக்கப்பால்
வெகுதூரம் மாலினுட பட்டணந்தானொன்று
கோளடா யில்லாத ருத்திரனார் தானும்
குடியிருந்தா ரவர்பதிக்கு மேலவப்பாக
வாளடா ருத்திரனு மயேஷ னுருவாகி
வரைந்தானே அதின் மேலோர் பட்டணமுந்தானே. 10

**திருநடன விபரம்**

பட்டணத்தின் மேலேயொரு பட்டணமுண்டாக்கி
பதிவாகச் சதாசிவன்போ லிருந்தானே ருத்ரன்
திட்டமுடன் ருத்திரனு மூன்று மனைகட்டி
செம்மையுட னிருந்தாரே நடுமனையிற்றானும்
சட்டமுடன் நடுமனையில் தானிருந்து கொண்டு
தவமான மேல்மனையி லிருகாலை நாட்டி
இட்டமுடன் தலை கீழாய்த் திருநடனமாடி
இருந்த திரு நடனமதைப் பூரணமாய்ப்பாரே. 11

### திரிகூட பர்வதம்

பார்ப்பதுதான் திருநடன மெங்கேயென வென்றால்
பரமான கயிலாச பொன்மேரு கிரியில்
கூர்ப்பரிந்த கயிலாச மேருகிரி தானும்
கோணமென்ற நாற்பத்துமூன்றாவது கோணம்
சேர்க்கையுள்ள கோணமதில் நடுக்கோணமைந்தா
திரிகூட பருபதமென் றதற்குமிக நாமம்
மார்க்கமுடன் திரிகூடப் பருவத்தின் மேலே
மகத்தான சத்திசிவம் வாழ்ந்து வைப்பாரே. 12

### மேர்வு நிதானம்

வாழ்ந்திருந்த மேருவுக்கு நிதானமதைக்கேளு
வளர்த்தியது ஆகாசம் என்னென்று சொல்வேன்
தாழ்ந்திருந்த அகலமது கோடானகோடி
சதிரான யோசனைதா னிதான மதுவய்யா
சூழ்ந்திருந்த பரதகண்ட மாயிரத் தெண்கோடி
துருவமுள்ள மணல்கண்டம் அதிலுமிகரெட்டி
ஆழ்ந்திருந்த லவனசா கரமுமதுரெட்டி
அதன்பிறகு பார்க்கண்ட மதிலுமிகக்கேளே. 13

கேளப்பா மணல்கண்டம் அதிலுமிகரெட்டி
கிருபையுள்ள சுத்தசா கரத்தைக்கேளு
சூளப்பா மூவிரட்டி சுத்த சாகரமும்
சூழ்ந்ததுக்கு மேலாகப் பார்மணல் கண்டம்
வாளப்பா பார்மணலுக் கடுக்க மிகத்தானும்
மகத்தான பாதாள கெங்கையெனவாகும்
தூளப்பா கெங்கைதிருப்பாற் கடலுமாகி
தருவான பார்க்கடலுக் காதாரங்கேளே. 14

கேளுநீ ஆதாரஞ் சொல்லுவதை மைந்தா
கேசரமாம் நாற்பத்தி மூன்றுநடுக் குள்ளே
வாளுநடுக் கோணமதி லமுர்தமதுமூறி
வந்ததடா பூமிநடுப் பாதாளமாக
நீளடா தான்பெருகி வந்தமதி யமுர்தம்
நிறைந்துதடா கீழ்பூமி பாதாள வரைக்கும்
தாளுவது மதியமுர்தம் ஒன்று மாத்திரமே
தருகாத சராசரங்கள் தான்பொங்கும் பாரே. 15

பொங்கியது தான்வடிந்து பாதாளந்தன்னில்
பொருந்துமது மதியமுர்த மதனி லுறவாகி
தங்கிபது பூரணமாய்த் தானிறைந்து தய்யா
சராசரத்துக் குயிராகித் தற்பரத்திற் சென்று
அங்கியென்றும் வாயுவென்று மாகாசமென்றும்
அடங்கிநின்ற பஞ்சகர்த்தா அதனினுடவிபரம்
சங்கையுட னறியவென்று பராபரந்தா னெண்ணி
தாரணியை யளவிடவுந் தானினைந்தார் தானே. 16

## பஞ்சபூத மறிய

தானென்ற தாரணியை அளவிடும் போதளவில்
தன்னுக்கு ளடங்காத பெருமைதனைக்கண்டு
ஊனென்ற பிர்மாவைத் தான்திட்டித் ததனுள்
உண்மையுட னிவ்வுலகில் நீயிருந்துகொண்டு
தேனென்ற உயிர்ப்பயிருக் காதாரமாகி
தீட்டிக்கும் நகாரமெனும் விஞ்சைதனையோதி
நானென்ற சத்தமொடு நன்மையுடனிருந்து
நன்றாகக் கார்மேக அப்பினிடஞ் சேர்ந்தார். 17

சேர்ந்தந்தச் சாகரத்தை அளவிடவென்றெண்ணி
செம்மையுட னூடுருவிப் பார்க்கும்போதளவில்
சார்ந்ததொரு சாகரமுந் தன்னளவுக்கையா
தப்பாமல் நின்றதினால் தண்மையுடனெண்ணி
கூர்ந்ததொரு மாலவனைச் சகாரத்துக்குயிராய்
குடியுருமென் றவர்தமையுங் கூர்மையுடன்சொல்லி
தேர்ந்ததொரு மகாரமெனும் விஞ்சைதனையோதி
சிவாயமெனும் பருசமதுக் கின்பமதாய்நில்லே. 18

நில்லென்று சொல்லியபின் அக்கினிதன் னையுமே
நிசமாகச் சோதிக்குஞ் சோதனை தன்னளவில்
சொல்லென்றுஞ் சொல்வதற்கு முடியா ததினால்
துருவமுள்ள ருத்திரரென் றருளைமிகநல்கி
கல்லென்ற உலகுதனக் குயிர்த்துணையுமாகி
கருணையுட னிருமெனவே சிகாரமெனும்பொருளை
உள்ளென்ற உயிர்போலே உபதேசம்வைத்து
உருமையுட னிருவெனவே வாய்வினிடஞ் சென்றார். 19

சென்றந்த வாயுதனை அளவிடும்போ தளவில்
தீர்க்கமுட னளவிடைக்கிச் சேராத படியால்
கண்டந்த மயேசுரனென் றருளைமிக யீய்ந்து
கருவான உயிர்ப்பயிருக் காதாரமாகக்
கொண்டிருந்த படியிருந்து காத்தருளுமென்று
குருவான வகாரமெனும் விஞ்சைதனைநல்கி
விண்டுவதற் கப்பாலே ஆகாசமதனை
விளாவிடும் போதளவில் முடியாதபடியால். 20

முடியாத படியதனைத் தன்னருளால் கண்டு
முத்தியுள்ள சதாசிவமென் றவரைமிகப் பார்த்து
வடிவான ரூபமதுக் காதாரமாக
வாழ்ந்திருமென் றவர்தனக்கு யகாரமெனும்பொருளை
துடியாக அவர்தனக்கு உபதேசம் வைத்து
சுகமாக யிருவென்று பராபரனுமைந்தா
அடியான மூலமது ஓங்கா ரக்கம்பம்
அதனுனியில் மேலாக அருஉருவா னாரே. 21

அருஉருவு மாகியந்தக் கம்பநுனிமேலே
அசையாத பொருளாகி அண்டமெனுந்தானாய்
திருவுருவங் கொண்டதுவு மாருமறி யார்கள்
சிவயோக ஞானவொளி தீபமதின்மகிமை
கருவுருவாய் நின்றதொரு மானிடர்கள் தானும்
கால்வேறு தலைவேறாய்க் கருதுவதுரெம்ப
குருவுரையை யறியாமல் குருடர் மதம்பேசி
கூறுகெட்ட ஞானவழி கூறுவது பாரே. 22

## நெறியறியா மூடர்

பாரப்பா கூறுவதுக் கிடமதுவு மில்லை
பஞ்சபூ தங்களது நின்றநிலை தானும்
நேரப்பா நின்றபர மைந்துநிலை பார்த்து
நிலையாமல் நின்றதினா லேகபரா பரமும்
காரப்பா வென்றவரும் பஞ்சகர்த்தாவென்று
கருவான உலகமதி லெங்கு நிறைந் திருந்தார்
ஆரப்பா அறிவார்க ளஞ்சினுட மகிமை
அறியாம லுலகமது அலறுவதுபாரே. 23

பாரென்ற உலகமது பேயான கூத்து
பக்குவங்க ளறியாத பஞ்சபாதகங்கள்
நேரென்ற சிவ நிலை யறியாத மூடர்
நிலையறிந்து வழியறிந்து நில்லாத வண்டர்
கூரென்ற சொல்லதனைக் குறியாத மாந்தர்
கூசாமல் பொய்வசனம் கூறுகின்ற நேசர்
நாரென்ற நாரரிந்து நல்மலரைப்பூட்ட
நலமறியான் குலமறியான் நாட்டமறியாரே. 24

நாட்டமன மறியாத மூடர்களோ கோடி
நங்கையர்மே லாசைகொண்டு மயங்கியலைவார்கள்
வாட்டமது யில்லாத மலரையறி யார்கள்
மதுவான பூரணத்தின் உருசைதனை யறியார்
தேட்டமென்ற சிவயோக வழியையறி யார்கள்
சிவமான சத்திதனை யறியாத மூடர்
தாட்டிகமாய் ஞானவழி தன்னை யறியாமல்
சமுசயங்கள் தீராம லலைவரார்கள் தானே. 25

அலைவார்கள் தேசாதி தேசங்க டோரும்
அணுவான தமர்வாச லறியாம லேதான்
குலையான பாவங்கள் செய்வார்க ளையா
குணமாகத் தன்னுயிர்போல் மண்ணுயிர்கா ரார்கள்
வலையான மோகவலை தன்னிலுற வாகி
மதியான மதிகெட்டு மாழுவர் மண் மீதில்
கலையான யிருகலையும் ஒரு கலையாய்ப் பாரார்
காமவலை தன்னில்விளை யாடுவார்கள் பாரே. 26

**தன் தாரத்துடன் இருக்கலாமெனல்**

பாரப்பா யிந்தமதி யாலேலோகம்
பக்குவங்க ளறியாமல் பெண்ணாசையாலே
வீரப்பா கொண்டுமதி யலைந்தே போனார்
மெய்யான பெண்ணுடனே வாழ்ந்தாலென்ன
காரப்பா தன்தாரந் தாரமதுவாகி
காசினியில் மருதாரந் தாய்போலேயெண்ணி
நேரப்பா நின்றதினால் காயமதுசித்தி
நினைவுதப்பி நின்றதினால் காயமது போச்சே. 27

போகாமல் பூரணத்தைத் தினமு நோக்கி
புத்திகொண்டு அறிவதனால் மூலம்பார்த்து
வாகான வழியறிந்து கமலம் நோக்கி
மகத்தான தீபவொளி தன்னிற்சென்று
பாகான அத்தீப வொளியிலேதான்
பதிவான கனியொன்று அதேதென்றாக்கால்
நீகாணச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
நின்றயிடஞ் சத்திசிவ ரூபமாச்சே. 28

### கைலாச மகிமை

ஆச்சப்பா சத்திசிவ மறியவேண்டி
யான்பட்ட பாடுகளைச் சத்தேகேளு
பேச்சப்பா பேசுதற்கு பக்குவங்க ளில்லாப்
பிராயமதில் பெரியோரைப் பணிவேன்மைந்தா
வீச்சப்பா வெகு கொடுமை துடியோமெத்த
வேணபடி திரிந்தலைந்தேன் வீணரோடே
மூச்சப்பா நின்றநிலை யறியவேண்டி
மோகமதாய்க் கயிலாசம் வலம்வந்தேனே. 29

வலமாக வரும்போது தென்பு ரத்தில்
மகத்தான சித்தருட வலுமை மெத்த
குலமான சித்தரென்றால் பிர்ம குலமாகும்
கூர்மையுட னவர்களிடம் பேசவென்றால்
நலமான பக்குவங்க ளில்லை யில்லை
நாளிகைக்கோர் நாளிகைதான் வேள்விசெய்து
பெலமான கால்தலைகள் வேறாய்நின்று
பேசினார் சரிதை வழி பின்னின்றேனே. 30

பின்னின்று மேல்புரத்திற் செல்லும்போது
பிலமான சத்திரிய ரனந்தங்கோடி
கண்ணிறைந்த ஞானநெறி சற்றுமில்லை
கருவான கிரிகையிலே கருவோமெத்த
முன்னின்று அவர்களுடன் பேசவேண்டி
முழுமனதாய்ச் செல்கையிலே நீயாரென்றார்
விண்ணிறைந்த காச்சிபெற்ற சூத்திரனானென்றேன்
வினையமுற்றும் பேசாமல் நின்றார்தானே. 31

நின்றநிலை தானறிந்து வடபாகத்தில்
நெடுந்தூரஞ் சென்றுவிளை யாடும்போது
கண்டதொரு இடங்களெல்லாம் யோகவாழ்க்கை
கதிகொண்டு நின்றாரே வைசியர்தானும்
பண்டுடைய யோகமதில் திறமோமெத்த
பத்திகொண்டு அவர்களிடம் பருவமாக
சென்றுமிகப் பூரணத்தின் வகையேதென்றேன்
திறந்தப்பாய்ச் சொன்னதினால் திரும்பினேனே. 32

திரும்பிமிகக் கீழ்த்திசையில் வரும்போதய்யா
சிவசிவா சூத்திரரோ திறமோமெத்த
விரும்பிமிக அவர்களிடஞ் செல்லும்போது
வெகுகோடி சித்தரிலே ஒருவர்தானும்
இரும்பதிலு மிளகாத மனமதாகி
இருந்துசிவ யோகமது செய்தாரப்போ
கரும்பதிலு மினியசொல் லாகப்பேசி
கண்டறிவோ மென்றுமெள்ள அடுத்தேன்பாரே. 33

அடுத்துமிகப் பூரணத்துக் குறுதிகேட்டேன்
அப்போது நீயாரென் றமுத்திப்பார்த்தார்
கடுத்தமன துறுதிகண்டு சூத்திரனா னென்றேன்
கருவான என்மகனே வாவாவென்றார்
தொடுத்துமிக அவரிடத்தி லடுத்துநின்றேன்
சுகமாக இருமென்று அறிக்கையிட்டு
தடுத்துமிக ஆளடிமை கொண்டுயக்கியம்
தான்வளர்த்தான் பூமிமுத லாகாசவரைக்கே. 34

## கும்பமுனியான விபரம்

வறைகண்டு யெக்கியந்தான் வளர்க்கும்போது
மகத்தான தேய்வென்ற பூதந்தானும்
நிறைகின்ற பூரணமாங் கும்பங்கொண்டு
நிலையாத அனலுக்குள் நின்றுதப்பா
துறையாக யிருந்தென்னைக் கண்ணால்மேவி
சுகமாக வகத்தியமாய் வாவென்றார்கள்
குறையாத கும்பமடா பூரணத்தின்கும்பம்
கொண்டுநின்ற வடிவதனைக் கூர்ந்துபாரே. 35

பாரென்று சொல்லியவர் பாய்ந்தாரப்போ
பக்குவமா யவர்முன்னே பாய்ந்தேனானும்
சீரென்ற கும்பமது பெண்ரூபமாகி
சிவாயகுரு நாதனவ ராண்ரூபமாகி.
நேரென்ற யிருவருக்கு நடுவாகி நின்றேன்
நிலையாக அனலதுவை நிசமாக உண்டேன்
தேரென்ற மனந்தேறி யிருவருமூவருமாய்
சென்றுகரை யேறினபின் சிவாயகுருநாதன். 36

**கால்தலை**

குருவான நாதனவன் மடிமீதில்வைத்து
கும்பமுனி நீயெனவே என்றுமுகந்தடவி
திருவான பூரணத்தை வாரிமிகத்திரட்டி
செம்மையுடன் தானீய்ந்தார் வாங்கிமிகக்கொண்டேன்
உருவான தேகமது அமுர்தபூரணமாய்
உண்மையுட னவர்பாதஞ் சிரமீதில்வைத்து
கருவான காலேது தலையேது யென்றேன்
கைமுறையாய் நீநானும் வேறல்லவென்றார். 37

**பதிபசுபாச விபரம்**

வேறெல்ல வென்றுமிக நாதன்சொல்ல
விரிந்துநின்ற தத்துவத்தின் விபரங்கேட்டேன்
கூருள்ள பதிபசு பாசத்தைக்கேட்டேன்
குறிப்புமிக நன்றெனவே கூர்ந்து நாதன்
சீருள்ள பதிபசு பாசத்தினாலே
திரண்டுதடா தத்துவத்தின் செனனக்கூரு
வீருள்ள தத்துவங்க ளிம்மூன்றுநாலே
விபரமுடன் சொல்லுகிறோம் நன்றாய்க்கேளே. 38

**தத்துவங்கள் விபரம்**

கேளப்பா பதிதானும் பசுபாசமறியும்
கெணிதமுடன் பசுதானும் பதிதனையுமறியும்
வாளப்பா பசுவறியும் பாசமதைத்தானும்
மகத்தான பாசமது பசுவையறியாது
ஆளப்பா பாசமது பசுவதனைக்காண
அரகரா குருவருளா லரியவேணும்
சூளப்பா யிதுதனையுமறியாதாராகில்
சுளிவாகப் பசுபாசங் கூடும்பாரே. 39

கூடியொன்றாய் விளைவதுவு மழிவதுவுமாகும்
குறிப்புடனே பசுவந்து மேவிநன்றாய்
நாடியதோ ரிச்சையிலே புகுதப்பண்ணி
நலமில்லா பிறப்பிறப்புக் கிடமதாகும்
தேடிய பசுபாசத் துடன் கூடாதே
சிறந்தபசு பாசமுருத் தரிக்குமோதான்
சூடியே பதிவந்து புகுந்த வாரும்
சொற்பசுவும் மாசமுரு வானவாரும். 40

வாரான பக்குவங்கள் பூரணமதாக
வருந்துறைக்க வேணுமென்றால் அடியைக்கொண்டேன்
சீரான பக்குவங்க ளொன்றுமில்லை
சிறந்தபதி பரமாகும் பசுவதுவுமுயிராம்
பேரான பாசமது தேகமதுவாகும்
பெலமான பசுவதுவும் பதியில் மிகச் சேர்ந்தால்
வீரான தேகமென்ற பாசமதுக் குருதி
மெய்யாக நின்றுதவம் மேன்மைபெறக்காணே. 41

## அகார உகார விபரம்

காணென்று சொன்னதொரு கருவைக்கேளு
கதித்தவுடல் சத்தியது பாசமாகும்
மானென்ற பசுதானு முயிரான சிவமாம்
மகத்தான பதிதானும் பராபரமாய்நிற்கும்
தானென்ற முப்பொருளு மொன்றாய்ச் சேர்ந்தால்
தன்மையுட னின்றபடி அச்சாரமாய்க்கேளு
நானென்ற சத்தியது உகாரமதுவாகும்
நடுவான அகாரமது சிவமதுவுமாமே. 42

ஆமப்பா அகாரமுட னுகாரமது சேர்ந்து
அசையாது பூரணமாய் விஞ்சையெனும்பொருளாய்
தாமப்பா யேகமய மானதொரு பொருளாய்
தருவான அஞ்செழுத்து மாறெழுத்து மதுவாய்
நாமப்பா சொல்லுகிறோ மெட்டெழுத்து மதுவாய்
நலஞ் சிறந்த நாடிகளுந் தத்துவமுமதுவாய்
காமப்பால் கசிந்தொழுகுங் காரணமுமதுவாய்
கரையில்லாப் போதமய மானதுவுந்தானே. 43

தானேதா னாயிருந்த தத்துவமு நீதான்
சகலகலை யானதொரு பிராணனுயிர் நீதான்
வீணேதான் திரிந்ததினால் பின்வருவதேது
மெய்யான பூரணத்தை விரும்பிமிக நில்லு
ஊனேதான் தானறிந்து உள்மகிழ்ந்துபாரு
உலகமது வேறல்ல தானுலகமாகும்
பூணேதான் மூலமதின் கனலைத்தூண்டி
போக்கான தத்துவத்தைப் போன்றிடவும்பாரே. 44

பாரப்பா தத்துவங்கள் தான்தீப்பத்தி
பகையான புகையடங்கி மாண்டுதானால்
நேரப்பா நின்றதொரு கமலந் தோன்றும்
நினைவாலே அக்கமலங் கண்டபோது
காரப்பா கமலமல ரமுதங் கொண்டு
கருணையுள்ள தீபமதைக் கண்டுபோற்றி
சாரப்பா சிவயோகத் தடங்கிநில்லு
சடாதார தெரிசனமுந் தான்தானாமே. 45

## ரேசக பூரக கும்பகம்

தானான காலதனைப் பூரணத்தாற்பற்றி
தன்மையுட னறிவதனால் சார்ந்து கொண்டு
மானான மண்மீதில் நீரு வாரும்
மகத்தான விண்மீதி லேருவாரும்
கோனான குருபீடந் தன்னில்நின்று
குணமான நெருப்பாறு மயிர்பாலத் தப்பால்
தேனான மதியமுர்த அருவிகண்டு
தெளியமன துறுதிதனைச் செப்புவோமே. 46

செப்புகிற விதமென்ன வென்றால்மைந்தா
செம்மையுடன் சொல்லுகிறேன் தெளிந்துகேளு
துப்புறவாய் நீயுமிந்த அகாரந் தன்னில்
துருவமுள்ள உகாரமதைக் கூட்டிமைந்தா
தப்பாமல் செபித்துவிடு நொடிக்குள்ளந்த
சதானந்தி மூலமதில் கனலோ சாடும்
அப்போநீ அதையறிந்து கொண்டு மைந்தா
அசையாமல் ஒட்டியான பந்தனம் பண்ணே. 47

பண்ணியந்த மூலஅனல் மேலே சாடி
பக்குவமாய் நின்றதுவே ரேஷகமதாகும்
துண்ணியந்த அனலோடித் தீப மதில்
துருவமுட னடங்குவது பூரகமதாகும்
தன்னிமையாக் கும்பகமே தென்றால்மெந்தா
சாதகமா இடகலைபின் கலையுங்கூடி
உன்னிடமா யடங்குவது கும்பகமதாகும்
உத்தசிவ யோகமது புத்தியுடன் பாரே. 48

## நூல் விபரம்

புத்தியுடன் கற்பமா யிரத்தைப் பாரு
புகழான தத்துவமா யிரத்தைப்பாரு
பத்தியுடன் பூரணமீ ராரு நூறும்
பதிவான காவியமா யிரத்தைப் பாரு
சித்தியுள்ள வகாரமா யிரத்தைப் பாரு
தெளிவான சவுமியசா கரத்தைப் பாரு
முத்தியுள்ள வயித்தியமா யிரத்தைந் நூறில்
முக்கியங்கள் ரெம்பவுண்டு முகித்திட்டோமே. 49

முகித்திட்டோம் சாலமீ ராறு நூலில்
மோடியங்கம் வினோதவகை முழுதுஞ்சொன்னோம்
பகுத்திட்டோம் வாதத்தில் கேடாகோடி
பக்குவமாய்ச் சூத்திரத்தி லக்கோயில்லை
வகுத்திட்டோந் தீட்சைவிதி பூசைவிதி தன்னை
வளமாகப் பார்ப்பவர்க்கு யெல்லாஞ்சித்தி
தொகுத்திட்டோம் வகைதோண மனுவிக்ஞானம்
சுருக்கியே ஆயிரமாய்ச் சென்னோபாரே. 50

## குருவருள் பெறுதல்

பார்க்கவென்று பலநூலுந் தேடிப்பார்க்க
பக்குவங்க ளில்லையடா வயதோகொஞ்சம்
மார்க்கமுடன் கொஞ்சவய தானாலென்ன
மகத்தான சற்குருவைத் தேடிப்பார்த்து
ஏர்க்கையுட னவர்மனதுக் கேற்க நல்ல
இன்பமுடன் தயவுவர நடந்தாயானால்
தீர்க்கமுடன் சத்திசிவ தீச்சைவைத்து
செம்மையுட னுதியந்தத் திறஞ்சொல்வாரே. 51

திறஞ்சொல் சகலகலை சேதியெல்லாம்
 தீர்க்கமுள்ள மவுனமதின் திறமுஞ் சொல்வார்
பறஞ்சொல்வார் பராபரத்தின் பதிவுஞ்சொல்வார்
 பதிவாக மவுனமதின் திறமுஞ் சொல்வார்
நிறஞ்சொல்வார் நிஷ்டையுட நேர்மை சொல்வார்
 நெஞ்சங்கள் தான்வலிக்க நிதியுஞ்சொல்வார்
கறஞ்சொல்வார் காயாதி கற்பஞ்சொல்வார்
 கண்மணியே மனதுவரக் கருதிக்கேளே. 52

கேழ்க்கையிலே நீசெய்த நன்மைப்பாகம்
 கிருபையுடன் சொல்லிடுவா ரப்போதானும்
வாழ்க்கையுள்ள தேகமடா வலுத்துப்போகும்
 மகத்தான புத்தியுமே சொலிக்க லாச்சு
தாழ்க்காமல் பதவியிலே மேவலாச்சு
 சதாகாலம் போதையுமோ தரிக்கலாச்சு
காக்கையிலே கால்வலுத்து நடக்கலாச்சு
 கதிரான தீபவொளி காணலாச்சே. 53

## நிஷ்டையி னிலையரிய

ஆச்சப்பா இத்தவமே பெற்றுக்கொண்டு
 அஷ்டமா சித்துவிளை யாடுமைந்தா
பேச்சப்பா ஒன்றுமில்லை மனதுறுதிவேணும்
 பெரியோரைக் கண்டுபதம் பணியவேணும்
நீச்சப்பா நிலையறிந்து கொள்ளவேணும்
 நிஷ்டையிலே மனதொடுங்கி இருக்கவேணும்
மூச்சப்பா முன்னிலையாய் நிறுத்திக்கொண்டால்
 மூவுலகுந் தன்வசமாய் நிறுத்தலாமே. 54

நிருத்தடா புருவமய்யம் பிடரியோரம்
 நீமகனே அப்பிடரி பிர்மபீடம்
கருத்துறவே அப்பிடரி பிடந்தன்னில்
 கமலமென்ற ஆயிரத்தெட் டிதழினுள்ளே
திருத்தமுள்ள பீடமடா மவுனபீடஞ்
 சிவசிவா மனோன்மணிசென் றிருக்கும்பீடம்
விருப்புமுள்ள பீடமதி னடுவி லேதான்
 மெஞ்ஞான தீபமடா விளங்கும்பாரே. 55

பாரடா இருகால்கொண் டொருகாலூணி
பக்குவமாய்ச் சென்றந்தப் பதியிலேகி
காரடா மனோன்மணியைக் கருத்தில்வைத்து
கருணையுடன் கண்டமதி லங்கென்றூணி
தேரடா மனந்தேறி வாசிபூட்டி
திருவாகி நின்றநிலை யதனுள்பாரு
மேரடா கிரிதீப வொளிதான் காணும்
மெய்யடா அந்தவொளி யேகமாமே. 56

ஏகமய மானதொரு தீபந்தன்னை
இருதயத்தில் மனதறிவா யிருந்துகொண்டு
ஆகமுடன் புருவநடுச் சுழினை மீதில்
அந்தரங்க மாகயிரு கால்கள் நாட்டி
பாகமுட நீயிருந்து பதியைப்பாரு
பருதிமதிச் செயலதனால் சுடர்தான்தோன்றும்
தாகமுடனச் சுடரைக் கண்டாயானால்
தன்தேகஞ் சுடரொளிபோ லாகுந்தானே. 57

தானவனே தானாக யிருந்துகொண்டு
தனிவான மூலமதின் கனலைத்தூண்டி
மோனமுட னக்கனல் கொண்டாராதாரம்
முத்திகொண்ட நடுவரையா மேலாதார்ரம்
ஏனமுட னாதார மீராருக்கும்
ஏகபரா பரமான ஏகநாதன்
கோனவனாய் நின்றுஅவ ராடுங்கூத்து
குண்டலியி னந்தியிடங் கூர்ந்துபாரே. 58

## ஆராதாரம்

பாரப்பா நந்தியு மரபுகேளு
பாரான பிருதிவியா மூலாதாரம்
நேரப்பா அம்மூலா தாரந்தன்னில்
நிலைத்துநின்ற கணபதிவல் லபையுங்கூடி
பேரப்பா கொண்டஓங் காரந்தன்னில்
பெரிதான கம்பமதாய் வளர்ந்துநின்றார்
ஆரப்பா அறிவார்கள் ஓங்காரரூபம்
அரகரா ஓங்கார மாதாரமாமே. 59

ஆமப்பா ஆதார மதின்மேல் பார்க்க
அருமையுட னின்றிலங்குஞ் சுவாதிட் டானம்
நாமப்பா சொல்லுகிறோம் நாற்கோண வீட்டில்
நான்முகனுஞ் சரஸ்வதியும் நன்றாய்க்கூடி
தாமப்பா நகாரமெனும் விஞ்சைதனைவோதி
சகலஉயிர் பயிர்முதலாய் திட்டித்தேதான்
சோமப்பா திரிகோண நிஷ்டைகூடி
சென்றிரிந்தார் பிர்மமெனுந் தெய்வந்தானே. 60

தானென்ற பிர்மாவு மனந்த காலம்
தவசிருந்து உயிர்பயிருக் காதாரம்வேண்டி
கோனென்ற திருமாலைத் தேடிப்பார்த்து
குவிந்தெளும்பு மிருகோணம் பூரகத்திற்சென்று
ஊனென்ற மாலவனைக் கண்டு அந்த
உயிர்பயிருக் காதார மூட்டவேண்டி
தேனென்ற அப்புதனைத் திருமால் நல்கி
சிறந்துநின்ற பயிருயிர்கள் செனித்தவாரே. 61

வாரான உயிர்பயிருக் காதாரமாகி
மகிழ்ந்திருந்து ருத்திரரைக் கண்டுபேசி
நேராக அக்கினியும் வாய்வும் வேண்டி
நெடுவானில் தவசிருந்தார் நேர்மையோடே
பேரான அக்கினியும் வாய்வுங் கூடி
பேரண்டந் தனிலிருந்து பிறந்துதப்பா
தேராத உயிர்பயிருஞ் செழிப்பதாகி
சிவசிவா சதாசிவத்தில் தெளிந்தார்பாரே. 62

தெளிந்துமன மொன்றாகிப் பூரணமாய்நின்று
சிவசரா சரமெல்லாஞ் சிவனை னோக்கி
களிந்துமனம் போகாமற் காக்கவென்று
கருணையுள்ள பூரணத்தை வணங்கிக்கொண்டு
அளிந்து அந்தப்பதியான பிரமபீடம்
அமுர்தநிலை யானதொரு அண்டபீடம்
குளிர்ந்தஇத ழாயிரமாய் குவிந்தபீடம்
குருவான குண்டலியின் பீடந்தானே. 63

தானென்ற தத்துவமாம் பிர்மபீடம்
    சகலகலைக் கியானபூ ரணமாம்பீடம்
கோனென்ற குருபீடம் விந்துவட்டம்
    குறையாத ஓங்காரம் நந்திக்கம்பம்
வானென்ற கம்பனுனி யதனில்பாரு
    மகத்தான தீபமதி னொளியே வீசும்
நானென்ற அகம்போக்கித் தானாய்நின்றால்
    நல்லபரி பூரணமு நண்ணுந்தானே. 64

தானவனே தானாகத் தன்மைபூண்டு
    சகலகலை யானபூ ரணத்தைப்பாரு
நானவனாய் நின்றநிலை தன்னைப்பாரு
    நாதாந்த சத்தியுட நயனம்பாரு
வானவர் கோனமறியாத நயனதீபம்
    மகத்தான பிடரியென்ற மார்க்கமாகும்
கோனவனார் குடியிருந்த பிடரிதன்னில்
    கொள்கிநின்றார் சனியனெனும் பகவான்றானே. 65

## சனிபகவான் குணம்

தானென்ற சனிபகவான் பிடரிமேலே
    தானேறி நின்றுகொண்டு தலைகால்வேறாய்
கோனென்ற அறிவுதனை நிலைக்கொட்டாமல்
    குடிலமென்ற குடிலமெல்லாங் கூறாய்ச்செய்து
நானென்ற ஆணுவமே நிலைக்கப்பண்ணி
    நன்னையென்ற வெளிகளெல்லா மிருளாய்க்காட்டி
கானென்ற கபடமதுக் கேதுவாய்நின்று
    கரையேற வொட்டாமல் கருதுவானே. 66

கருதுகின்ற சனிபகவான் பிடரிமேலே
    கவிழ்ந்து நின்ற பாசமதை களையவேண்டி
சுருதிபொரு ளானதொரு நாதன்பாதம்
    தொழுதுமன துறுதியினால் துகளறுத்து
நிருதியெனுஞ் சாபமது நிவர்த்தியாக
    நீமகனே சொல்லுகிறே னன்றாய்க்கேளு
பருதியெனும் ரவிதனையே நமஷ்கரித்து
    பாங்குடனே ஓம் கிலிசிவவென்று சொல்லே. 67

சொல்லிடுவாய் தினம்நூத்தி யிருபத்தெட்டு
சோர்வின்றி மண்டலமே செபித்தாயாகில்
வல்லிடும்பாய் நின்றசனி மாறிப்போகும்
மகத்தான மந்திரமுஞ் சித்தியாகும்
கள்ளமனக் கசடகத்திக் கருணைகூர்ந்து
கற்பூர தீபவொளி கடாட்சத்தாலே
செல்லுமன துறுதியினால் புத்திதோன்ற
சிங்குசிவா அங்கென்று திறமாய்நில்லே. 68

திறமாக மண்டலமே செபித்தாயாகில்
தீர்க்கமுடன் புத்தியது திறமாய்க்காணும்
வறமான புத்தியது வளர்ந்துகொண்டு
மகத்தான மந்திரங்க ளெல்லாஞ் சித்தி
பறமான் மந்திரங்கள் சித்தியானால்
பாலகனே அஷ்டசித்துங் கைக்குள்ளாகும்
திறமான தீபவொளி மயங்கா தய்யா
சிவமான தேகமது மந்திர சித்தாச்சே. 69

## சிவதீட்சை

சித்தான சிவதீட்சை மைந்தாகேளு
சிவசிவா முதல் தீட்சை சிங்சிவ்வென்று
பத்தான அகாரபதி நடுவேநின்று
பாலகனே மண்டலமே செபித்தாயானால்
சுத்தான ஆங்காரந் தொலைந்தேபோகும்
துன்பமென்ற தீவினைகள் தூர ஓடும்
வத்தாமல் பாக்கியங்கள் வளர்ந்துநிற்கும்
மார்க்கமுடன் ரெண்டான தீட்சைகேளே. 70

கேளப்பா ரெண்டான தீட்சை மார்க்கம்
கெம்பீர மாகஅங் அம்மென் றோது
நாளப்பா மண்டலமே ஓதினாக்கால்
நல்வினையுந் தீவினையும் நாடாதோடும்
வாளப்பா வினைகள்ரெண்டு மடங்கித்தானால்
மகத்தான மனது பூரணமாய்க்காணும்
ஆளப்பா அந்தமன துறுதியாலே
அவையடக்கம் மூன்றான தீட்சைகளே. 71

தீட்சையிலே மூன்றான தீட்சைமைந்தா
திறமாக அம்சிங் கென்றுசொல்லு
காட்சியில்லாக் காட்சியது கண்ணில்காணும்
கருணையுள்ள வாசியது களறாதய்யா
பேச்சிலுன்னைப் பெரியோர்கள் புகழ்ந்துகொள்வார்
பேருலகில் நீயுமொரு சித்தனாவாய்
தாச்சியில்லாச் சிவயோகந் தானேதங்கும்
தன்மையுட னாலான தீட்சை ஓதே. 72

ஓதுவது சுழிமுனையில் வாசிபூட்டி
ஒதுங்காமல் சுடரதிலே சிங்வங்கென்று
நீதியுடன் செபித்துவிடு மண்டலந்தானப்பா
நேர்மையுடன் பொசித்ததெல்லா ருசியதாகும்
வாதுகள்தான் செய்து நிற்குந் தாதுவெல்லாம்
மயங்காம லறிவுபூ ரணமாய்நிற்கும்
ஆதியெனுஞ் சதானந்தி கமலமீதில்
அருள்பெருக நீயிருந்து அருளைப்போற்றே. 73

போற்றுவது அஞ்சான தீட்சைகேளு
புண்ணியனே சொல்லுகிறேன் அம்றீங்கென்று
தோற்றமுடன் மண்டலமே செபித்தாயாகில்
சிவசிவா பஞ்சகர்த்தா சித்தியாகும்
நாற்றிசையுங் கீர்த்திபெறக் கருணையுண்டாம்
நாதாந்த சின்மயமே நடுநின்றாடும்
பார்த்திபனே பரமகயி லாசந்தோற்றும்
பக்குவமாய் யாறான தீட்சைபாரே. 74

பாரப்பா ஆறான தீட்சைகேளு
பத்தியுடன் சொல்லுகிறேன் நங்கிலியென்று
நேரப்பா நின்றநிலை தன்னில்நின்று
நினைவாக மண்டலமே செபித்தாயாகில்
ஆரப்பா அறிவார்க ளாறாதாரம்
அப்பனே சடாதாரக் கோர்வைதோன்றும்
பேரப்பா கொண்டதொரு ஞானதீபம்
பிசகாது தன்னிலையிற் பேணிப்பாரே. 75

பார்க்கையிலே பதிவான யேழாந்தீட்சை
பத்தியுடன் அய்யும்சிவ் வென்றுசொல்லி
ஏர்க்கையுடன் செபித்துவிடு மண்டலந்தான்
ஏகாந்தக் கருணைவிழி சோதிதோற்றும்
மார்க்கமுள்ள மதியமுர்த மருவிபாயும்
மைந்தனே அந்தமுர்தம் மவுனரசமாகும்
தீர்க்கமுடன் அந்தரசங் கொண்டாயானால்
சிவயோகத் தீர்க்கமது புனிதமாமே. 76

ஆமப்பா தீட்சையிலே எட்டாந்தீட்சை
அரகரா சொல்லுகிறோம் உம்சவ்வென்று
நாமப்பா சொல்லுகிறோம் தினமுன்னூறு
நன்மையுடன் செபித்துவிடு மண்டலந்தானப்பா
தாமப்பா மண்டலமே செபித்தாயானால்
தவமான அஷ்டசித்துக் குருதியாகும்
காமப்பால் கானர்பால் கசடுநீங்கும்
கயிலாச நிலமைதனைக் காட்டுந்தானே. 77

தானென்ற ஒன்பதாந் தீட்சைதன்னை
தன்மையுடன் சொல்லுகிறோம் ரம்லம்மென்று
வீணென்று பாராமல் மண்டலமே செபித்தால்
வேதாந்த சாரமெல்லா மெய்யிற் தோற்றும்
தேனென்று அமுர்தரச தேகமாகும்
திகம்பரமு மம்பரத்தின் தெரிசனமுமாகும்
ஊனென்ற தேகமது சித்தியாகும்
உண்மையுள்ள மவுனமது உறுதியாமே. 78

உறுதியுள்ள தீட்சையது பத்தாந்தீட்சை
ஒருமனதாய்ச் சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
கருதுமன துறுதியினால் கம்கிலியென்று
கலங்காமல் மண்டலமே செபித்தாயாகில்
பருதிமதி சுடரதுவும் பணியுமைந்தா
பரமகயி லாசவெளி தன்னிலேதான்
சுருதியுள்ள தீபவொளி சுடரைக்காண்பாய்
சுந்தரம்போ லொன்றுமுதல் பத்தைப்பாரே. 79

பாரப்பா சிவதீட்சை ஒன்றுமுதல்பத்து
பதிவாக நீயிருந்து செபித்தால்மைந்தா
ஆரப்பா உனக்கிடு சொல்லப்போரேன்
அரகரா ஆதியந்த மருளேவாய்க்கும்
நேரப்பா நின்றகயி லாசந்தோற்றும்
நிஷ்டையிலே மனதொடுங்கி அறிவிற்சேரும்
தேரப்பா மனந்தேறிச் சத்திதீட்சை
சிவயோக புனிதமதைச் செப்புவேனே. 80

சத்தி தீட்சை

செப்புவேன் சத்தியுட தீட்சைமார்க்கம்
சிவசிவா ஓம்அரி யென்றேயோதி
துப்புரவாய் நீயிருந்து குருவைப்போற்றி
துருவமுடன் மண்டலமே செபித்தாயாகில்
தப்புகிறே னென்றோடும் சுரதோசங்கள்
சாங்கமாய்த் தன்தேகஞ் சித்தியாகும்
சிற்பரத்தின் தேகமது சித்தியாச்சு
சிவாயகுரு பாதமதிற் சேரலாமே. 81

சேரப்பா ரெண்டான தீட்சைகேளு
சிந்தைமன தொன்றாக உம்அங்கென்று
நேரப்பா புருவநடுக் கமலமீதில்
நீயிருந்து மண்டலமே செபித்தாயாகில்
வீரப்பா கொண்டதொரு மூலந்தன்னில்
வேதாந்தத் தீயதுவு மெய்யிற்சாடும்
காரப்பா மூலமென்ற நந்திகாணும்
கண்ணுமனக் கண்ணதினால் கருத்தாய்ப்பாரே. 82

கருத்தான தீட்சையிலே மூன்றாந்தீட்சை
காரணமாய்ச் சொல்லுகிறேன் நசிசிம்மென்று
திருத்தமுடன் மனதுறுதி யாகமைந்தா
செம்மையுடன் மண்டலமே செபித்தாயாகில்
வருத்தமென்ற மரலியவன் அகன்று போவான்
மகத்தான தீவினைகள் மாண்டுபோகும்
நெரித்தமர்க்குள் விளங்குகின்ற தீபந்தோணும்
நேரான தீபமதா லெல்லாஞ்சித்தே. 83

சித்தான தீட்சையடா நாலாந்தீட்சை
சின்மயத்தி னருளாலே செப்பக்கேளு
சுத்தான சுத்தல்ல துருவங்காணும்
துருவமுடன் ரம்மென்று லம்மென்றுந்தான்
பத்தான நடுமனையில் மனதைநாட்டி
பக்குவமாய் மண்டலமே செபித்தாயாகில்
முத்தான மூலஅனல் சித்தியாகும்
மூதண்ட தெரிசனையா முழுதும்பாரே. 84

பாரப்பா மனதுறுதி யாகநீயும்
பத்தியுட னைந்தான தீட்சைதன்னை
ஆரப்பா அறிவார்கள் ஓம்றீங்கென்று
அருமையுடன் மண்டலந்தான் செபித்தாயாகில்
நேரப்பா நின்றதொரு பஞ்சகர்த்தா
நிசமாக உனதிடத்தில் நிலையாய்நிற்பார்
தேரப்பா மனந்தேறிப் பூரணத்தைப்பாரு
சிவசிவா பூரணத்தால் காரணத்தைநோக்கே. 85

நோக்கப்பா தீட்சையிலே ஆறாந்தீட்சை
நுன்மையுடன் அம்கிலி இங்கென்றேதான்
தாக்கப்பா தன்னிலையில் மனதுறுதியாக
தன்மையுடன் சதாகாலஞ் செபித்தாயாகில்
வாக்கப்பா மங்காது சித்தியாகும்
வரிசையுள்ள ஆறுதலம் வளமாய்க்காணும்
நாக்கப்பா நுனிநாக்கு அண்ணாக்கூடே
நாதாந்த சிரோமணியை நாடிநில்லே. 86

நில்லப்பா நிலைதனிலே நினைவாய்நின்று
நேசமுடன் ஏழான தீட்சைகேளு
சல்லப்பா நினையாமல் ஓம்நம்மென்று
தன்மையுடன் மண்டலமே செபித்தாயாகில்
வில்லப்பா விசைபோலே வாசியேறும்
வேதாந்தப் பொருள் தனிலே மேவிப்பாரு
உள்ளப்பா ஒருமனதாய்ப் பார்த்தாயானால்
உன்தேகம் விளக்கொளிபோ லுண்மையாமே. 87

உண்மையுடன் தீட்சையிலே எட்டாந்தீட்சை
ஓதுவது ஓம்சும் சுவ்வென்றேநீ
தன்மையுடன் தன்னருளைத் தியானம் பண்ணி
சதாகாலம் உதையமதில் செபித்தாயாகில்
நன்மையுள்ள திசைவாய்வு அகலாமல்தான்
நடுவான பூரணத்தில் நாட்டமாகும்
தின்மையுள்ள தீவினைக ளகலத்தள்ளும்
சிவசிவா பூரணத்தில் சென்றுநில்லே. 88

நில்லடா நிலையான ஒன்பதாந் தீட்சை
நினைவாகச் செபிப்பதற்கு நிதானங்கேளு
சொல்லடா ஒன்றுமில்லை மைந்தாமைந்தா
சுருதியுடன் ரம்ரங் யம்மென்றேதான்
சொல்லடா மண்டலமே செபித்தாயாகில்
தேகவச்சிர காயமதாம் நோயோயில்லை
தள்ளடா சுகதுக்கம் ரெண்டுங்கண்டு
சற்குருவைப் போற்றிமன தறிவாய்நில்லே. 89

அறிவான தீட்சையடா பத்தாந்தீட்சை
ஆரறிவார் தீச்சையிலே யனந்தமுண்டு
குறியான தீட்சையிது பிறிங்சும்மென்று
குருவான பதிநோக்கி மைந்தாநீயும்
நெறியாக மண்டலமே செபித்தாயாகில்
நிலையான மந்திரங்கள் சக்கரங்கள்
பொறியான தேவதைகள் சகலத்துக்கும்
பொருந்திநின்ற சாபமெல்லாம் போகும்பாரே. 90

பாரப்பா பதினோராந் தீட்சைதன்னை
பக்குவமாய் சுழிமுனையில் டம்நம்மென்று
நேரப்பா நின்றகுறி தவறாமல்தான்
நிச்சயமாய் மண்டலமே செபித்தாயாகில்
பேரப்பா அண்டபதந் தன்னிலேதான்
பேசாத நாதவொலி காதில்கேட்கும்
ஆரப்பா உனக்குநிகர் சொல்வேனய்யா
அம்புவியில் நீயுமொரு சித்தனாமே. 91

### சிவசத்தி தீட்சை

சித்தனாய்ப் போவதற்கு இன்னமொன்று
செப்புகிறேன் சிவசத்தி தீட்சைதன்னை
முத்திபெற உதயமதி லங்கென்றேநில்
மோனமுடன் மாலையிலே உங்கென்றேநில்
பத்தியுடன் கலைதவறா துருவே செய்தால்
பாலகனே உன்தேகம் வாலையாகும்
புத்தியுட னந்திசந்தி நாதவிந்தை
பூரணமா யுருவேத்திப் பூரணத்தைக்காரே. 92

காரப்பா சிவசக்தி தீட்சை சொன்னோம்
கருணையுடன் செபிப்பதற்குக் காலஞ்சொன்னோம்
நேரப்பா நிற்பதற்கு நினைவு சொன்னோம்
நேரான பூரணத்தின் பதிவுஞ்சொன்னோம்
பேரப்பா பெற்றதொரு ஆறாதாரம்
பெருமையுள்ள நிலமதுவும் பேணிச்சொன்னோம்
சாரப்பா வாசிபூ ரணமுஞ்சொன்னோம்
சதாபோத மானதொரு நிலைசொன்னோமே. 93

சொன்னமொழி தவறாம லின்னூல்தன்னை
சுத்தமுடன் தானெடுத்துப் புத்திகொண்டு
விண்ணதனைத் தானோக்கிப் பூரணத்தைநன்றாய்
விபரமுடன் ஆதிதொடுத் தந்தம்பாரு
புண்ணியனே ஆதிதொடுத் தந்தம்பார்த்தால்
போக்குவரத் தானதொரு புதுமைகாணும்
தன்னருளே தனதாகத் தானேநின்று
தன்மயமாஞ் சற்குருவின் தியானங்கேளே. 94

### குரு தியானம்

கேளப்பா குருதியானஞ் சொல்வேன் மைந்தா
கேசரத்தில் பூரணமாய் சிம்சிங்கென்று
நாளப்பா தவறாம லோர்நாள் போலே
நன்றாகச் சுகாசனமா யிருந்துகொண்டு
மேலப்பா விந்துநிலை யதனைநோக்கி
மேன்மைபெற ரேசகபூ ரகமும்பண்ணி
தாளப்பா நடுமனையா முக்கோணத்தில்
சார்ந்திருந்து புருவநடுப் பிடரிபாரே. 95

### அபமிருத் தகல

பார்க்கையிலே பரமவொளி தன்னிலேதான்
பரமகுரு பருதிமதி போலேமைந்தா
ஏர்க்கையுட னிருதயத்தில் தோணும்பாரு
என்ன சொல்வேன் மெஞ்ஞான தீபந்தீபம்
சேர்க்கையுட னத்தீபச் சுடரிலேதான்
சிவசிவா பூரணமாய்த் திறமாய்நின்று
ஆக்கைதனைத் தீபமதி லாகுதியே செய்தால்
அரகரா அபமிருத்து அகன்றுபோமே. 96

போமப்பா அபமிருத்து அகன்றுபோச்சு
பூரணமாய்த் தேகமது சித்தியாச்சு
நாமப்பா வென்றசுகந் தணிந்துநல்ல
நலமாகச் சிவயோகம் புனிதமாச்சு
ஆமப்பா சிவயோகம் புனிதமானால்
அப்பனே பிரமநிஷ்டை யதனைக்கேளு
ஓமப்பா பூரணமாக் கேசரியை நோக்கி
உத்தசிவ சக்தியைநீ உகந்துகாரே. 97

### பிரம்ம தெரிசனம்

காரப்பா புருவநடுப் பிடரிதன்னில்
கருணைவளர் சகஸ்த்திரமாங் கமலமீதில்
பாரப்பா பூரணமாய் மனதுகொண்டு
பத்தியுடன் தான்பாரு ஞானதீபம்
நேரப்பா நின்றிலங்கும் சோதிபோலே
நேர்மையுடன் பூரணமாய் நின்றுபாரு
சாரப்பா தன்மையுடன் நங்மங்கென்று
தன்மையுடன் நூறுருவில் சித்தியாச்சே. 98

சித்தியான பிரம்மதெர் சனையுமாகும்
சிவசிவா பரஞான கேசரியின்மகிமை
பித்தான பித்துக்கள் விலகுமைந்தா
பேரின்பஞ் சித்தின்ப மிரண்டுந்தோன்றும்
பத்தியுடன் ரெண்டுநிலை கண்டுமைந்தா
பக்குவமா யந்தநிலை பார்த்தாயாகில்
சுததனாய் முத்தனாய் சிவயோகியாகி
தொல்லுலகில் நீயுமொரு குருவாகுவாயே. 99

குருவான பெரியோர்க்கு மனதுவர நடந்தால்
குணமான மனதையவர் கூர்ந்து பார்த்து
உருவான காயமதுக் குறுதிசொல்லி
உண்மையென்ற பொருள்களையுமுகந்து காட்டி
திருவான வாசியுட திறமுஞ்சொல்லி
சிந்தைமன தொன்றாக நிலையுங்காட்டி
தருவான தேனுடனே கற்பஞ்சொல்லி
தன்மையுடன் மதியொடுங்குஞ் சார்புஞ்சொல்வார். 100

### விஷ்ணு நிஷ்டை

சார்வாக இன்னமொரு நிஷ்டைகேளு
தன்மையுடன் பூரணமாய் மங்சிங்கென்று
நேர்வாக ஐம்புலனை யடக்கிமைந்தா
நெறியான குறியறிந்து கனலைத்தூண்டு
சீராக அக்கனல் கொண் டுருமையாக
சிவசிவா பூரணமாய்ச் சிவயோகத்தில்
பேராக நின்றதினால் மைந்தா மைந்தா
பெரியமால் தெரிசனையாம் பேணிப்பாரே. 101

பேணிப்பா ரவரடியில் தெண்டம்பண்ணி
பிரியமுடன் மானதமாய்ப் பூசித்தாக்கால்
வாணிப்பா ரமுர்தமது ஈவார்மைந்தா
மைந்தனே அந்தமுர்தங் கொண்டாயானால்
ஆணிமாத் தந்தநுனி போலாந்தேகம்
அப்பனே அமுர்தரச தேகமாச்சு
ஊணிப்பா ரமுர்தரச தேகமென்றால்
உன்தேகம் விளக்கொளிபோ லுண்மையாமே. 102

### உருத்திர தியானம்

உண்மையென்ற ருத்திரரைத் தியானிக்கக்கேள்
ஒருமனதாய் மனதுகந்து சிங்வங்கென்று
தன்மையுடன் சன்னதியை நோக்கிமைந்தா
தாயான புருவமதிற் சார்ந்து நின்றால்
நன்மையுடன் ரவிமதிபோல் ருத்திரமூர்த்தி
நாமூன்று கலையுடனே நடுவேநிற்பார்
நுண்மையுட னவர்பதத்தைப் பூசித்தாக்கால்
நீடுாழி காலமொரு நாளாம்பாரே. 103

### மயேஸ்வர நிஷ்டை

பாரப்பா மயேஸ்பரத்தின் தியானந்தன்னைப்
பாலகனே மனதுகந்து வங்யங்கென்று
நேரப்பா நின்றநிலை யதுக்குமேலே
நெருப்பாரில் மயிர்ப்பால மீதில்சென்றால்
வேரப்பா வொன்றுமில்லை நானுமில்லை
வேதாந்த தேகமது கற்பூரதேகம்
ஆரப்பா அறிவார்கள் கற்பூரதேகம்
ஆதியென்ற தேகமடா சதாசிவனுமாமே. 104

### சதாசிவ நிட்டை

ஆமப்பா சதாசிவத்தின் தியானங்கேளு
அரகரா பூரணமாய் யங்நங்கென்று
தாமப்பா நிலையறிந்து வாசிபூட்டி
தன்மையுடன் ரேசகபூ ரகமும்பண்ணி
வாமப்பால் மதிநிறைந்த கும்பகத்தில் நின்று
மகத்தான கேசரியின் தீபம்நோக்க
சோமப்பால் நிறைந்தமனோ மணிதன்னாலே
சோதியுள்ள சதாசிவனுந் துலங்கும்பாரே. 105

பார்க்கையிலே புருவநடு விந்துக்குள்ளே
பதிவான மனோன்மணியுஞ் சதாசிவனுங்கூடி
ஏர்க்கையுடன் திசநாத வடிவாய்நின்று
என்மகனே தீபவொளி போலேகாணும்
சேர்க்கையுடன் அத்தீபங் கண்டபோது
சிவயோக மானதொரு நிஷ்டைகூடி
தீர்க்கமுடன் மனதுதனில் நினைத்தவண்ணம்
சிவாயகுரு கிருபையினால் சித்தியாமே. 106

### பருதிமதி சுடர்

சித்தியுள்ள மூலமடா ஆதாரமாகும்
சிவசிவா ஆதாரம் நந்திக்கம்பம்
பத்தியுள்ள கம்பமடா ஓங்காரந்தான்
பரமான பிர்மமடா யேகஷத்து
முத்தியுள்ள வஸ்துவைத்தான் தியானஞ்செய்ய
மூலமென்ற கணபதிதான் பிரகாசிப்பார்
சுத்தடு னவர்பதமே கெதியென்றெண்ண
தோணுமடா ஆதாரந் துருவமாமே. 107

துருவமென்றா லச்சுழினை நடுக்கமலத்தில்
துலங்குகின்ற பருதிமதி சுடரைக்காண
பருவமுடன் அங்கிலிவா வென்றுஓதப்
பருவமாய் மதிதானும் பிரகாசிக்கும்
புருவமுடன் அடிமதியைக் கண்டபோது
புத்தியுடன் மனதறிவா லங்லங்கென்று
அருவமுடன் மதிதானும் ரவியிற்சேரும்
அந்தரவி காணுதற்கு அங்உங்கென்னே. 108

எண்ணப்பா நூறுருவில் ரவிதான்காணும்
இன்பமுள்ள ரவிதனையே கண்டபோது
நண்ணப்பா முன்னிலையாய் ரங்ரங்கென்று
நாட்டமுடன் நடுவணையைப் பிடித்து மாரு
விண்ணப்பா நிலையான ரவிதான் சென்று
மெஞ்ஞானச் சுடர்தனிலே சேரும்பாரு
உண்ணப்பா அச்சுடரை வாசிகொண்டு
ஊடுருவிப் பார்த்ததினா லுண்மையாமே. 109

ஆமப்பா முச்சுடரின் தெரிசனமுஞ் சொன்னோம்
அருள்பெருகும் பூரணத்தி னருமையாலே
நாமப்பா சொன்னமொழி பெத்துக்கொண்டு
நாதாந்த மனோன்மணியின் தெரிசனத்தைக்கேளு
தாமப்பா புருவநடுச் சுடரில்நின்று
தன்மையுடன் ஓம்சிறீங்றீங் கென்றூது
வாமப்பா மதிநிறைந்த பூரணியின்கிருபை
மகத்தான போதமய மாகும்பாரே. 110

## பரமகுரு தியானம்

பார்க்கையிலே பரமகுரு தியனாங்கேளு
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் புத்தியாக
ஏர்க்கையுட னுதையாதி காலந்தன்னில்
இன்பமுடன் சரீரமதைச் சுத்திசெய்து
மார்க்கமுடன் பூதியுத் வளமாய்ப்பூசி
மைந்தனே சுகாசனமா யிருந்துகொண்டு
தீர்க்கமுடன் புருவநடுக் கமலமீதில்
சிவசிவா மனதுபூ ரணமாய்நில்லே. 111

நில்லாந்த நிலைதனிலே நின்றுமைந்தா
நிச்பயமாய் லிங்கிலிசிம் மென்றுஓது
சொல்லந்த மானகுரு நாதன்றானும்
சுடரொளிபோ லிருதயத்தில் தோன்றும்பாரு
நல்லதொரு நாதாந்தச் சுடரைக்கண்டால்
நந்தியென்ற சோதிவெகு சோதியாச்சு
சொல்லந்தச் சோதிதனைக் கண்டால்மைந்தா
தீர்க்கமுட னட்டசித்துஞ் சித்தியாமே. 112

**வயிரவ தியானம்**

சித்தியுள்ள வயிரவ தியானங் கேளு
தீர்க்கமுடன் சிங்சிம் அங் கிலி யென்றோதி
மத்தியுள்ள குருபதியில் நின்றாயானால்
மூக்கமுடன் வயிரவரும் பிரகாசிப்பார்
பத்தியுட னவர்பதத்தைத் தொண்டுபண்ணி
பாலகனே மானஞ்தமாய்ப் பூசை செய்தால்
எத்திசைக்குங் காவலவ னாகியுந்தன்
இருதயத்தில் நினைத்தவண்ண மெய்தும் பாரே. 113

**ஷண்முக பூசை**

பாரப்பா சண்முகனார் பூசைகேளு
பத்தியுடன் முக்கோணம் பதிவாய்ச் செய்து
நேரப்பா அறுகோணந் தன்னிலேதான்
நிசமான சடாட்சரத்தை நன்றாய்ப்போடு
காரப்பா அதனிடையின் வெளியிலேதான்
கருணையுடன் சரவணபவா வென்றேதான்
சேரப்பா அட்சரத்தை நாட்டிக்கொண்டு
சிவசிவா நடுவொளியில் விந்துபோடே. 114

போடப்பா விந்து நடு ஓங்காரந்தான்
புத்தியுடன் தானெழுதி அதனுள்மைந்தா
நாடப்பா ஏகமென்ற சுழியைப்போட்டால்
நன்மையுள்ள சக்கரமுஞ் சித்தியாச்சு
வீடப்பா பிலப்பதற்கு சக்கரத்தைச்சுத்தி
விருத்தமென்ற வளையமடா மூன்றுபோடு
கோடப்பா கீறி நன்றாய்க் கோட்டைபோட்டு
குறிப்பாக நால்வாச லிட்டுக்கேளே. 115

கேளப்பா வாசலிற் தேவதையைக்கேளு
கீழ்வாசலில் பிரமனுட பீஷம்போடு
தாளப்பா தென்வாசல் மாலின்பீஷம்
தயவான மேல்வாசல் ருத்திரபீஷம்
வாளப்பா வடவாசல் மயேசன் பீஷம்
மைந்தனே வாசலிலே தேவதைகள்நாட்டி
ஆளப்பா சதாசிவன்போல் நீயிருந்துகொண்டு
அன்பாகச் சக்கரத்தைப் பூசைசெய்யே. 116

செய்யப்பா பூசைவிதி தன்னைநன்றாய்
செப்பமுடன் செய்வதற்குத் திருவைநோக்கி
கையப்பா கால்முகங்கள் சுத்திசெய்து
கருணைபெற விபூதியுத் தளமாய்ப்பூசி
வையப்பா சக்கரத்தைப் பீடமீதில்
மார்க்கமுடன் தானிருத்தி மலர்கள்தூவி
மெய்யப்பா தூபமொடு தீபஞ்செய்து
வேதாந்தப் புருவமதில் சிம்மென்றுநில்லே. 117

நில்லப்பா மனதறிவால் வணக்கமாக
நினைவாகப் பால்பழமு வர்க்கத்தோடு
உள்ளப்பா சடாட்க்ஷரமு மாகவேதான்
ஓமெனவே சண்முகர்க்குப் பூசைசெய்து
சொல்லப்பா மூலமென்ற அக்னியினாலே
சிவசிவா புருவநடுக் கமலம்நோக்கி
நல்லப்பா நல்மனதாய் நோக்கமானால்
நாதாந்த சண்முகனார் தெரிசனையாம்பாரு. 118

பாரப்பா சண்முகனார் வடிவேல்கொண்டு
பத்தியுட னுனதிடத்தில் பதிவாய்நிற்பார்
நேரப்பா உன்னிடத்தில் முருகன்றானும்
நேர்மையுட னின்றதினால் காலனணுகாது
ஆரப்பா உனக்கீடு அட்டதிசை வெல்லும்
அட்டாங்க யோகமதுக் கடிதானாகும்
காரப்பா சண்முகசக் கரத்தைமைந்தா
கருவாகப் பூசித்துக் கடாட்சமதாய்நில்லே. 119

நில்லடா நிலைதனிலே நின்றுகொண்டு
நேசமுடன் பாசமதை நிவர்த்திசெய்து
செல்லடா மலைகளிலே சஞ்சாரம்பண்ண
திறமான கருமானஞ் சொல்வோமைந்தா
உள்ளடா அகாரமதை உருவேசெய்து
உருமையுடன் பூசைபண்ணி உகந்துகொண்டால்
கல்லடா கள்ளமனங் கசிந்துநல்ல
கனியான கனியதுபோற் கனியும்பாரே. 120

கனிந்தமன துருதியினால் மைந்தாநீயும்
கால்விரசு கொண்டுமனக் கண்ணினாலே
துணிந்துவரை சென்றுவலம் வந்துநீயும்
துருவமென்ற மலைகளைநீ சுத்திப்பார்த்து
அணிந்ததொரு ஆதிசிவ தியானத்தாலே
அம்பரமா மேரினுட அடிதான்தோற்றும்
பணிந்துநின்ற அடிவாரந் தன்னிலேதான்
பத்தியுடன் பத்திகொண்டு பதிவாய்க்காரே. 121

## வெண் சாரை கற்பம்

கார்ப்பதுதா னெப்படிநீ யென்றுகேட்டால்
கருணையுடன் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
கூர்ப்பரிந்து குருபதியில் குருவைக்கண்டு
குணமான அங்குடனே அம்மென்றாக்கால்
நேர்ப்புடனே சயிலகிரி தன்னிலேதான்
நிசமான சாரைவெண் சாரைதானும்
தாப்புடனே வருகுமடா வரும்போதென்னை
தனித்திருந்து சாரைமய்யம் பிடித்திடாயே. 122

பிடித்திடவே சிவசிவா வென்றுநீயும்
பிரியமுடன் செடத்தினுள்ளே செலுத்தினாக்கால்
கடுத்தநீர் வாய்வுடனே குன்மந்தீரும்
காலசதி மேலசதி காணாதோடும்
அடுத்ததொரு கண்ணெரிவு கபாலக்குத்து
ஆகாத பீனிசமு மகன்றுபோகும்
முடித்ததொரு தேகமதுக் கறிவுண்டாகும்
முத்தியுள்ள சாரையது முக்கியமாமே. 123

## கருஞ் சாரை

முக்கியமுள்ள கருஞ்சாரை முறமைகேளு
மூதண்ட சிவகயிலை தன்னிலேதான்
பக்குவமாய் பூரணத்தில் மனதைநாட்டி
பணிந்துமிக அடிவாரந் தன்னில்கார்த்து
சிக்கெனவே யிருந்துமிக ரேசித்தாக்கால்
சீக்கிரத்தில் கருஞ்சாரை சினந்துபாயும்
உக்கிரமாய்க் கருஞ்சாரை வரும்போதுதானே
உம்மெனவே தலைதிருகி உண்டுபாரே. 124

பாரப்பா கருஞ்சாரை நிலத்திற்பாயும்
பாயுமுன்னே ஏந்தியபின் பகரக்கேளு
நேரப்பா கருஞ்சாரை கையில்வாங்கி
நிச்சயமா யச்சாரை மெழுகுபோலாம்
பேரப்பா அச்சாரை பிலக்கவேண்டி
பெருமையுடன் மசிமசிவென் றோதினாக்கால்
ஆரப்பா அறிவார்க ளந்தச்சாரை
அருமையுடன் பூரணமாய் நிற்கும்பாரே. 125

பாரான கருஞ்சாரை அருமைச்சாரை
பாரிலுள்ளே ாரறியாத பசுமைச்சாரை
நேரான சாரையதை மைந்தாகேளு
நிசமாகப் பூரணமாய்க் கொண்டாயானால்
தேராத மனந்தேருந் தேகந்தேரும்
சிவசிவா வாசியதுக் குயிரேயாகும்
பேரான பூரணமுஞ் சித்தியாகும்
பெருமையுடன் சிவயோகம் பிலக்குந்தானே. 126

தானான பூரணமாஞ் சத்திபாதம்
தனையறிந்து அனுதினமும் பூசித்தாக்கால்
ஊனான காயமடா பிலக்கும்வாசி
உருமையுடன் நின்றுசிவ யோகம்பண்ணு
வீணான புத்திகளு மகன்றுபோகும்
மெய்யிலுள்ள வினைகளெல்லாம் விலகும்பாரு
கோனான குருவருளி லனந்தங்காட்டும்
குண்டலியி நந்தியுட கூருதானே. 127

## செஞ்சாரைக் கற்பம்

தானென்ற கருஞ்சாரை யுண்மை சொன்னேன்
சதாநித்திய பூரணத்தின் தன்மையாலே
தேனென்ற செஞ்சாரை மகிமைகேளு
தேவியெனுஞ் செகசோதி பாதம்போற்றி
மானென்ற மங்கையடா மவுனப்பிள்ளை
மதனரதி யானசிறு மங்கைநாதம்
கானென்ற நாதமடா கமலநாதம்
கருணையுடன் பூரணமாய் நாதம்வாங்கே. 128

வாங்கியந்த நாதமதைத் தியனாஞ்செய்து
மனதுபரி பூரணமாய் மகிழ்ந்துபோற்றி
பாங்குபெற சிங்றீங்கென் றேநீயோதி
பத்தியுடன் பூரணமாய் மனதில்கொண்டு
ஆங்கதுகொண் டமுர்தரசங் கொண்டாயானால்
அசையாத கூத்துவனு மகன்றுபோவான்
தீங்கான பிரமையுமோ தீர்ந்துபோகும்
சிவசிவா கயிலாச தேசமாச்சே. 129

தேகமதில் வாசியது அசையாதய்யா
சிவயோக பூரணமாய்த் தேறுந்தேறும்
போகமென்ற அனுபோக மரூபவாசல்
பொங்கிநிறைந் தமுர்தமது ஊறும்வாசல்
ஆகமென்ற அமுர்தரசஞ் சொலிக்கும் வாசல்
அடங்காத போதமய மானவாசல்
மோகமென்ற மோகமதுக் கேதுவாய்நின்ற
முத்திதரு மணிவாசல் மோச்சமாமே. 130

மோச்சமென்ற நிலையறியா மானுடர்தானும்
மோகமென்ற மாய்கையிலே மூழ்கிமெத்தக்
காச்சியென்ற கண்காச்சி மோட்சங்காணார்
கால்வாசி கொண்டுநின்று சந்திபண்ணார்
ஆச்சியுட ஆனந்த அமுர்தபோதம்
அந்தமுர்தங் கொண்டுநிலை யறியமாட்டார்
பேச்சுமன தறியாமல் மாண்டாரய்யா
பெருமையுடன் பூரணத்தில் பேணிநில்லே. 131

நில்லென்ற நிலையறியார் நிலையாக்கேணி
நிலைத்தமன துறுதியினால் வாசியாச்சு
சொல்லென்ற சொல்லுறுதி யாலேமைந்தா
சுகமான சத்திசிவ பூசைரெண்டும்
உள்ளென்ற உறுதியடா வாலைபூசை
உத்தமன துறுதியினால் பூசைபண்ணி
செல்லென்ற கேசரியை யடுத்தாயாகில்
சின்மயமாம் பூரணத்தைச் செப்பக்கேளே. 132

செப்புமொழி யென்னவென்றால் மைந்தாகேளு
சிவசிவா பூரணமாய்ச் செனித்தபாகம்
கைப்புநிறை யமுர்தரச பாகந்தன்னை
கால்மாறி நின்றகே சரியில் நீயும்
தப்புதலில் லாமல்நீ மைந்தாகேளு
தன்வசமாய் கைவசமே தானேகொண்டு
துப்புறவாய் ரவிநாதஞ் சரியாய்ச்சேர்த்து
துகள ரவே ரவிதனிலே சமாதுவையே. 133

வையப்பா ரவிதனிலே வைத்தபோது
மகத்தான திசைநாத மெழுகாய்நிற்கும்
மெய்யப்பா மெழுகாகி நின்றநாதம்
மேன்மைபெற யின்னமொரு பாகங்கேளு
செய்யப்பா சத்திசிவ மொன்றாய்க் கூட்டி
தெளிவான தெளிவெடுத்து மெழுகிற்சேரு
மையப்பா போலவுமே பாகஞ்செய்து
மகத்தான ரவியினிடம் வைத்துப்பாரே. 134

பாரப்பா ரவியினிடம் நன்றாய்க் காய்ந்தால்
பசுமையுள்ள மெழுகாகப் பாகமாகும்
சேரப்பா அம்மெழுகில் நாதவிந்து
சேர்க்கையுள்ள விந்ததுவுங் கலசப்பாலாம்
ஆரப்பா அறிவார்கள் கமலப்பாலில்
அம்மெழுகைக் கரைத்துரவி முகத்திற்சேரு
வீரப்பா தானடங்கப் பத்துமுறைசெய்தால்
வேதாந்த பூரணமாய் நிற்குந்தானே. 135

தானான பூரணமே தெய்வந்தெய்வம்
சதானந்த போதமய மானதெய்வம்
ஊனான காயமதுக் குருதியான
உண்மையென்ற தெய்வமடா ஆருஞ்சொல்லார்
கோனான குருவருளாற் காணவேணும்
கூர்மையுடன் கண்டதினால் கொள்ளவேணும்
தேனான பூரணத்தால் தெகிட்டவெணும்
சிவசத்தி பூசையைநீ செய்துபோற்றே. 136

## பஞ்சகண தீட்சை

போற்றியபின் பஞ்சகண தீட்சைகேளு
பூரணத்தின் கிருபையினால் சொல்வேனய்யா
தேற்றியதோர் சிவதீட்சை சத்திதீட்சை
செப்பாத வாலையுட தீட்சைமூன்று
சாற்றிதோர் பூரணமு நாலுங்கூட்டி
சதானந்த ரவிபீசங் கூடச்சேர்த்து
மூர்த்திகர மாகவேதான் ரவியில்வைத்தால்
முத்திபரி பூரணமாய் நிற்கும்பாரே. 137

பாரப்பா பூரணமாய் நின்றநாதம்
பஞ்சகண தீட்சையெனச் சொல்லலாகும்
நேரப்பா மனம் நிறுத்திக் கொண்டோர்தாமும்
நிசமான பஞ்சகண தீட்சைசெய்வார்
பேரப்பா பெற்றதொரு முத்தர்செய்வார்
பேருலகில் மற்றவர்கள் காணமாட்டார்
நீரப்பா நிலையறிந்து கொள்ளமாட்டார்
நின்றநிலை காணார்கள் மடையவர்வாழ்வே. 138

வாழ்வான வாழ்க்கையிலே நிற்கவேணும்
மார்க்கமுடன் குருபதத்தை வணங்கவேணும்
பாழான முப்பாழைப் பார்க்கவேணும்
பஞ்சகண தீட்சைவிதி யறியவேணும்
தாளான மதியமுர்தங் கொள்ளவேணும்
சதாபோத மார்க்கமதாய் நிற்கவேணும்
காலான வாசிநிலை யறியவேணுங்
கற்பூர தீபமதால் கனலைத்தூண்டே. 139

### சிதம்பர மகிமை

தூண்டாத மணிவிளக்கின் சோதியாலே
சொல்லுவேன் சிதம்பரத்தின் சூட்சங்கேளு
பூண்டதொரு பூட்டான கமலவீடு
பொற்கமல மாயிரத்தென் மலரின்வீடு
காண்டமென்ற கமண்டலமாம் விந்துவீடு
கற்பூர தீபநிறைந் திருந்தவீடு
தாண்டவமாய் நின்றுவிளை யாடும்வீடு
சகலகரை போதமய மானவீடே. 140

### சிதம்பர சக்கரம்

வீடரிந்து விந்துநிலை தன்னைப்பாரு
விலாசமுள்ள விந்துவடா வட்டம்வட்டம்
நாடரிந்து வட்டமதை நாட்டிக்கொண்டு
நல்லவிந்து வட்டமதில் நயனமூன்றுஞ்
சோடரிந்து அதன்கீழே யகாரம்போடு
சூட்சமுட னதின்கீழே பிறைதான்போடு
கூடறிந்து விந்துவதி லிதழ்தான்ரெண்டு
கூர்மையுடன் கொண்டதை நீ கூர்ந்துபாரே. 141

பாரப்பா சக்கரமுஞ் சிதம்பரமுமாச்சு
பஞ்சசபை யானதுவு மிதுதானாச்சு
நேரப்பா சக்கரத்தை நிதானம்பண்ணி
நிச்சயமா யஞ்செழுத்தை மாறிமாறி
தேரப்பா நின்றுசெபஞ் செபித்தாயாகில்
சிந்தைதனில் நினைத்தவண்ண முடிக்கலாகும்
ஆரப்பா சிதம்பரத்தை யறியப்போறார்
அறிந்தவனே சிவயோகி யாகுந்தானே. 142

### வாலைபூசை

தானான சிதம்பரத்தின் மகிமைசொன்னேன்
சதானந்த போதமதின் தன்மையாலே
தேனான வாலையுட பூசைகேளு
சிதம்பரத்தின் தீட்சையடா வாலைதானும்
கோனான திரிகோண நடுவேவிந்து
குருவான விந்துவதி னடுவேகேளு
மானான ரீங்கார மிட்டுமேலே
மகத்தான சூட்சமிட்டுச் சுழியும்போடே. 143

போடப்பா சுழியறிந்து சூட்சமிட்டால்
பொன்னான திரிகோண மென்னசொல்வேன்
நாடப்பா மேருவென்று யிதுக்குப்பேரு
நல்லதிரி கோணமென்று யிதுக்குப்பேரு
வீடப்பா பெலத்ததொரு மெஞ்ஞானவீடு
வீடரிந்து விதியோடே பூசைசெய்தால்
காடப்பா கருங்காடாம் காட்டினுள்ளே
கருணையுள்ள வாசியதுக் குயிருமாமே. 144

உயிரான திரிகோண விந்துதன்னை
உறுதியுள்ள பூரணமென் றுகந்துநின்றால்
பயிரான உயிர்பயிரு மவனைப்போற்றி
பத்தியுடன் தொழுதுமன துறுதியாக
கயிலாச சிதம்பரம் வாலையைக்கண்டால்
கண்ணடங்காத் தீபவொளி கருணையாகும்
மயிரான பாலமதும் நெருப்பார்தாண்டி
மகத்தான பொன்மேரை யடுக்கலாமே. 145

அடுக்குநிலை யறியவென்றால் கடினமெத்த
அருளான பூரணத்தா லடுக்கலாகும்
நடுக்காமல் பூரணத்தைக் காணுதற்கு
நன்மையுள்ள நன்மனதாய்க் குருவைக்காரு
தொடுக்கும்வகை யென்னவென்று கேட்டாயானால்
சொல்லுவேன் சத்திசிவ பூசைபண்ணி
திடுக்கருத்து வாலையுட திரத்தில்நின்றால்
திருவான பூரணத்தில் சேரலாமே. 146

சேர்ந்துநின்ற பூரணத்தைக் கண்டுகொண்டால்
செம்மையுள்ள அடுக்குநிலை போதந்தோன்றும்
கூர்ந்துநின்று அடுக்குநிலை போதங்காண
குண்டலியி னந்திதனைக் கூர்ந்துபார்த்து
தேர்ந்துநின்ற ஆதார மூலாதாரம்
திறமான ஓங்காரக் கம்பந்தன்னில்
சார்ந்துநின்ற கம்பநுனி மேலேதாவி
தனலான ரவிதனையே பூசைபண்ணே. 147

பண்ணப்பா பூசையிலா குதியேசெய்ய
பதிவான மூலமதில் கனலோ மீரும்
நண்ணப்பா அக்கனலா லாறாதாரம்
நடுவான மூலமடா மேலாதாரம்
விண்ணப்பா தானிறைந்த ஆதாரப்போக்கை
மேன்மைபெறக் காணுதற்கு மெதுவாய்மைந்தா
கண்ணப்பா கோலறிந்து கண்ணக்கோலால்
கால்வாசி கொண்டு அந்தக்கனலைத்தூண்டே. 148

## வரை தாண்ட

தூண்டினால் கண்ணேரு வெகுசாய்ப்பாயும்
துகளருத்து அடுக்குநிலை தோணுந்தோணும்
தாண்டினால் முதல்வரையே சிவமுமாச்சு
சகலகலை மருவரைதான் சத்தியாச்சு
ஆண்டதினால் மூன்றுவரை வாலையாச்சு
ஆதியென்ற நாலுவரை பூரணமாய்நிற்கும்
நீண்டதொரு பூரணத்தைக் கண்டபோது
நிலையாத அஞ்சுவரை நிசந்தான் கேளே. 149

நிசமான அஞ்சுவரை நாதம்நாதம்
நின்றிலங்கு மாறுவரை தீபந்தீபம்
வசமான ஆறுவரை மேலதாக
வன்னிரவி சோமனுமாய் மகிழ்ந்துநிற்பார்
திசமான ஏழ்வரைக்கு மேலதாக
தீயான அக்கினியா மாறுதன்னில்
நிசமான நெருப்பாறி லப்பாலேகி
நீமகனே மயிர்ப்பால மிட்டுத்தாண்டே. 150

தாண்டினா லகண்டவெளி காணலாகும்
சகலகலை போதகமாய் நிற்கலாகும்
தாண்டினால் வெளியோடே வெளியுஞ்சேர்த்து
சங்கற்ப விகற்பமெல்லாந் தவிர்ந்துபோகும்
தாண்டினால் யேகவெளி தீக்காடாகும்
தன்மயமும் வின்மயமு மொன்றாய்ப்போகும்
தாண்டினால் பரவெளி தன்னிலேதான்
தயங்காத தீபவொளி தான்தானாமே. 151

தானவனாய் நின்றபூ ரணத்தைப்போற்றி
    சகலகலை நிராமயமாய் நிற்கவேணும்
ஊனான காயமதாய் நம்பவேணும்
    உண்மையென்ற திருநடனம் பார்க்கவேணும்
காணாத கண்காட்சி காணவேணும்
    கமலமல ரமுர்தமதைக் கொள்ளவேணும்
கோனான சின்மயத்தில் நிற்கவேணும்
    குருவான பூரணநூல் பார்த்துத்தேறே. 152

தேறுவது சுழினைநடுக் கமலமீதில்
    செகசோதி யானபூ ரணத்தைநீயும்
மாறுவிதந் தனையறிந்து மாறினாக்கால்
    மகத்தான விஞ்சையது சித்தியாகும்
கூறுவது அகத்தீசா வென்றுகூவி
    குருவான அம்பரத்தில் குறிகண்ணாட்டி
சேறுவது பூரணத்தில் சேர்ந்தாயாகில்
    சிவசிவா கயிலாசம் நீதானாமே. 153

நீயென்றும் நானென்றும் வேறொன்றில்லை
    நிசமான பூரணத்தை நம்பும்போது
தாயென்று வந்தமுர்தங் கொடுப்பாள் நன்றாய்
    தலைவனையுந் தன்னையுந்தான் காட்டிவைப்பாள்
காயென்றும் பழமென்றும் வேறேயில்லை
    கனியான முப்பழத்தைக் கண்டபோது
சேயென்ற வாலையவள் முன்னேநின்று
    தெகுட்டாத பூரணத்தின் திறஞ் சொல்வாளே. 154

சொல்லுவாள் மதலைமொழி யென்னவென்றால்
    சொல்லரிது கேட்பவர்க்குச் சொர்க்கஞ்சொர்க்கம்
சொல்லுவார் ரந்தரங்க சொர்க்கவீட்டில்
    தெகிட்டாத மதியமுர்தக் கனிதானொன்று
கொள்ளுவார் பெரியோர்க ளதனைவேண்டி
    கொண்டுகரை யேறினவர் கோடிக்கொன்று
தள்ளுவார் திரோதகையின் கூத்தையெல்லாம்
    தள்ளிமலை யேறுவது தனதென்பாரே. 155

## பிர்மமூலம்

பாரான பிரிதிவியா மண்ணும்விண்ணும்
  பசுந்தமண்ணுந் தண்ணீரு மார்தான்காண்பார்
ஆரான தண்ணீரு மண்ணுமப்பா
  ஆதியந்தஞ் சத்திசிவ மானவாரு
நேரான சத்திசிவ மென்னசொல்வேன்
  நிசமான நாதவிந்து முத்திமோட்சம்
பேரான மோட்சமடா விந்துவிந்து
  பெருமையுள்ள விந்துமணி ரவியிற்தாக்கே. 156

தாக்கினால் காயசித்தி கைக்குள்ளாகும்
  தன்மையுள்ள கெவுனசித்தி தானேதங்கும்
வாக்கினா லுரையாத மவுனசித்து
  வரிசையுள்ள சிவயோக வாழ்க்கைதானும்
தூக்கினால் தொடர்ந்தேறுஞ் சோதிவாழ்க்கை
  சோதியென்றால் செகசோதி யானமூலம்
நாக்கினால சையாத மூலமூலம்
  நடுவான மூலமடா பிர்மமாச்சே. 157

ஆச்சப்பா பிர்மமென்றால் மாலின்மூலம்
  அருளான மூலமடா விந்துவட்டம்
மூச்சப்பா நின்றடங்கும் முனையாம்பாரு
  முத்திதரும் புருவநடுக் கமலபீடம்
பேச்சப்பா பேசாத மவுனபீடம்
  பேரண்ட மானதொரு வன்னிவன்னி
நீச்சப்பா நிலையாத வன்னிமேலே
  நின்றிலங்குங் கற்பூர தீபம்பாரே. 158

பாரடா கற்பூர தீபமேலே
  பாச்சிவிடு மூலஅன லாவிதன்னை
சேரடா ஆவியதின் மேலேசென்றால்
  சிவஞான தீபமது ஆவியூடே
நேரடா பாயுமது மூலந்தன்னில்
  நிசமான ஆவியொளி பிராணனாச்சு
காரடா பிராணநிலை காத்துஅந்தக்
  கருவான சத்திசிவ பூசைசெய்யே. 159

பூசையது செய்வதுவு மாசையாசை
பொங்கிநின்ற ஆசையினால் எல்லாமாச்சு
ஆசையினால் வாசிநின்று மூலத்தேகி
அடங்காத மேல்மூலம் அந்தத்தாலே
பாசிமனத் தளுக்கறுத்து அமுர்தங்கொண்டு
பசுமையுள்ள சத்தியுட பாதம்போற்றி
நாசிநுனி நடுவான பூரணத்தைக்கண்டால்
நலமான நால்பதமு நண்ணுங்காணே. 160

காணவே காலையிலே சிவத்தைப்பூசி
கனிவாக மாலையிலே சக்திபூசை
பேணவே காலைசிவ மாலைசக்தி
பேறாமல் நின்றுதவஞ் செய்வாயாகில்
தோணவே சத்தியவள் சிரிப்பாளய்யா
சோதியெனும் பூரணத்தாய் துலங்கமாட்டாள்
ஊணவே வாசியது உழண்டு நின்று
உத்திசிவ யோகமதுக் குறுதிபோச்சு. 161

போச்சப்பா அறிவுகளு மங்கிப்போச்சு
சொல்லாத மாய்கைவந்து சுத்தலாச்சு
பேச்சப்பா முன்பின்னாய் பிரண்டுபோச்சு
பேய்க் கூத்தாய் நின்றுவிளை யாடலாச்சு
ஆச்சப்பா ஆதார மகன்று போச்சு
ஆனந்த போதமதில் சுழல லாச்சு
மூச்சப்பா முன்னிலைவிட் டொதிங்கிப்போச்சு
முத்திசிவ சத்தி விட்டால் மோசம்பாரே. 162

பாரடா பூரணநூல் தன்னிலேதான்
பத்தி முத்தி சித்திவை ராக்கியம் சொல்லும்
ஆரடா அறிவார்கள் பூரணத்தின்பாகம்
ஆதியந்தப் பொருளரிந்தோ னவனேசித்தன்
தேரடா தனக்கழகு சிரசுபோலே
சிவதலத்துக் கழகுபூ ரணமேயாச்சு
சாரடா பூரணத்திற் சென்று நீயும்
சதுரகிரி பொதிகையுட தன்மைகேளே. 163

## சதுரகிரி மகிமை

கேளடா சதுரகிரி வளமைதன்னை
 கேட்பவர்க்குக் கெதிமோட்சங் கிட்டுங்கிட்டும்
ஆளடா சதுரகிரி எண்கோணமாகும்
 அருளான கோணமென்றால் குகைதானுண்டு
சூளடா கிரி முடிவில் குகைதானொன்று
 சொன்ன குகை ஒன்பதிலும் நவசித்தாதி
தாளடா மேருவிலே தவசு பண்ணி
 தன்னருளால் பிர்மமய மானார்பாரே. 164

பாரப்பா பிர்மமய மாகிநின்ற
 பக்குவத்தைச் சொல்லுகிறேன் பதிவாய்க்கேளு
நேரப்பா நின்றபூ ரணத்தினாலே
 நிச்சயமாய் பிரம்மரிஷி யானார்பாரே
பேரப்பா பெத்தநவ சித்தர்தானும்
 பெருமையுட நவகோடி சித்தரானார்
சேரப்பா சதுரகிரி முடியிலேதான்
 தேனருவி பாயுதடா பூரணமுமாமே. 165

ஆமப்பா சதுரகிரி கிழக்குச்சென்றால்
 அடிவாரந் தன்னிலொரு குகைதானுண்டு
தாமப்பா அக்குகைக்கு மேலதாக
 சந்திரபுஷ் கரணியெனுந் தடாகமுண்டு
நாமப்பா சொல்லுகிறோ மச்சுனையைச்சுற்றி
 நலமான பொற்சீந்தி மெத்தவுண்டு
ஓமப்பா பொற்சீந்தி கொண்டுநீயும்
 உருமையுடன் னச்சுனையிநீ ருண்டுபாரே. 166

## பொற் சீந்தி

உண்டுபார் மண்டலமே கொண்டாயானால்
 உன்தேகம் விளக்கொளிபோ லொளியேவீசும்
நின்றுபா ரக்குகையில் சித்தருண்டு
 நீமகனே அவர்களிடஞ் சென்றாயானால்
கண்டுபார்த் தணைத்தவரு மகனேயென்று
 கற்பமுறை உற்பனத்தைக் கருதுவார்பார்
பண்டுடைய பண்மொழிகள் சொல்லுவார்பார்
 பசுமையொளி பூரணத்தின் பாகந்தானே. 167

பாகமுள்ள பொற்சீந்தி ரசத்தைவாங்கி
பக்குவமாய் நவலோகந் தன்னிற்பூசி
ஆகமுடன் அனல்காட்டி யெடுத்துப்பாரு
அசையாத தங்கமாத் ததிகங்காணும்
தாகமுட னச்சுனையில் நவலோகத்தை
தணல் காட்டித் தோய்த்திடவே தங்கமாகும்
நாகமுடன் பாசாண முழுதுமந்த
நல்லசுனை நீரதனால் கட்டிப்போச்சே. 168

போச்சென்று விடுகாதே தென்கிழக்கில்
புசுண்டர் வர்க்கச்சித்தருட குகைதானுண்டு
மூச்சென்ற அக்குகைக்கு அடுக்கநல்ல
முத்திபெரு ஞானமெனுஞ் சுனைதானப்பா
நீச்சென்ற அச்சுனையைச் சுத்திநல்ல
நீலமெனுங் கொடுவேலி வெகுசாயுண்டு
பாச்சென்ற கொடுவேலி யிலையைத்தின்று
பரைஞானச் சுனைநீரை யுண்டுபாரே. 169

பாரப்பா மண்டலமே கொண்டாயானால்
பசுமையுள்ள தேகமது சித்தியாச்சு
வீரப்பா கொண்டசடஞ் சித்தியானால்
வேதாந்த தீபமது மெய்யாய்க்காணும்
சாரப்பா அத்தீபக் கிருபையாலே
சார்பாகச் சித்தருமே யணைப்பாராய்யா
பேரப்பா பெத்ததொரு குருவைக்காண
பெரிதான மவுனவித்தை சொல்வார்காணே. 170

காணவே கொடுவேலிச் சாருவாங்கி
கடுசான இரும்பை நீ காய்ச்சித் தோய்த்தால்
தோணவே யிரும்பதுவு யேமமாகும்
சுத்தமுள்ள கெங்கையிலே ரசந்தான்கட்டும்
பேணவே அந்தரசங் கொண்டாயானால்
பேரண்டஞ் சுத்துமடா கெவுனமார்க்கம்
பூணவே கொடிவேலிச் சாத்தினாலே
பொன்றின் பேரெழுந்திரிந்து போவார் தானே 171

### மஞ்சள் நிற தும்பை

தானான மெருவுக்குத் தெற்காகத்தான்
தண்மையுடன் மூன்றுசுனை நிலையாகக்கேணி
ஊனான நடுச்சுனையைச் சுத்திமெத்த
உறுதியுள்ள மஞ்சள்நிறத் தும்பையுண்டு
பேணாமல் நின்றதினால் காணமாட்டார்
பெருமையுள்ள சுனையருமே குகைதானுண்டு
கோனான அக்குகையில் சித்தர்வாசம்
குருவான சித்தரைநீ பணிந்திடாயே. 172

பணிந்திடவே சித்தருளை யணைத்துக்கொண்டு
பசுமையுள்ள தும்பைதனை காட்டுவார்கள்
கணிந்திடவே தும்பைதனைக் கசக்கிநல்ல
காரமுள்ள சாறுதனைக் கொண்டாயானால்
அணிந்ததொரு வாசியதுக் குறுதியாச்சு
அகம்பாவ புத்திகளு மகன்றுபோச்சு
துணிந்துவருங் காலனவன் மாண்டுபோவான்
சுயஞ்சோதி யானபிர காசமாமே. 173

ஆமென்ற பிரகாச மதீதவித்தை
அந்தரங்கமான வித்தை யார்தான் காண்பார்
ஓமென்ற தென்மேற்கு வடக்கிற்சென்றால்
உயர்ந்ததொரு திட்டுஅதில் குகைதானுண்டு
தாமென்ற அக்குகைக்கி மேலதாகச்
சங்குநதி யானதொரு தடாகமுண்டு
நாமென்ற தடாகநதி யோரமெல்லாம்
நல்லகல்லுத் தாமரைதான் நிற்கும்பாரே. 174

### கல்தாமரை

நிற்குமொழி தனையறிந்து சென்றுபார்த்தால்
நீதியுள்ள தாமரையைப் பிடுங்கிமைந்தா
தற்கமிட்டு அச்சாத்தில் யிரும்பைக்காய்ச்சி
தான் துவைக்க யிரும்பதுவுஞ் செம்பாய்போகும்
வற்கமுள்ள சாத்திலதைச் சுருக்குப்போட்டால்
மாசற்றுக் கட்டுமடா மணிபோல்மைந்தா
துற்குணத்தை விட்டகன்று நற்குணமேயானால்
சுயஞ்சோதி யானதொரு பதங்காணலாமே. 175

ஆமப்பா மேற்குமுத லீசானமட்டும்
அந்தரங்க மானயிடமார்தான் காண்பார்
ஓமென்ற கெவுனாதி யேகவேணும்
உறுதியுள்ள சித்தனென்றால் காண்பாரய்யா
நாமென்ற ஆணுவத்தை மூலத்தீயால்
நலுங்காம லத்தீயில் தகனம் பண்ணி
தாமென்ற சந்திரனை ரவியிற்றாக்கி
சதாகாலம் பூரணத்திற் சார்ந்து நில்லே. 176

நில்லென்ற சதுரகிரி தன்னிலேதான்
நீமகனே ஒருபோது வாசமானால்
சொல்லென்ற மந்திரங்க ளெல்லாஞ் சித்தி
சோதியென்ற சுடரொளியுந் தோன்றுந் தோன்றும்
உல்லென்ற மவுனமது சித்தியாகும்
ஓமென்ற மூலமுத லாறாதாரம்
கல்லென்ற கோட்டையடா வச்சிரகாயம்
கயிலாச சதுரகிரி வாசந்தானே. 177

## அமுர்த ரச போதம்

வாசமுள்ள அமுர்தரச போதங்கேளு
மகத்தான போதமடா அமுர்தபோதம்
நேசமுள்ள போதமதை யார்தான் காண்பார்
நின்னிடத்தில் நின்னிடத்தை நினைவாய்ப்பாரு
தேசமென்ற ஆதார மூலாதாரம்
சிவசிவா ஓமெனவே நின்றமூலம்
பேசவொண்ணா மூலமடா என்தாய்சத்தி
பெண்ணிவளாங் கண்ணிமையாற் பேணிப்பாரே. 178

பேணிப்பா ரமுர்தரச மாதுதன்னை
பின்னவளா முன்னவளா மென்னாளுந்தான்
பூணிப்பா யென்னாளும் பூசைபண்ணி
புத்தியுனக் கில்லையடா முத்திமோச்சம்
பாணிப்பாய்த் திரிந்ததினால் காணப்போமோ
பஞ்சகண பூரணத்தின் பதவிதன்னை
ஆணிமாத் ததிகமடா ஆத்தாள்ரூபம்
அந்தமதி ரவியினிட மணிந்தரூபம். 179

ரூபமென்ற தூலமடா சூச்சமாகி
நுண்ணிமையாய்க் காரணமாய் நின்றாளாத்தாள்
தாபமென்ற தில்லறமே சுழினைமூலம்
சங்கையுடன் மூலத்தின் தணலையூதி
வாபமென்று யிருந்துகுளிர் காய்ந்துகொள்ள
மதியுனக்கு யில்லையடா மைந்தாமைந்தா
கூபமென்ற கற்பமடா குமரிகற்பம்
கூரறிந்து நேரறிந்தால் வாலையாமே. 180

ஆமென்ற மூலமடா முதுகண்ணாட்டம்
அந்தரங்க மானசுழி கடைக்கண்பார்வை
நாமென்ற பார்வையடா சுழினைநந்தி
நாதாந்த முத்திபெருங் கமலவீடு
ஓமென்ற வீடுநடு மனையினுள்ளே
ஒளியான முச்சுடரின் மேலதாக
தாமென்ற சுனையருவி பாயுதய்யா
சங்கையுட னந்தருவி யுண்டுபாரே. 181

உண்டுமிக நின்றதினா லமுர்தபோதம்
உண்மையுடன் சொன்னதினா லுறுதியாகும்
கண்டுகொண்டு கலைக்யான முடிவாய்நின்ற
காலதுதான் தலையாகும் தலைகாலாகும்
விண்டுசொல்லப் போகாத அமுர்தபோதம்
மெய்யான கலைக்யான முடிவதாகும்
பண்டுடைய கலைக்யான மமுர்தபோதம்
பதிவான சுழினையதிற் பத்திப்பாரே. 182

பத்திப்பார் சந்திரகலை பதினாறாகும்
பகலான சூரியகலை பனிரெண்டாகும்
சுத்திப்பா ரக்கினியின் கலைதானாலு
துகைபார்க்கக் கலைகளொரு முடிவாய்நிற்கும்
முத்திப்பார் மூன்றுகலை ஒன்றாகும்போது
முக்யமென்ற முப்பத்தி ரெண்டதாகும்
புத்தியுட னின்றகலை எட்டெட்டாகி
பூரணமா யறுபத்தி நாலுமாச்சே. 183

நாலான பூரணமே தெய்வந்தெய்வம்
    நாதமென்ற கலைக்கியான மதுவேயாகும்
காலான கலைக்யான முடிவை மைந்தா
    கருத்துவைத்துக் கண்டவர்க ளாருமில்லை
மேலான சுழினையடா கமலவீட்டில்
    மெய்யாக நிறைந்தகலைக் யானபோதம்
பாலான முப்பாலுக் கப்பால்நின்ற
    பதிவான கலைக்யான முடிவதாமே. 184

முடிவான கலைக்யான முத்திமோச்சம்
    மூலமென்ற பிராணமடா வாய்வுவாய்வு
அடியான வாய்வுகலைக் யானமான
    அவையடக்கஞ் சொல்லுகிறே னாதியந்தம்
படியான ஆதியந்தம் ரவிமதியுமாச்சு
    பாலகனே மதிதனையே ரவியிற்சேரு
வடிவான ஆதியந்த மொன்றும்போது
    மகத்தான கலைக்யான முடிவுமாமே. 185

ஆமப்பா முடிவாகி நின்றபோதம்
    அடங்கி விளையாடுகின்ற அருமைநாதம்
ஓமப்பா வெளியேறி வந்தசூச்சம்
    ஒன்றுபத்தாய் நின்றுவிளை யாடும்வாலை
காமப்பா லானபூ ரணமாய்வந்த
    கலைக்யான மானகே சரியாள்தன்னை
நாமப்பா வென்றிருந்தால் நமன்தானேது
    நாதாந்த கலைக்யான முடிவைப்பாரே. 186

பாரப்பா இருவிழியு மோன்றாய்க்கூடி
    பரைஞான கேசரியாள் பதத்தைப்பார்க்க
ஆரப்பா அறிவார்கள் சூச்சாசூச்சம்
    அச்சூச்ச மானகலைக் ஞானபோதம்
நேரப்பா நின்றுகால் மாறியாடி
    நிசமான சுழியிலொரு காலைநீட்டி
தேரப்பா மூலமுத லாறாதாரம்
    சென்றுவிளையாடுமது கலைக்ஞானமாமே. 187

ஆமென்ற கலைக்யானம் நயனசூச்சம்
அருள்பெருகப் பூரணமாய் வந்தசூட்சம்
ஓமென்ற ரவிமதியாங் கலைகள் ரெண்டும்
உருமையுட னடுமனையாஞ் சுழினைமீதில்
தாமெனவே அந்த நடுமலையில் சென்றால்
சாயுச்சிய பதவியடா தானேதங்கும்
நாமென்ற பதவியடா நயனசூச்சம்
நாதாந்த முத்தியென நண்ணுந்தானே. 188

நண்ணுவது என்னவென்றால் நயனம்ரெண்டும்
நாட்டமுடன் பூரணமாய்ச் சுழினைமீதில்
உண்ணுவது சிவயோகத் தன்மையாகும்
ஒடுங்குவது நிருவிகற்ப சமாதியாகும்
கண்ணுமன மொன்றாகி நின்றுப்பாரு
கருவான கலைக்யானங் கண்ணின்கண்ணு
தன்னிமையா யறிந்துநிமை தன்னைப்பாரு
தன்சாய்கை யத்துதடா தன்னைக்காணே. 189

தன்னைத்தான் கார்க்க ஒருகருவைக்கேளு
தானவனாய் நின்றகுரு தன்னைக்கார்த்து
விண்ணைத்தா னோக்குவது கண்ணின்கண்ணு
மெய்யான கண்ணதுதான் வேதாந்தத்தீ
கண்ணைத்தா னறிந்துநடுக் கண்ணைப்பார்க்க
கலைக்யான பூரணமாய்க் கருணையாகும்
மண்ணைத்தான் டார்த்துறுதி யறிந்துகொண்டு
மந்திரமாங் கலைக்யானம் வசியமாமே. 190

வசியமுள்ள சத்தியடா வாசிமூலம்
வாசிவளர் பூரணமே பொதிகைக்கும்பம்
பசியகலுங் கும்பமுனி தன்னைக்கண்டால்
பத்திமுத்தி நின்றிலங்கும் பரமஞானம்
கசியமன துறுதியினா லந்தக்கண்ணை
காலறிந்து கண்துறந்து கமலவீட்டில்
பொசிக்கவே நீஅந்த அமுர்தங்கொண்டால்
பூரணமா யென்னாளும் வாழலாமே. 191

## அமுர்தரச கற்பம்

வாழ்வதற்கு அமுர்தரச கற்பங்கேளு
மார்க்கமுடன் பூரணத்தை வாங்கிமைந்தா
ஆழ்வதற்கு அந்தநிரை சத்திசேரு
அந்தரங்க மாகவேநீ ரவியில்வைத்து
மாழ்வதற்கு ரவிபீச மதனில்ரெட்டி
மைந்தனே மூன்றுமொன்றாய்க் கூட்டிநல்ல
கால்வலுக்க நாதவிந்து ஒன்றாய்க்கூட்டி
கருணைபெற ரவியில்வைக்க மெழுகுமாமே. 192

ஆமெனவே மெழுகெடுத்து வைத்துக்கொண்டு
அப்பனே மறுபடியும் நாதவிந்து
ஓமெனவே விட்டுநன்றாய்ப் பிசைந்துவைக்க
உருமையுடன் ரவியனலில் பாகமாகும்
நாமெனவே ஐந்துருவு மொன்றாய்நின்று
நாதாந்த ரசகற்ப மானதாலே
தாமெனவே அந்தமுர்த மொருபோதுண்டால்
தானவனாய் நின்றுலகில் வாழலாமே. 193

வாழ்வதற்கு என்னவிதம் செய்வோமென்று
மனதிடஞ்சல் கொண்டுதவஞ் செய்யவேண்டாம்
ஆழ்வதற்கு சதுரகிர யீசானத்தில்
அங்கையொரு தலமுமொரு சுனையுமுண்டு
பாலமுர்த மூறுமந்த சுனையிற்சென்று
பக்குவமாய்ச் சற்குருவைத் தியானம்பண்ணி
கோல்முறிந்து அக்குழியி லாழம்பார்த்து
குழிதுரைக்கு அடுக்கமஞ்சள் சேறுமாமே. 194

சேரான சத்திநல்ல மஞ்சள்போலே
சிவந்த களிச் சுண்ணமடா என்னசொல்வேன்
பேரான சுண்ணமென்ற களிவைவாங்கி
பெருமையுடன் குடுக்கைதனி லடைத்துக்கொண்டு
நேரான நடுமனையைத் தியானம்பண்ணி
நிச்சயமாய்ச் சத்திசிவ பூசைபண்ணி
வீரான நவலோகந் தன்னிற்பூசி
மெய்யான செந்தீயிற் காய்ச்சிப்பாரே. 195

காச்சிமிகப் பார்க்கையிலே நவலோகங்கள்
கருகருத்து ஊரலத்துக் கனகம்போலாம்
தாச்சியில்லாக் கனகமென்ற குருவைவாங்கி
தாம்பூர மாயிரத்துக் கொன்றுபோட்டு
பாச்சிநன்றாய்க் குகையிலதை உருக்கிப்பாரு
பாலகனே ஆயிரத்துக் கதிகமாத்தாம்
மாச்சலது யில்லையடா மலையினூரல்
மஞ்சள்நிறக் களிச்சுண்ண மகிமைதானே. 196

## கஞ்சமலை அதிசயம்

தானான கஞ்சமலை நடுவிலேதான்
சதிரான கரும்பாறை யதற்குமேலே
தோணாது அதனிலொரு குகைதானுண்டு
துவாரமென்ன இடிகிணறு போலேகாணும்
காணாத இடிகிணற்றின் பாகந்தன்னில்
கருவான வாசலுண்டு உள்ளேசென்றால்
கோணாத வட்டமாங் குகைமேலாக
கொடுவளைமேல் பரணியுண்டு கூர்ந்துபாரே. 197

கூர்ந்துபா ரப்பரணி தன்னிலேதான்
குருவான செந்தூர மெழுகுபற்பம்
சார்ந்துபார் தயிலமொடு உதகஞ்செயநீர்
சங்கையில்லா குப்பிகளில் மெத்தவுண்டு
சேர்ந்துபார்த் ததையெடுத்துத் தவசுபண்ணி
சிவயோகத் தில்தோணச் சேர்ந்துநில்லு
ஆய்ந்துஅந்தச் சரக்குவைப்பு கஞ்சமலைச்சித்தர்
அன்புவைத்துச் செய்தமுறை அறிந்துபாரே. 198

அறிந்துபா ராதாரப் பொருளைப்பற்றி
ஆதியென்ற சத்திசிவ பூசைசெய்து
விரிந்துநின்ற வேதாந்த பூரணத்தினாலே
வெளியான சோதியிலே மேவிநில்லு
வருந்தியந்த வாலைரசங் கொண்டுநல்ல
மணிபூர பூரணத்தில் மருவிப்பார்த்தால்
சொரிந்தமுர்தம் வழிந்தோடு மந்தப்பாலை
சுழியறிந்து கொண்டுகரை யேறுவாயே. 199

ஏறுவது பூரணத்தி லேறவேணும்
    ஏகாந்த சத்திசிவ பூசைவேணும்
கூறுவது குருமுறையாக் கூறவேணும்
    குருவான பஞ்சகண தீச்சைவேணும்
சாருவது பெரியோரைச் சாரவேணும்
    சதாபோத மார்க்கமதில் நிற்கவேணும்
நேருவது சுழினைநடு மூலந்தன்னில்
    நின்றுசிவ யோகமதை நீதான்பாரே. 200

பாரப்பா பொதிகையின்மேல் சென்றுநீயும்
    பத்திகொண்டு தலைமலையைக் கண்டுபார்த்து
நேரப்பா நின்றநிலை பதியாய்ப்பார்த்து
    நேர்மையுடன் சிவயோகஞ் செய்தாயாகில்
நீரப்பா பெருகிரசம் துஞ்சிநிற்கும்
    நேர்மையுட னந்தரச மெடுத்துமைந்தா
காரப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
    கருணையுடன் பணவிடைதான் கொண்டுதேறே. 201

தேறுவதால் காயசித்தி யோகசித்தி
    தீர்க்கமுள்ள தேவிசித்தி மவுனசித்தி
கூறினதோர் மந்திரங்கள் மாரணங்கள்
    கூர்மையுள்ள அஷ்டகர்மம் சித்தியாகும்
நேறுவதால் சகலசித்துங் கைக்குள்ளாகும்
    நீமகனே சத்திசிவ பூசைபண்ணி
மாறுவித மறிந்துகொண்டு வாசிபூட்டி
    வாசிநடுப் புருவமதில் மகிழ்ந்துநில்லே. 202

நில்லடா அந்தநிலை அந்தந்தன்னில்
    நிசமான கற்பூர தீபந்தன்னில்
செல்லடா வாசிகொண்டு வெளிமேற்சென்று
    தீபமென்ற சுடர்தனிலே வாசிபூட்டி
கொள்ளடா ரேசகபூ ரகமும்பண்ணி
    கூர்மையுடன் கும்பகத்தில் நின்றுபார்த்தால்
அல்லடா சொல்லுகிறேன் வாசியூடே
    அந்தவொளி யிணங்குவதை அறிந்துபாரே. 203

அறிந்துபா ரவ்வாசி மதியாய்நிற்கும்
ஆதியென்ற தீபவொளி ரவியாய்நிற்கும்
வருந்திநின்ற வொன்றான காலந்தன்னில்
வாசியென்ற தேசமடா அம்மாவாசி
விரிந்துநின்ற வாசிதனைக் கண்டபோது
மேலான சிவந்தனக்கு உயிருமாச்சு
பொருந்திநின்ற சத்திசிவ மொன்றாய்க்கண்டால்
புத்தியுள்ள வாலையவள் சித்தியாமே. 204

## நம்பி மலை அதிசயம்

ஆமென்ற கள்ளர்பத்து னாட்டிலேதான்
அழகான நம்பிமலை யடிவாரத்தில்
ஓமென்ற அருவியுட ஊரல்பாயும்
ஒடுக்கமென்ற சுனையுமுண்டு அதுக்கிங்கீழே
தாமென்ற கல்குகைதா னுண்டுபாரு
சதிரான குயைடுத்துப் பரணியுண்டு
நாமென்ற தப்பரணி மேலதாக
நல்லதங்க மெழுகுமுண்டு நயந்துபாரே. 205

நயந்துபார் யேமமென்ற மெழுகுதன்னை
நாதாந்த சற்குருவா லெடுத்துமைந்தா
சுயஞ்சோதி யானமனோன் மணிதானென்று
துகளறுத்து மனதுருமை யாகநீயுஞ்
செயம்பெறவே பணவிடைகால் கொண்டாயானால்
சித்தியுடன் யுகாந்தவரை யிருந்துபாரு
பயந்துமனக் கொள்ளாட்டால் பலனேதுண்டு
பத்தியுடன் சத்திசிவ பூசைபண்ணே. 206

பூசையென்ன சிவபூசை சத்திபூசை
பூரணமாய் வாலையுட பூசைமைந்தா
நேசமுடன் வாலைவயள் வாசமானால்
நிசமான மவுனமடா நிலைக்கும்பாரு
வாசமுள்ள மவுனமது நிலைத்துதானால்
மகத்தான பஞ்சகணஞ் சித்தியாகும்
பாசமுள்ள ஆதாரநிலைகள் தோற்றும்
பரைஞான கேசரியைப் பணிந்துகொள்ளே. 207

## குத்தால மகிமை

பணிந்துநின்ற குத்தால மகிமை
  பதிவான சின்மயமாங் கெங்கைதன்னில்
தணிந்தமலைத் திட்டிலொரு குகைதானுண்டு
  சதானந்த ரதிலிருந்து தவமேசெய்து
கனிந்தமனக் கனிவதனால் வேதைபார்த்து
  கனகமென்ற பானமது வெகுவாய்ச்செய்து
துணிந்துவருஞ் சிவயோகி சித்தர்க்கென்று
  துருவமுள்ள கெங்கையிலே வைத்திட்டாரே. 208

வைத்திட்ட பானமதை யெடுக்கவென்றால்
  வகையொன்று சொல்லுகிறோ மகிழ்ந்துகேளு
மெய்த்திட்ட மாகநீ வாசிபூட்டி
  மேலான கும்பகத்தி லிருந்துகொண்டு
மைத்திட்ட மானநிமை யாடாமல்தான்
  மார்க்கமுடன் பார்க்கையிலே மைந்தாகேளு
செய்திட்ட பானமெல்லால் கண்ணில்தோன்றும்
  சிவசிவா முக்குளித்து எடுத்திடாயே. 209

எடுத்திடவே மலைப்பாக இருக்கவேண்டாம்
  என்மகனே ஆழமது புருடபாகம்
தொடுத்துமிகக் கீழிறங்கி எடுத்துக்கொண்டு
  சுந்தரம்போல் சிவயோகஞ் சுகமாய்ச்செய்து
அடுத்ததொரு ஆதார மூலாதாரம்
  ஆதாரப் போக்கைமிக அறிந்துகொண்டு
நடுத்தரமாய் நின்றுசிவ யோகஞ்செய்து
  நாதாந்த சின்மயத்தில் நாடலாமே. 210

நாடெல்லாஞ் சுத்தினதா லொன்றுமில்லை
  நாதாந்தப் பதவியிலே நின்றால்மைந்தா
தேடலாஞ் சிவயோக மகிமைதன்னை
  திறமான காயாதி கற்பந்தன்னை
கூடலாங் கற்பூர தீபந்தன்னை
  கூர்மையுட நின்றகெதி கொண்டுநின்று
ஆடலாமம்பரத்தில் நின்று அந்த
  ஆனந்தப் பெருவெளிய லாடலாமே. 211

## அட்டகர்ம சவுக்காரம்

ஆடலா மட்டகர்ம மெட்டெட்டுக்கும்
    ஆதியென்ற சவுக்கார மொன்றுகேளு
வீடெல்லாந் திரிந்ததினால் காணப்போமோ
    வேதாந்த நாதத்தில் விந்துசேர்த்து
கூடவே சத்தியிடஞ் சமாதுவைத்து
    கொடியான பொற்கொடியைப் பூசைபண்ணி
தேடவே அஞ்சுகழித் தாருந்திங்கள்
    திரண்டுநின்ற நாதவிந்தைத் திறமாய்வாங்கே. 212

வாங்கிநடுப் பூரணத்தை மைந்தாநீயும்
    வரிசையுட னடிபூரம் ஒன்றாய்க்கூட்டி
பாங்குபெறக் கல்வத்தில் நய்யத்தட்டி
    பழச்சாறு விட்டுநன்றாய் பிசைந்துகொண்டு
தீங்கில்லாப் பீங்கான்றன் மேருக்குள்ளே
    திமிரவைத்து ரவிதனிலே வைத்துப்பாரு
பூங்கமல மாதுதிரு ரவியினாலே
    பூரணமுங் காரணமும் பொருந்தும்பாரே. 213

பாரான ஐந்துருவு மொன்றாய்நின்று
    பரமபதந் தன்னருளாற் காரமேறி
வீரான காரமது வெந்து நீறி
    வேதாந்தப் பிண்டமதால் வந்தகாரம்
கூராத காரமடா சவுக்காரத்தை
    கொண்டு நன்றாயரைத்துருட்டி வட்டுப்பண்ணி
காராமை யோட்டில் வைத்துப் புடத்தைப்போட்டால்
    கடினமுள்ள சுண்ணமடா காரந்தானே. 214

தானான பூரணமாய் வந்தசுண்ணம்
    சற்குருவைத் தான்தொழுது தனதாய்நின்று
வீணான நவலோகந் தன்னில்பூசி
    வேதாந்த சின்மயத்தை வேண்டிமைந்தா
நானான அகம்போக்கிப் புடத்தைப்போட்டால்
    நவலோக முழுதுமடா சுண்ணமாச்சு
கோனான சுண்ணமதா லனந்தங்கோடி
    குருமுறைகள் மெத்தவடா குருவைக்காரே. 215

## தன்னையறியா மூடர்

குருவான சற்குருவால் வேதாந்தத்தை
 கூர்மையுடன் கண்டுமனந் தேர்ந்துகொண்டால்
உருவான காயாதி கற்பமெல்லாம்
 ஒடுக்கமென்ற நிலைதனிலே ஒடுங்கிநல்ல
திருவான வாலையுட திறமேதங்கும்
 சிவசிவா மவுனமதை தீர்க்கம்பண்ணி
தருவான பூரணத்தை மனதுட்கொண்டு
 தாயான சத்திசிவந் தன்னைக்காரே. 216

தன்னைத்தா னறியாத மூடர்தானும்
 சாத்திரத்தின் படியறிந்து தன்னைக்கார்த்து
விண்ணைத்தா னோக்கும்வகை யறியமாட்டான்
 வேதாந்த பூரணத்தை விரும்பமாட்டான்
காலறியாப் பாவிகளைக் கண்டாயானால்
 கண்ணைத்தா னறிந்துமனக் கண்ணைக்கொண்டு
மண்ணைத்தா னள்ளியவன் வாயில்போட்டு
 மதிகதிரில் நின்றகுறி காட்டுவாயே. 217

காட்டுவது மூலமென்ற சுழினைநந்தி
 கருணையுள்ள இருதயமாங் கமலமீதில்
நாட்டமுடன் பூரணமாய் நின்றுபாரு
 நற்கமல மீதிலொரு சுனைதானுண்டு
தேட்டமுட னச்சுனைநீ ரமுர்தமுண்டால்
 தேகசித்தி யோகமுதல் வாதந்தங்கும்
வாட்டமென்ன மனதுபூ ரணமாய்நின்று
 மகத்தான முப்பூவின் வாசங்கேளே. 218

## முப்பூ விபரம்

வாசமுள்ள முப்பூவின் வாசங்கேளு
 மார்க்கமுடன் மனதுருமை யாகநின்று
நேசமுள்ள பூரணமா மமுர்தம்வாங்கி
 நெருப்பாரு மயிர்ப்பால மூன்றுங்கூட்டி
ஆசையுட னறுவகைநீர் தன்னாலாட்டி
 அனலேற ரவியினிட மடங்காப்பண்ணி
பாசமது தானடங்கப் புடத்தில்வைத்தால்
 பருதியனல் போலவெகு சுண்ணமாமே. 219

ஆமென்ற சுண்ணமடா சுழினைச் சுண்ணம்
அருள்பெருகும் பூரணத்தா லானசுண்ணம்
நாமென்ற ஆனுவமே விளையுஞ்சுண்ணம்
நாதாந்த சின்மயத்தால் வந்தசுண்ணம்
வாமென்ற வாமமதுக் குயிராஞ்சுண்ணம்
வாசிசிவ யோகமதுக் கானசுண்ணம்
ஓமென்ற சுண்ணமதை யார்தான்காண்பார்
உலகத்தோ ரறியாமல் மாண்டார்பாரே. 220

யாண்டவகை யென்னவென்று யெண்ணிப்பார்க்க
மதிநிறைந்த பூரணத்தை மதியாமற்றான்
பூண்டதொரு வாசியினால் யோகம்பார்க்க
போக்குவரத் தறியாமல் பொன்றினார்கள்
ஆண்டவனா ரருள்பெருக வாலைபூசை
அறியாமல் மாண்டவர்கள் கோடாகோடி
காண்டமென்ற கமண்டலநீர் பூரணத்தினாலே
கற்பூர வாசமென்ற வாசிபாரே. 221

### கற்பூரச் சுண்ணம்

பாரப்பா யின்னமொரு சுண்ணங்கேளு
பரமான கற்பூரக் கட்டிவாங்கி
நீரப்பா நிறைந்தகும்பக் குடநீர்தன்னில்
நிர்மலமாங் கற்பூரக் கட்டிதன்னை
வீரப்பா தானடங்க அன்வீர்தன்னில்
வீரடங்கத் தான்துவைத்து அனலிற்காய்ச்சு
தேரப்பா பத்துவிசை காய்ச்சித்தோய்த்தால்
சிவசிவா நிர்மலந்தான் திறக்குந்தானே. 222

தானேதான் தானவனாய்த் திறத்துநின்ற
தாயான ரவியினுட பிள்ளைதன்னை
பூணவேநீ அடிமுடியும் ஒன்றாய்ச்சேர்த்து
பூரணத்தின் பாகமதாய் வட்டுப்பண்ணி
வீணுநீ திரியாதே புடத்தைப்போடு
விருதுபெற்ற சுண்ணமா யிருக்கும்பாரு
கோனான சுண்ணமதை வைத்துக்கொண்டு
கூசாமல் கற்பமதைக் கொண்டுதேறே. 223

தேறும்வகை சொல்லுகிறேன் கருவைக்கேளு
சிவசிவா சவுக்கார வேதாந்தத்தை
கூறுமவித மென்னவென்று மலைக்கவேண்டாம்
குருவருளால் பூரணமாய் வந்தசத்தம்
சாருகிற சத்தமடா அடங்கிநின்ற
சாயுச்ய பதவியுட மூலம்வாங்கி
வேறுகூ றாகிமண் விண்ணோடொக்க
வேதாந்த பூரணமாய்ச் சமாதுவையே. 224

வையடா சமாதியொரு மூலந்தன்னில்
வைத்தசவுக் காரமதில் அனலுமேறி
செய்யடா மூன்றுமொன்றா யுப்பாய்நிற்கும்
வேதாந்த முப்பூவை வாங்கிமைந்தா
கய்யடா தவறாமல் பழச்சார்விட்டு
கருவான வீரமொடு காரங்கூட்டி
செய்யடா சாரமொடு சித்தேரண்டம்
சிவசிவா சரியிடையாய்ச் சேர்த்துப்பாரே. 225

சேர்த்துநீ பார்த்திடவே நவமூலந்தான்
சேர்ந்துஒன்றாய்த் திரண்டுசவுக் காரமாச்சு
போ்த்துகின்ற காரம்நவச் சாரமாச்சு
பொருளான சாரமதில் காரமாமே
கார்த்துநன்றாய் ரவியினிடம் வைத்துப்பார்த்தால்
கருணையுள்ள காரமடா அதிககாரம்
பார்த்துநீ மண்டலமுன் றானபோது
பக்குவத்தை யென்னசொல்வேன் பணிந்துபாரே. 226

பணிந்திருந்த சமாதுசவுக் காரந்தன்னை
பரைஞான கேசரியைப் பூசைபண்ணி
கனிந்ததொரு காரமதை யெடுத்துப்பாரு
கடுங்கார மானசவுக் காரமாகும்
அணிந்ததொரு சாரமதை மேருக்கேத்தி
அருள்பெருகுங் குருவெனவே பணிந்துபோற்றி
துணிந்துமனக் காடகற்றி அரிவினூடே
துலங்கிநின்ற பூரணத்தைத் தொழுதுபோற்றே. 227

## பூரண மெழுகு

போற்றுவதுக் கின்னமொரு காரங்கேளு
பூரணமாய்ப் பூரணத்தைப் போதவாங்கி
பார்த்திபனே அதுக்குநிகர் காரம்பூரம்
பதிவான நவாச்சாரஞ் சீனக்காரம்
வேற்றுமையில் லாதசத்தி உப்போடொக்க
விபரமுட னறுவகையு மொன்றாய்க்கூட்டி
பூத்தமலர் வாசனைபோல் சித்தேரண்டம்
பூரணமாய் நின்றகரு தன்னாலாட்டே. 228

ஆட்டிநன்றாய் மடிந்தபின்பு மைந்தாகேளு
அனலோ ரவியினிடம் அமத்திவைத்து
தாட்டிகமாய் நிவர்த்திக் காய்ந்துதானால்
சச்சுதா நந்தமென்ற மெழுகுமாகும்
நாட்டியந்த மெழுகெடுத்து வாலைதன்னை
நயந்துரசம் வாங்கிமெழு கதனிற்சேர்த்து
சூட்டிநன்றாய் பிசைந்துருட்டி அனலில்வைக்க
சூடேறி அமுர்தரச மெழுகுமாமே. 229

ஆமெனவே மெழுகெடுத்து மேருக்கேத்தி
ஆதிசதா நந்திபத மன்பாய்க்கொண்டு
ஓமெனவே ரேசகத்தால் பூரகமேபண்ணு
ஒருமனதாய்க் கும்பகத்தி லுறுதிபண்ணி
தாமதமு ராசதமு விட்டுநீங்கி
சாத்துவித குணத்துடனே சார்ந்துகொண்டு
வாமவளர் பூரணமே யென்றுபோற்று
வணக்கமுடன் பணவிடைதா னெடுத்துக்கொள்ளே. 230

எடுத்துமனப் பூரணமாய்க் கொண்டுநீயும்
இன்பமுடன் மூலமதில் வாசிபூட்டி
அடுத்தமனை சுழினைநந்திக் கரிவித்தேதான்
ஆதியென்ற கற்பூர தீபந்தன்னை
தொடுத்தந்த அகண்டவெளி தன்னில்நின்று
சுகமாகச் சிவயோகஞ் செய்துமைந்தா
நடுத்தரமாய் நின்றமணி பூரவீட்டில்
நந்திவளர் செந்தீயை நாடிப்பாரே. 231

நாடிப்பார்த்தறிய வென்றால் திறமோயில்லை
நரசென்மம் நீர்க்குமிழி யானதேகம்
தேடிப்பா ரித்தேகந் தேவரூபம்
சிவசிவா கடைகெட்ட சென்மஞ்சென்மம்
வாடிப்போய் மதிவாழ்ந்து ரவியுந்தேய்ந்து
மண்ணோடே மண்ணாக மறைந்தேபோகும்
ஆடிப்போய் மறைந்தாலு மறிவினோடே
அகண்டவெளி தனிலிருப்ப தருமைகாணே. 232

அருமையென வரிந்துமன துரிமையாக
அந்தறிவு பூரணமா யிருளைக்காண
உருமையுட னருட்குருவைத் தேடிப்பார்த்து
உண்மையுட னக்குருவைக் கண்டாயானால்
திருவான தசதீட்சை வைத்துநல்ல
சிவசத்தி பூசையுட திறமுஞ்சொல்லி
தருவான கற்பகமு மமுர்தமீய்ந்து
தானவனாய் நின்றநிலை தனதென்பாரே. 233

### சிவத்தின் பேர்

தனதாகச் சிவமகிமை தன்னைக்கேளு
தானவனாய் நின்றபொருள் அகாரமாகும்
மனதாக நின்றதொரு மதியாம்விந்து
மருவிநின்ற சாரமென்றும் அமுர்தமென்றும்
கனமான ஊசிநீர் செயநீரென்றும்
கருவான உதகநீர் தண்ணீரென்றும்
குணமாக இன்னம்வெகு பேர்களுண்டுங்
குறித்தசிவம் அகாரமதைக் கொண்டுதேறே. 234

### சத்தி மகிமை

தேறுவது மூலமதில் மனதைநாட்டி
சின்மயமாஞ் சற்குருவைத் தியானம்பண்ணி
மாறுவித மறிந்துசிவ யோகஞ்செய்தால்
மகத்தான மாய்கையெல்லா மாண்டுபோகும்
கூறினதோர் மந்திரமுங் குறியுஞ்சித்தி
குருவான போதமதுக் குயிருமாகும்
வேறுவித மொன்றுமில்லை முதலாநதீட்சை
மெஞ்ஞான தீட்சையடா அகாரமாமே. 235

## சத்தியின் பெயர்

ஆமென்ற சிவமகிமை அதிகஞ்சொன்னோம்
அரகரா சத்தியுட பேரைக்கேளு
ஓமென்ற தீட்சையடா அதீததீட்சை
ஒடுங்காத மனோன்மணியென் றதர்க்குப்பேரு
தாமென்ற நாதமடா சத்தியுப்பு
தயங்காத கரிசலென்றுங் காரமென்றும்
நாமென்ற கெந்தமென்றும் மண்தானென்றும்
நாட்டமுட னின்னம்வெகு பேருண்டாமே. 236

உண்டான சத்தியடா பெருமைக்காரி
ஒடுங்காத வாசமுள்ள ஓமசத்தி
கண்டாலோ மனம்பதருங் கைகால்கூசும்
கற்புடைய மங்கையடா யேகரூபி
வண்டணிசேர் மாதங்கி தன்னைத்தானே
மனதுரிமை யாகவேநீ பூசைசெய்தால்
சண்டாள தத்துவங்கள் தானேபோகும்
தானவனாய் நின்றகுறி காட்டுந்தானே. 237

தானான சத்தியுட வலுமைசொன்னேன்
சதாநந்தி யானதொரு வாலைகேளு
ஊனான வாலையடா மவுனரூபி
ஓங்காரி ரீங்காரி உரிமைப்பிள்ளை
தேனான திருவென்றும் செந்தீயென்றும்
தீட்டான தீட்டருக்குஞ் செல்வியென்றும்
கோனான காலென்றும் நன்மையென்றும்
கூர்மையுள்ள வேதாந்தி யென்றும்பாரே. 238

பேர்பெரிய அமுர்தமென்றுஞ் செந்தேனென்றும்
பெருமைகொண்ட விசமியென்றும் பேச்சியென்றும்
சீர்பெரிய திருவென்றும் திருநீரென்றும்
திறமான செந்தூரத் திலதமென்றும்
நேர்குறியாய் நின்றகருச் செயநீரென்றும்
நிசமான திருநாம மெத்தவுண்டு
ஆரறிந்து அவள்பதத்தைப் பூசைபண்ண
அரிதரிது கோடியிலே ஒருவன்றானே. 239

ஒருவனவ னவன்றானே ஒருவனாகி
ஒடுக்கமென்ற நிலையறிந்து உறுதிபெற்று
அருபமென்ற மணிவாசற் குள்ளேபுக்கி
ஆதியந்த நடுவணையி னருகேசென்று
துருவமென்ற அத்துருவங் கிரியிற்சென்று
சோதியென்ற தீபவொளி வெளியிலேகி
பருவமுட னின்றுகெதி கொண்டுநல்ல
பங்கயத்தின் பூரணத்தை பதிவாய்க்கொண்டே. 240

கொண்டுமனங் கண்டுறுதி கொள்ளவேணும்
குருவான பெரியோரை வணங்கவேணும்
நின்றுகெதி கொண்டு அந்தம் நிலைக்கவேணும்
நிலையான நிலையறிந்து வாசிபூட்டி
மன்றில்வளர் திருநடனம் பார்க்கவேணும்
மதிகதிரில் நின்றகுறி காணவேணும்
அண்டமுக சரிமாது தன்னைப்போற்றி
ஆதிசிவ சத்திபத மறிந்துகொள்ளே. 241

## பூரணத்தின் பெயர்

அறிந்தமட்டுந் தெரிந்துரைத்தேன் வாலைதன்னை
ஆதியென்ற பூரணத்தி னருளைக்கேளு
வரிந்து மனங் குவிந்துசிவ யோகஞ்செய்யும்
வரிசையுள்ள பூரணமாம் வழலையென்றும்
விரிந்தமதி ரவியான சுழினையென்றும்
வேதாந்த நவநீத வெண்ணையென்றும்
மறைந்துமதி குறைந்துவளர் போதமென்றும்
மணிநாதஞ் சொலிக்குகின்ற மாடந்தானே. 242

தானான மாடமென்றுங் கூடமென்றும்
தருவான அண்டகேசரி தானென்றும்
கோனான கொடுமுடியாம் பொதிகையென்றும்
குருவான பீடமென்றுங் குருக்களென்றும்
தேனான சோதியென்றுந் தீபமென்றும்
தெவிட்டாத அமுர்தரச வர்க்கமென்றும்
காணாத கமலமதாய் நின்றபோதம்
கமலமலர்த் தமுர்தபூ ரணந்தான்பாரே. 243

## பூரணத்தின் மகிமை

பூரணமாய் நின்றகுரு பிரம்மந்தன்னைப்
புத்திகொண்டு சத்திசிவ பூசைபண்ணி
காரணமாய் நின்றதொரு வாலைபூசை
கருவேற உருவேறக் கருணைபூண்டு
மாரணமா யுருவேறிச் சித்தியானால்
மகத்தான பூரணத்தில் மனதைநாட்டி
சீரணமாய் நின்றசெடந் திறக்கவேண்டி
சிவசிவா பூரணத்தைத் தினமுங்கொள்ளே. 244

கொள்ளுவது பூரணத்தை வாங்கிமைந்தா
குருவான பிரம்மத்தைக் குணமாய்ப்போற்றி
நல்லுரவால் பணவிடைகால் கொண்டுதேர்ந்தால்
நரசென்ம மல்லவடா தேவரூபம்
உள்ளுணர்வாய் நின்றகலை வாசிபாரு
ஒடுக்கமென்ற நிலைதனிலே ஒடுங்கிநின்று
தள்ளுவது என்னவென்றால் மைந்தாகேளு
தனித்த புளி எள்ளுடனே தள்ளுதள்ளே. 245

## தள்ளும் பொருள்

தள்ளடா தாம்பூல மீனிறைச்சி
சத்துருவாய் நின்றதெல்லாந் தள்ளவேணும்
அள்ளடா சொல்லுகிற புத்திகேளு
அருமையுடன் கற்பவகை கொள்ளும்போது
கொள்ளடா பாலுடனே அமுர்தரசவர்க்கம்
கொண்டுமன துரிமையினால் குருவைப்போற்றி
நில்லடா சுழினையென்ற கமலவீட்டில்
நிரைஞ்சனமாய் நின்றதொரு தீபம்பாரே. 246

தீபமென்ற ஒளியில்நின்று வெளியிலேறி
செங்கமலத் தமுர்தரசத் தேனைவாங்கி
தாபமென்ற தாகமது தெளியவேதான்
தன்னமுர்தங் கொண்டுநிலை தன்னைக்கண்டால்
கோபமென்ற கொடும்பிணிகள் வெந்துபோகும்
கூத்துவனு மாண்டிடுவான் குறியைப்பாரு
சாபமென்ற சூழ்வினைக ளத்துப்போகும்
சத்திசிவ பூசையைநீ மறந்திடாயே. 247

மறவாத நெறிபெற்ற சற்குருவைக்காத்து
மந்திரபஞ் சாட்சரத்தின் மகிமையாலே
திறமான சடாட்சரத்தின் பெருமைகேளு
சிவசிவா ஆதியென்று மனாதியென்றும்
உறவான பிரமமென்றும் பிண்டமென்றும்
உத்தசிவ சத்தியென்றும் உலகமென்றும்
பறமான தேசியென்றும் வாசியென்றும்
பக்திகொண்ட அண்டகே சரிதானென்னே. 248

### பிண்டத்தின் விபரம்

என்னவே யின்னம்வெகு பேர்களுண்டு
என்மகனே புத்தியினா லறிந்துகொண்டு
சொன்னதொரு கருமானப் பொருள்தானென்னே
சொல்லறிந்து சொல்லுகிறேன் பிண்டம்பிண்டம்
மன்னவனே பிண்டமென்றால் மலைக்கவேண்டாம்
மந்திரகலை வாலைமலர் பூக்குங்காலம்
முன்னமே அக்கால மறிந்துமைந்தா
முத்திகொண்ட நாதமதில் விந்தைப்பாச்சே. 249

விந்துநிலையறிந்து விந்து பாயும்காலம்
வேதாந்த நாதத்துக் குயிருமாகும்
சொந்தமுடன் திரண்டுருண்டு மணியுமாகிச்
சோதிமதி யானதுவும் பிறையுமாகி
வந்தமதி பிறையதுவும் வட்டமாகி
வட்டமது திரண்டுருவாய் மண்ணுமாகி
அந்தமுள்ள மண்ணுகளி யுப்பாய்நின்று
ஆதியந்தப் பொருளான பிண்டமாச்சே. 250

ஆச்சென்ற பிண்டமடா உப்புஉப்பு
அடங்கி உருத் திரண்டஉப்பு அப்புனாலே
பேச்சென்ற சத்தமடா அடங்கிப்போச்சு
பிரணவமாய் நின்றபொரு ள்மவுனமாச்சு
மூச்சென்ற கலைக்யான முடிவுமாச்சு
முடிந்தகலைக் யானமதை யென்னசொல்வேன்
நீச்சென்ற வாசிசிவ யோகஞ்செய்யும்
நிசமான சுத்தசவுக் காரமாச்சே. 251

* வரி 15ல் வாலைமலர், வழலைமலர் என்றும் பாடமாம்.

காரமென்றால் காரமதில் ரவிதான்சேர்ந்தால்
காயாதி கற்பமெனச் சொல்லலாகும்
வீரமென்றும் விஞ்சையென்று மதற்குபேரு
வேதாந்த பூரணமென் றிதர்குப்பேரு
பூரமென்ற கற்பூர தீபமென்றும்
பூமிவளர் நாதமென்றும் பெண்தானென்றும்
சாரமென்ற கற்பகமாம் விருச்சமென்றும்
சார்வான காமதே னென்றும்பேரு. 252

பேரான காமரச பற்பமாகி
பெருமைகொண்ட பற்பமதை மைந்தாநீயும்
நேரான கலையறிந்து வாசிபூட்டி
ரேசகமாம் பூரகமே செய்துகொண்டு
சீரான கும்பகத்தில் மனதுவைத்து
சிவசிவா காயாதி கற்பம்வாங்கி
மாராம லந்திசந்தி பணவிடைகால்கொண்டால்
மார்க்கமுள்ள வஸ்துவடா பிண்டந்தானே. 253

பிண்டமதாய் நின்றகுரு நாதந்தன்னைப்
பெருமையதாய் மண்டலமே கொண்டுதேர்ந்தால்
அண்டகே சரிமீது தானாய்நின்று
ஆனந்த போதமதி னருளைக்காட்டும்
எண்டிசையுஞ் சென்றுவிளை யாடநல்ல
என்மகனே கெவுணமதுக் குறுதியாகும்
கண்டதொரு கண்காச்சி மகிமையாலே
காரியமாய்த் தூரதிஷ்டி கருதலாமே. 254

கருதலா மூலமுத லாறாதாரம்
காலடங்கு மேல்மூல வன்னிவீட்டில்
மருவலா மனதுகந்து வாசிபூட்டி
வாசமுள்ள கற்பூர தீபந்தன்னில்
அருபமாய் நின்றஒளி வெளியிலேகி
ஆனந்த மதியமுர்த மதுப்போற்கொண்டால்
துருவமென்ற புருவமையக் கமலவீட்டில்
துன்பமற்று என்னாளும் வாழலாமே. 255

வாழ்வதற்கு ஒன்றுமுத லலைந்துஞ் சொன்னேன்
வரிசையுள்ள பஞ்சகண தீச்சையாச்சு
ஆழ்வதற்கு அஞ்சுநிலை பஞ்சபூதம்
அறிந்துமனங் கொண்டவனே யவனேசித்தன்
கால்வலுக்கும் மேல்வலுக்குங் கமலக்கண்ணு
கண்துலங்கும் விண்துலங்குங் காச்சிகாணும்
தாழ்வதற்குக் காலறிந்து மேலேநின்றால்
தன்மையுள்ள கெவுனமணி தான்தானாமே. 256

தானான கெவுனமணி தானாய்நின்ற
தகமையறிந் துறுதியுடன் தனதாய்க்கேளு
தேனான நாதமடா தேவிநாதம்
தேவிமனோன் மணியீன்ற நாதந்தன்னில்
கோனான குருவிந்து சரியாய்ச்சேர்த்து
கும்பமென்ற கமலரசத் தன்னாலாட்டி
ஊனான நாதவிந்து ஒன்றாய்ச்சேர்த்து
ஓமுடிந்து திரண்டுஒரு மணியுமாச்சே. 257

சுரூப ரச மணி

ஆச்சப்பா அம்மணிதான் சித்தியாக
ஆதியென்ற அண்டமடா ஞானியண்டம்
மூச்சடங்கிக் கட்டிமெழு காகுதற்கு
முன்சொன்ன சவுக்கார உப்புவாங்கி
பாச்சப்பா அதினுடனே காரசாரம்
பதியவைத்துக் கல்வமதில் வாய்நீர்விட்டு
மூச்சப்பா விரசுகொண்ட அரைத்துஅந்த
நிசமான அண்டமதில் கவசம்பண்ணே. 258

பண்ணியதோர் கவசமதை வலுக்கச்செய்து
பருதியன லேறநிதம் பதிவாய்வைத்து
கன்னிமயேஷ் பரிதனையே பூஜைபண்ணி
கருணைபெற மண்டலஞ்சென் றெடுத்தாயானால்
வன்னிநிக ரண்டமது கட்டிநல்ல
மகத்தான மெழுகாக நிற்குமைந்தா
உன்னியதோ ரம்மெழுகை மணிக்குப்பூசி
உறுதியுள்ள தீபமதில் வாட்டிப்பாரே. 259

வாட்டிப்பார் கற்பூர தீபந்தன்னில்
    மணிகெவுன சுருபமணி யாகுமைந்தா
ஆட்டிப்பார் சுருபமணி யாட்டைப்பார்க்க
    ஆதியந்தங் காட்டுமடா அருபசித்தி
பூட்டிப்பா ரந்தமணி யென்னசொல்வேன்
    புதுமையுட னந்தமணி பதினாறுசெய்து
சூட்டிப்பார் பட்டுநூல் தன்னிற்கோர்த்து
    சுருதியுட மந்திரத்தைச் சுட்டிப்பாரே. 260

பாரப்பா மந்திரத்தை அறிந்துநீயும்
    பத்திகொண்டு யுத்தியினா லுருவேசெய்தால்
பேரப்பா கொண்டுநின்ற அச்சரங்கள்
    பிசகாமல் சித்திமுத்தி யாகும்பாரு
சாரப்பா சதாகால முருவேசெய்தால்
    தானேதான் பிர்ம்மதாய்த் தரணிமீதில்
வீரப்பா கொண்டநோ யாளருன்னை
    வேண்டினால் சகலநோய் விட்டுப்போமே. 261

போமடா உனதுபதங் கண்டபோதே
    பொல்லாத மாய்கையெல்லாம் நில்லாதய்யா
ஓமடா இன்னம்வெகு சித்தியுண்டாம்
    உலகதனி லுயிர்பயிர்கள் உன்னைக்கண்டால்
ஆமடா ஆதிகுரு வென்றுசொல்லி
    அடிதொழுது பணிந்திடுவா ரய்யாஉன்னை
நாமடா அவனாக அவனுமாக
    நல்லபதங் கிட்டுமடா யின்னங்கேளே. 262

இன்னங்கேள் சுருபமணி தன்னைவாங்கி
    ஏகாந்த மானதிரு வாலைநாதம்
வின்னமில்லா வாலையவள் பதமேபோற்றி
    வேதாந்த நாதமதை விரும்பிவாங்கி
முன்னமே சொன்னகுரு சுன்னம்போட்டு
    முக்கியமாய்ப் பார்த்திடவே தெளிந்துநல்ல
தன்னமுர்த ரசம்போலே தெளிந்துநிற்கும்
    தாயான அமுர்தமதைத் தானேவாங்கே. 263

வாங்கியந்தச் சொரூபமணி தனக்குமைந்தா
வரிசையுட னமுர்தரசத் தேனையூட்டி
தீங்கில்லா ரவிதனிலே வைத்துப்பாரு
சிவசிவா அந்தரச மணியேகொள்ளும்
பூங்கமல மாதுதிரு மகிமையாலே
புருஷமுள்ள சொரூபமணி என்னசொல்வேன்
பாங்குடைய சுரூபமணி கமலிமணியாகும்
பரமபத கமலிமணி பெருமைகேளே. 264

கேளடா சுரூபமணி அமுர்தந்தன்னை
கிருபையுடன் கமலித்தா யாலேமைந்தா
கோளடா யில்லாத கமலிமணியாச்சு
கொள்கையுள்ள கமலிமணிப் பெருமைகேளு
வாளடா அந்தமணி தன்னைவாங்கி
வரிசையுடன் ரேசகபூ ரகமுஞ்செய்து
காலடா விரசுகொண்டு கனிவாயூணி
கமலமணி நாவடக்கஞ் செய்துகொள்ளே. 265

## அருபமணி கமலிமணியின் பெருமை

கொள்ளடா நாவடக்கஞ் செய்துகொண்டு
குருவான குருபதத்தில் வாசிபூட்டி
நில்லடா சுழினைநடுக் கமலமீதில்
நீமகனே கருத்துவைத்து நின்றாயானல்
உள்ளடா வாசிநின்று உயரத்தூக்கும்
உத்தமனே அந்தரச மணியின்வேகம்
சொல்லடா சொல்லுதற்கு நாவோயில்லை
சுருபமென்ற கமலியுட பெருமைதானே. 266

பெருமையின்னஞ் சொல்லுகிறேன் மைந்தாகேளு
பேர்பெரிய கமலிமணி கையில்வாங்கி
உருமையுடன் சபதங்கள் செய்துகொண்டு
உறுதியுள்ள மவுனமதில் நின்றுகொண்டால்
வருமையுள்ள நோயாளர் வந்தாரானால்
வகையறிந்து ரேசகமே செய்துபோடு
சிருமையொடு வறுமையெல்லாஞ் சிதறிப்போகும்
சிவசிவா கமலியுட திறந்தான்பாரே. 267

## வாசிமகிமை

திறமாக நின்று அந்த மனையிற் சென்று
தீயான ரவிமதியுஞ் சேர்ந்தபாகம்
பரமான தேசியடா அம்மாவாசி
பத்திநின்ற திருவாசி யேகாதேசி
உறமாக நின்றதொரு யேகாதேசி
உகந்த சதுர்த்தேசியிலே உறவாய்நின்று
சரமான சாபமதாய்த் தேசியாகி
தான்வாசி கொண்டபர தேசியாமே. 268

தேசியென்ற குதிரையடா வாசியாகி
சிவசிவா சதுரகிரி வட்டமேறி
நாசிமுனை மீதில்வளர் நாதன்தானும்
நடுவீதி சென்றுவலம் நாடும்போது
ஓசையென்ற சிலம்பொலிதா னுள்ளேவாங்கி
ஒன்றுபத்தாய் நின்றுகலைக் யானதேவி
பேசியசொல் லெழுத்துவகை யென்னசொல்வேன்
பெருமையுட னெட்டுரெண்டும் பத்தென்றாரே. 269

பத்தென்று சொன்னசிவ சத்திபாதம்
பயபத்தி யாய்மனதில் பதிவாயெண்ணி
உத்தமொழி சுத்தமென அந்திசந்தி
உருப்படுத்தித் திருவருளை யுண்ணிக்கண்ட
சித்தமென்றன் பாக்யமடா முத்திமோச்சம்
சின்மயமாய் நின்றபொருள் தன்னைக்கேளு
சுத்தமுள்ள சுழினையடா விந்துவட்டம்
சுருதிபொரு ளானசின் மயமாம்பாரே. 270

பாரான சின்மயமே விண்மயமாய்நின்று
பருதிமதி சுடரெனவே பருவமாகி
நேராகி நின்றதுவு மெங்குந்தானாய்
நிரஞ்சனமாய் நிர்மலமாய் நீதானென்று
கூரான சத்தமுமாய் சுத்தமாகி
மீறினதோர் நாதமடா மவுனப்பிள்ளை
பேரான பிள்ளையடா மவுனநாதம்
பெருமையுள்ள பூரணம்நா லஞ்சம்பாரே. 271

## சத்தி மெழுகு

அஞ்சாகி நின்றபஞ்ச லவணமப்பா
ஆரறிந்து கரையேறி நீஞ்சிப்பார்த்து
நஞ்சாகி மண்செலமாய் நின்றஉப்பை
நாரிமனங் குன்றாமல் நயந்துவாங்கி
துஞ்சாத பழச்சாறு முடியுங்கூட்டி
சுத்தமுள்ள உப்பிலிதைச் சேர்த்துநன்றாய்
தஞ்சமென மனதிலெண்ணிப் பாகம்பண்ணி
சத்தியெனு முப்பதுவுஞ் சமைந்தவாறே. 272

சமைந்தசத்தி யானஉப்பை மைந்தாகேளு
தன்மையுட னடிமுடியு மொன்றாய்க்கூட்டி
அமைந்தமெழு காகும்படி கல்வத்திட்டு
அஞ்சாறு சாமவரை நன்றாயாட்டி
குமைந்தமெழு காகுபதந் தன்னைப்பார்த்து
குருவான ஞானியண்டக் கருவைவிட்டு
நமைந்துவரும் படியாகப் பிசைந்துநல்ல
நாதமது விட்டுரவி முகத்தில்வையே. 273

வையப்பா மண்டலமூன் றானபின்பு
மகத்தான சத்தியுப்பை யென்னசொல்வேன்
நெய்யப்பா துஞ்சிநின்ற அமுர்தவெண்ணை
நேரான பூரணமாய் வந்தபோதம்
செய்யப்பா செங்கமத் தமுர்தபோதம்
சிவசிவா பணவிடைதான் கொள்ளும்போது
மெய்யப்பா தளறாது வச்சிரகாயம்
வேதாந்த கற்பமடா கற்பந்தானே. 274

தானான கற்பமடா விஞ்சைமூலம்
சமரசமாய்ச் சொல்லுகிறேன் மைந்தாகேளு
மானான மங்கையடா மதனரூபி
மகத்தான சத்தியடா மார்க்கக்காரி
தேனான மொழியுடைய தேவிவாலை
தேகமடா செண்பகப்பூ வாசமுள்ளாள்
ஊனான சுவைமாது பாகமுள்ளாள்
உத்தமியாங் கற்புடைய மங்கைதானே. 275

தானேதான் தானவளாய் நின்றமாது
சகலமதி யுள்ளசிவ சத்திமாது
தேனேதான் மொழியுடைய சிறுபெண்மாது
செம்மையுள்ள சுத்தமதாய் நின்றவாலை
வீணேதான் திரிந்துமதி போகாமற்தான்
வேதாந்த வாலைதன்னைத் தேடிப்பார்த்து
ஊனேதான் மனம்பதிய ஊணிப்பார்த்து
உருமையுட னவள்பதத்தைப் பூசைபண்ணே. 276

பண்ணப்பா மாதுமனங் கனியவேதான்
பரமான அதிரசங்கள் பால்பழங்கள்
நண்ணப்பா அவள்மனது மெய்க்கவேதான்
நயந்துஉப சாரமது நன்றாய்ச்செய்து
முன்னப்பா நீயிருந்து பூசைபண்ணி
முறமைநெறி தவறாமல் கார்த்துமைந்தா
விண்ணப்பா நோக்கியிருந் தமுர்தம்வாங்கி
வேதாந்த சாரமெல்லாம் மெய்யில்பூணே. 277

## வியாதி வருங்குணம்

மெய்யான வேதாந்த சாரந்தன்னை
மேலான சற்குருவைத் தியானம்பண்ணி
அய்யனே புலத்தியனே பூசைசெய்ய
ஆதார மூலமதி லனலோமீறி
மையமென்ற சுழினையடா விந்துவிந்து
மகத்தான பிரமமென்ற கபாலந்தன்னில்
பையவே அனல்மீறிச் சூடுகொண்டு
பனிநீர்போல் சொலிக்குமடா சிரசில்தானே. 278

தானேதா நீரேறிக் கண்ணில்தாக்கி
தணலான அக்கினிபோல் கடுப்புமீறி
ஊனான தேகமதில் சூடுகொண்டு
உறுதியுள்ள வாய்வறண்டு மலஜலங்கள்
வீணேதான் தேகமதில் சிக்கிக்கொண்டு
மெய்யுளைச்சல் கையசதி விந்துபாழாம்
தோணாம லிச்சலனம் வந்துதென்று
சுகமான கற்பமதை மறந்திடாதே. 279

### சிரசு வியாதிக்குப் பஸ்பம்

மறந்துமதி போகாமல் மைந்தாகேளு
வாராத வியாதிகள்தான் வந்துதானால்
சிறந்தகரு அண்டமதின் தோடுவாங்கி
சிவசிவா தண்ணீரில் முப்பூசேர்த்து
பிறந்த அண்டத் தோடதனைச் சுத்திபண்ணி
பெருமையுடன் தானெடுத்துக் கல்வத்திட்டு
பறந்துவிடுங் கெந்தகத்தைப் பத்துக்கொன்று
பாச்சிநன்றாய்ச் செயநீரி லரைத்திடாயே. 280

அரைத்துநன்றா யுருட்டியதை வட்டுப்பண்ணி
அப்பனே புடம்போட வெளுத்துநீரும்
திரத்துடனே அதையெடுத்து வைத்துக்கொண்டு
சிவசிவா அந்திசந்தி கொண்டுதேறு
வெரித்தபித்தச் சூடுடனே கபாலச்சூடு
மேலான நேத்திரத்தில் நின்றசூடு
உரத்துடனே நின்றதொரு வாய்வெல்லாந்தான்
ஒழுடிந்து போகுமடா உண்மைபாரே. 281

### சிரசு முதல் சகல நோய்க்கும் தலைமுழுக நெய்

உண்மையுட னின்னமொரு சாந்தங்கேளு
உறுதியுள்ள பசுவிநெய் படிதானொன்று
நன்மையுள்ள வால்மிளகு பலந்தான்ரெண்டு
நடுவான நீரதனா லாட்டிக்கொண்டு
தன்மைபெற அந்நீரா லரைத்துநன்றாய்
தான்பசுவி நெய்யோடே சேர்த்துமைந்தா
உண்மையுட னடுப்பேற்றிப் பதத்தில்மைந்தா
உறுதியாய் நெய்யதனை வடித்துக்கொள்ளே. 282

வடித்துமிக வைத்து நன்றாய் வாரந்தோறும்
வரிசையுடன் முழுவரக் குணத்தைக்கேளு
இடித்துவருங் கால்கைவலி நயனச்சூடு
இருமலொடு வாய்வுகளு மெடுபட்டோடும்
அடுத்ததொரு நெஞ்செரிவு அகன்றுபோகும்
அண்டமெனும் பஸ்பத்தா லகன்றுதய்யா
தொடுத்ததொரு தயிலமொடு பஸ்பம்பண்ணி
சுகமான வாலையை நீ பூசைபண்ணே. 283

பண்ணப்பா வாலைபதம் பூசைபண்ணி
பரமான கேசரியை மனதுட்கொண்டு
விண்ணப்பா தானோக்கித் தவமேசெய்து
விருதுபெற்ற செயநீர்தா னொன்றுகேளு
நன்னப்பா ஊர் வளையஞ் சென்றுவந்து
நடுவான தாவடியாங் கொடியைப்பற்றி
முன்னப்பா நின்றநிலை கொடிங்கட்டி
முத்திபெற வீரமொடு பூரம்வாங்கே. 284

வீரமொடு பூரமதும் ரெண்டுங்கூட்டி
விரிவான கொடிக்கிநா லொன்றுசேர்ந்து
பேர்பெறவே சமாதுவைத்து மண்டலமேசென்றால்
பிரியமுடன் மூன்றுமொன்றா யடியில்சேர்த்து
நேருகூ ருகவொரு பீங்கான்தன்னில்
நீவைத்து வாய்மூடி நிலத்தில்மைந்தா
காரமுள்ள நீராகிப் பெருகிநிற்கும்
கருவான செயநீரைப் பதனம்பண்ணே. 285

பதனமதாய்க் குப்பிதனி லடைத்துமைந்தா
பத்தியுடன் சற்குருவின் பாதம்போற்றி
விதனமதைத் தானிறுத்து அந்தநீரில்
வேதாந்த சவுக்காரக் குருவில்மைந்தா
பதனமதாய்ப் பணவிடைகா லெடுத்துப்போட்டு
பக்குவமாய் மண்டலமே கொண்டாயானால்
நிதமாக சகலவியா தியுமேநீங்கி
நின்தேகஞ் சித்தியடா நிசந்தான்பாரே. 286

## செயநீர்

நிசமாக ஒறாண்டு கொடியைவாங்கி
நீமகனே புத்தியினால் செய்துபாரு
வசமான அண்டமொடு வீரம்பூரம்
மகத்தான காரமுடன் சரியாய்ச்சேர்த்து
நிசமான அண்டநீர் தன்னாலாட்டி
திறமாக ஆட்டியதை வட்டுப்பண்ணி
கசகாமல் மண்சீலை வலுவாய்ச்செய்து
கருத்துறவே புடம்போடச் சுண்ணமாமே. 287

ஆமென்ற சுண்ணமதில் பத்துக்கொன்று
அருள்பெருகுஞ் செயநீரில் ஒன்றுசேர்த்து
நாமென்ற ஆணுவத்தால் பொடியைப்பண்ணி
நலமான பீங்கானில் வைத்துப்பாரு
தாமென்ற சாரமதால் நீரதாச்சு
தடையில்லா நீரதனை வடித்துமைந்தா
ஓமெனவே குப்பிதனில் பதனம்பண்ணி
உண்மையென்ற சரக்குகளில் சுருக்குத்தாக்கே. 288

சுருக்கறிந்து சுருக்கிடவே சரக்கெல்லாந்தான்
சுகமாகக் கட்டுமடா சுருதிமூலம்
கருக்கண்டு செய்தவனே அவனேசித்தன்
கருணையுடன் மூலமதில் கருத்துவைத்து
உருக்கண்டு வேதைமுகந் தன்னைப்பாரு
உறுதியுள்ள பூரணநூல் தன்னைப்பாரு
பெருக்கமுடன் பூரணநூல் தன்னைக்கார்க்கப்
பெருமையினால் தயிலமொன்று பேசுவேனே. 289

## தயிலம்

பேசவொண்ணா மவுனியடா சிறுபெண்வாலை
பின்னறியாள் முன்னறியாள் பிராணநாதம்
பாசமது தான்விலகும் பறைநாதந்தான்
பசளையென்ற கரும்பசளை சுத்தவெள்ளை
தேசமெல்லாஞ் சுத்தினதால் காணப்போமோ
சிக்குவது வெகுகடினஞ் சிக்கிக்கொண்டால்
நேசமுட னதுக்குநிகர் காரசாரம்
நிசமான வீரமொடு பூரங்கூட்டே. 290

கூட்டுவது சத்திசிவ மதனப்பூடு
கூர்மையுள்ள பூடுநிகர் சத்திசேர்த்து
நாட்டுவது சரக்குவகை பத்துக்கொன்று
நயமாகத் தாணிடித்துப் பாண்டத்திட்டு
ஆட்டமுடன் வாய்மூடித் தமர்தான்செய்து
ஆனகுழித் தயிலமதை யன்பாய்வாங்கி
தேட்டுடனே வாங்கியதோர் தயிலந்தன்னை
சிக்கெனவே குப்பிதனில் வைத்துப்போற்றே. 291

போற்றுவது பூரணநூல் தன்மைமைந்தா
புத்தியுடன் தானெடுத்துப் பூசைபண்ணி
பார்த்துமகத் துறுதியினா லாதியந்தம்
பக்திகொண்டு புத்தியினால் பார்த்துநீயும்
காத்துமனக் கண்ணாலே விண்ணைநோக்கி
கமலமென்ற சுழினையிலே கருத்தைவைத்து
பூத்தமலர் வாசனைபோல் வாசிபூட்டி
பூரணமாய் கற்பூர தீபம்பாரே. 292

தீபமென்ற சிவஞானக் கொழுந்திலந்த
திருவான தயிலமதில் தினந்தாநீயும்
தாபமென்ற பசிதீரத் தன்னைப்பார்த்து
தயிலமதைப் பணவிடைதான் கொண்டாயானால்
கோபமென்ற கொடுமைகள்தான் வெந்துபோகும்
குருவான முப்பூவில் கொண்டாயானால்
சாபமென்ற சஞ்சலங்கள் தானேபோகும்
சாயுச்ச மோச்சகெதி தருகுந்தானே. 293

## பரகெதியறிய

தானான மோச்சகெதுக் கென்னவென்றால்
தரணிதனி லவரவர்செய் தர்மத்தாலே
நானான அகம்போக்கித் தானேதானாய்
நடுவான பூரணத்தால் வாழ்ந்துகொண்டு
தேனான மதியமுர்தங் கொண்டுமைந்தா
சீவகற்ப காலவரை யிருந்தாலுந்தான்
ஊனான தேகமொரு காலந்தன்னில்
ஒடுங்குவது உறுதியடா உண்மைதானே. 294

உண்மையுட னொடுங்கும்வகை தன்னைக்கேளு
ஓமுடிந்து நின்றகுரு யுறைக்கப்போமோ
தண்மையுடன் மூலமதில் நின்றதீயும்
சதாசிவமாய் நின்றதொரு வாய்வுங்கூடி
சின்மயமாப் பூரணத்தில் சென்றுநீயும்
சிம்மெனவே யடங்கினபின் தெளிவில்லாமல்
நன்மையென்ற வழியறிந்து ஒடுங்கிடாமல்
நயந்தபடி ஒடுங்கியவர் நசித்திட்டாரே. 295

நசித்திட்ட வகையென்ன வென்றுகேட்டால்
நலமான பிருதிவியு மப்புஞ்சேர்ந்து
பசித்திட்ட அக்கினியும் வாய்வுங்கூடி
படர்ந்தஉப்பு தண்ணீரை மதியாமல்தான்
கசிந்திட்ட கனிவாலே வாய்வுந்தீரும்
கர்மவினைக் கீடாகச் சம்பவிக்கும்
பசித்திட்ட தீவினையா லப்புஉப்பும்
பரகெதியை யறியாமல் பாழாய்ப்போச்சே. 296

பாழாகிப் போகாம லறிவோடேதான்
பரகெதியைச் சேர்வதற்குப் பாகங்கேளு
நாளான நாளறிந்து மைந்தாநீயும்
நன்மைபெற ஒட்டியான பெந்தம்பண்ணி
தாளான யீஷாண முகூர்த்தங்கொண்டு
தன்மையுடன் பிராணாயஞ் செய்துமைந்தா
காலான வாசியைரே சகமேசெய்து
கருணையுள்ள பூரகமாய்க் கண்டுகொள்ளே. 297

கண்டுகொண்டு நின்றநிலை கும்பகமேயாச்சு
கருணையுள்ள சுழினையடா விந்துவட்டம்
பண்டுளதாய் நின்றதொரு விந்துக்கப்பால்
பரைஞான தீபவொளி தன்னில்நின்று
மண்டலமுன் றொன்றான முப்பாழுக்கப்பால்
மகத்தான பெருவெளியில் மைந்தாநீயும்
சென்றுஅந்த வெளியோடே வெளியாய்நின்று
சிவசிவா பரவெளியில் சேர்ந்துபோமே. 298

போமடா வெளியோடே வெளிதான்சேரும்
புதுமையடா வாய்வோடே வாய்வுசேரும்
ஓமடா தீயோடே தீதான்சேரும்
உத்தமனே அப்போடே அப்புசேரும்
ஆமடா மண்ணுடனே மண்தான்சேரும்
அவரவர்க ளினத்துடனே அவர்கள்சேர்ந்து
சாமடா தன்னிலையி லறிவைப்புக்கி
சதானந்த பூரணமா யிருந்துவாழே. 299

### குருலிங்கம்

இருந்தறிவு சுழினையிலே புக்கித்தானால்
ஏகாந்த மானகுரு லிங்கமாகும்
அருந்தவஞ்சே ரந்தறிவு அறிவிற்சேர்ந்தால்
அரகரா சத்திசிவ மானதெய்வம்
புரிந்தறிவு மதிதனிலே சேர்ந்துநின்றால்
புத்தியில்லாப் பிறவியிலே புகுவான்பாரே
வருந்தினமனக் கனிவாலே குருவைக்கார்த்துக்
மதிகதிரில் நின்றுகுறி வணங்கிப்பாரே. 300

வணக்கமில்ல ்டர்களை மதிக்கவேண்டாம்
மனம்நிலையாப் பாவிகளை வணங்கவேண்டாம்
இணக்கமுடன் சத்திசிவ பூசைபண்ணி
இருசுடரின் முனையுறிந்து இருத்திக்கொண்டு
மணக்குமலர் வாசனைபோல் வாசிகொண்டு
வாசிவா வென்றுபூ ரணத்தைநோக்கி
தனக்குவழி தானறிந்து தன்னைப்பார்த்து
தானவனாய் நின்றநிலை தன்னைக்காரே. 301

தானவனாய் நின்றசிவ பூசைசெய்ய
சராசரங்கள் முழுதுமடா வசியமாகும்
தானவனாய் சத்தியுட பூசைசெய்தால்
தன்வசமா யஞ்சனா தேவிநிற்பாள்
தானவனாய் வாலையு பூசைசெய்தால்
தண்மையுள்ள வாதமது தானேதங்கம்
தானவனாய் நின்றுபூ ரணத்தைக்கண்டால்
தனையறியா ஆள்மறைப்புந் தான்தானாமே. 302

### வசியம்

ஆமென்ற வசியமொன்று சொல்லக்கேளு
ஆதிமுத லானகொடி யருகுவாங்கி
ஓமென்று கண்டித்து மதுவில்போட்டு
உரிமையுடன் மண்டலஞ்சென் றெடுத்துப்பாரு
நாமென்ற நீரதுவும் நன்றாய்வத்தி
நடுவான கொடியதுவும் பதமாய்நிற்கும்
தாமென்ற தன்பதமாய் வந்தமூலம்
தருவான மூலமதின் தன்மைகேளே. 303

தன்மையுடன் வெள்ளியுடன் செம்புசேர்த்து
தருவான தங்கமது மூன்றுமொன்றாய்
உண்மையுடன் தானுருக்கி தகடுதட்டி
உறுதியுள்ள மூலமதை வைத்துருட்டி
செம்மைபெற ரவிவளையம் போலேசெய்து
தெரியாமல் பொருந்தினவாய் சேர்த்துக்கொண்டு
நன்மைபெற சற்குருவைத் தியானஞ்செய்து
நலமாக ஞாயிறுமுன் வைத்துப்போற்றே. 304

வைத்தடொரு ரவிவளையம் வளவிதன்னை
வலதுகையில் தான்பூட்டி மனதாய்நின்றால்
மைதொடுத்த விழியாளு மன்னர்தானும்
மகத்தான மிருகமுதல் வசியமாகும்
மெய்த்ததொரு இம்முறைதா னதீதவித்தை
வேதாந்த வேதியர்தான் சொன்னமார்க்கம்
உத்ததொரு வித்தைதனை உலகத்தோர்க்கு
உறையாதே உறைத்ததினா லுறுதிபோமே. 305

## திலதம்

உறுதியுட னின்னமொரு வசியங்கேளு
உறையாதே திலதவகை உண்மைசொல்வேன்
சுறுதியுடன் உள்ளங்கால் உள்ளங்கையில்
துடைத்ததொரு அழுக்குடனே சவாதுகூட்டி
கருதிமன துரிமையுடன் ஒன்றாய்ச்சேர்த்து
கருவான தங்கமென்ற சிமிழில்வைத்து
பருதிமதி சுடரொளியைத் தியானஞ்செய்து
பத்திகொண்டு புருவமதிற் திலதம்போடே. 306

போடப்பா சிம்மெனவே திலதம்போட்டுப்
பூரணமாய் நீயிருக்கப் புதுமைகேளு
நாடப்பா உனதுமுகங் கண்டபோது
நன்மையுடன் பூரணமாய் வசியமாவார்
தேடப்பா இவ்வசியம் நல்லவித்தை
சிவசிவா வேதியன்சொல் முறைதானப்பா
பாடப்பா இதினாலே சோலியுண்டோ
பத்திகொண்ட புத்தியினால் பணிந்துபாரே. 307

## வசியம்

பணிந்துமிகக் கனிந்துருக வசியமொன்று
பதிவான புலத்தியனே பகரக்கேளு
துணிந்துருத்ர பூமியிலே சென்றுநீயும்
சுகமாக வெந்தஅஸ்தி எடுத்துக்கொண்டு
அணிந்தஅஸ்தி தன்னுடனே விஷ்ணுபீசம்
ஆதிசத்தி தன்னுடைய பீசங்கூட்டி
கனிந்தகும்பக் கலசமதி னாவின்பாலுங்
கருணையுடன் தானரைத்து உண்டைசெய்யே. 308

செய்யடா உண்டைசெய்து உலரவைத்து
செம்மையுட னெருவடுக்கிப் புடத்தைப்போடு
மெய்யடா சொல்லுகிறேன் னீறிப்போகும்
வேதாந்த மானதிரு நீரைவாங்கி
வையடா சவாதுடனே புனுகுசேர்த்து
மார்க்கமுட நீயெடுத்து வைத்துக்கொண்டு
பய்யடா மய்யமென்ற நெத்திக்கிட்டு
மார்க்கமுட னரசரிடஞ் செல்லுவாயே. 309

சென்றுமிக நின்றுடனே ராசமோகம்
சிவசிவா செகமோகம் அஷ்டகிரிவசியம்
அண்டர்பிரா னருள்பெருக வசியமுண்டாம்
ஆதியென்ற சற்குருவி னருளைப்பெற்று
கொண்டுநின்ற அஸ்தியென்ற வஸ்துவாலே
கொடுமையென்ற வியாதியெல்லாம் வசியமாகும்
கண்டதொரு வசியமது நிசந்தான்சொன்னோம்
கருவறிந்து குருவறிந்து கண்டுதேறே. 310

தேறுவது பூரணத்தால் தேறவேணும்
திகட்டாத மதியமுர்தங் கொள்ளவேணும்
நேருவது வாசியினா லந்தங்கண்டு
நெறிமுறமை தவறாமல் சுழினைமேவி
மாறுவித மறிந்துயி கலையைநீயும்
மார்க்கமுடன் கதிரறிந்து சேர்த்தாயாகில்
பேருபெறக் கெதிமோச்ச முண்டாமைந்தா
பெருமையுள்ள சூட்சமடா கருவைப்பாரே. 311

கருத்தறிந்து அண்டவெளி தன்னில்நின்று
காலறிந்து வாசியினால் யோகம்பார்த்து
உருத்தரித்து நின்றதொரு வாலைப்பெண்ணை
உற்றுப்பார் விளக்கொளிபோ லுள்ளேதோன்றும்
திருத்தமுட னந்தொளியிற் சேர்ந்தால்மைந்தா
சிவசிவா கற்பூர தேகந்தேகம்
விருத்தமுள்ள தேகமடா வேதாந்தத்தீ
வேதாந்த அந்தமென்ற வெளியிதாமே. 312

வெளியான வெளியறிந்து வெளியில்நின்றால்
வெளியொளியும் விழியொளியும் மேவிப்போகும்
தெளிவான தெளிவெனவே மைந்தாநீயும்
செங்கதிரும் வளர்பிரையுஞ் சேர்த்துக்கொண்டு
ஒளியான சுடரதிலே நின்றாயானால்
உறுதியுள்ள தேகமடா வச்சிரகாயம்
அளியாத மொழியுடைய சத்தினாதம்
ஆதியென்ற செகநாதம் அருபசித்தே. 313

## நிஷ்டை விபரம்

சித்தான சித்துவிளை யாடுதற்கு
சிவசிவா நிஷ்டையுட திறமைகேளு
பத்தான சிவதீட்சை அகாரபீடம்
பதிவான மூலமடா விந்துவட்டம்
சுத்தான வட்டமதில் விளங்குஞ்சோதி
சோதியென்ற கற்பூர தீபந்தன்னில்
வித்தான வாசியைநீ சாரப்பண்ணி
வேதாந்த சிவயோக விபரங்கேள. 314

கேளடா சிவயோக விபரங்கேளு
கேசரத்தில் கேசரியாள் பாதம்போற்றி
மேலடா போலவுமே நிஷ்டைமார்க்கம்
வேணபடி முன்பின்னாய்ச் சித்தர்சொன்னார்
ஆளடா ஆதியென்ற பிர்மநிஷ்டை
அந்தரங்க மானநிஷ்டை யாருஞ்சொல்லார்
வாளடா பூரணசூஸ் திரத்தில்நன்றாய்
வகுத்துமுறை சூட்சமடா வணங்கிப்பாரே. 315

வணக்கமுடன் முந்தினது பிரமநிஷ்டை
மக்களே அகாரமென்ற சிவத்தின்கூறு
இணக்கமென்ற சிவத்தியானம் அகாரதீச்சை
இருந்துமன துரிமையினால் செபித்துநீயும்
தனக்கொடுக்க மானதலந் தன்னில்நின்று
தன்மையுடன் சுகாசனமா யிருந்துமைந்தா
சுணக்கருத்து வாசிதன்னைத் துலங்கப்பணி
துருவமதி லவ்வாசி சுருக்கியேற்றே. 316

சுருக்கியந்த வாசிதனைத் துருவமீதில்
சுழியான சுழியறிந்து சுழியில்நின்று
திருக்கான திருக்கருத்து மலர்க்கண்சாத்தி
திருவாசி கொண்டுநின்ற செங்கண்தன்னில்
உருக்கமுடன் வடிந்தொழுகும் அமுர்தந்தன்னை
உள்ளமதில் உள்ளுணர்வாய் உகந்துகொண்டால்
பெருக்கமுள்ள பிரமமுமே பிரகாசிப்பார்
பிரமமென்ற அகாரமதின் பெருமைதானே. 317

பெருமையுள்ள பிரமநிஷ்டை முதலாந்தீச்சை
பேணினபின் மாலினுட நிஷ்டைகேளு
உருமையுள்ள உகாரமடா சத்திதீச்சை
உருக்கமுடன் மாலையிலே செபித்துமைந்தா
அருமையுட நீயிருக்கும் ஒடுக்கந்தன்னில்
அடங்கினின்ற காலிலொரு கால்மேல்தாக்க
பெருமையுள்ள மணிபூரந் தன்னில்நின்று
பிரளாமல் புருவமய்யம் பேணிப்பாரே. 318

பேணிப்பார் மய்யமென்ற சுழினைமீதில்
பிரையான காலிருகால் முக்காலாகி
ஊணிப்பா ரந்தமென்ற காலொன்றாலே
உள்ளடங்கி மேலெழுந்து உரிமையாக
பூணிப்பார் நின்றதொரு மகாரபீடம்
புத்திகொண்ட பீடமதிற் பொருந்திப்பாரு
பாணிப்பாய் பார்த்ததினால் தோணாதப்பா
பறையான உகாரமதின் பசுமைதானே. 319

பசுமையுள்ள மாலினுட நிஷ்டைசொன்னோம்
பத்திகொண்டு பூரணமாய்ப் பதிவாய்ப்பாரு
வசிகரஞ்சே ருத்திரனார் நிஷ்டைகேளு
வாலையென்ற மகாரமடா மவுனப்பெண்தான்
சுசிபெருகும் வாலைபதந் தன்னைக்கண்டால்
சுத்தமுள்ள பத்தியதாய்த் தொழுதுபோற்றி
உசிதமுள்ள வேதாந்த மகாரந்தன்னை
உகந்துமனப் பூரணமா யுன்னிப்பாரே. 320

உன்னிப்பா ருத்திரனார் தன்னைக்காண
உள்ளபடி யிருந்துஇரு கையினாலே
நன்னிப்பார் காலதின்மேல் உன்னிமைந்தா
நயமாக நயனமிரு நயனந்தன்னை
விண்ணைப்பார்த் தமுர்தகலை தன்னைவாங்கி
மேன்மைபெறப் பூரணமாய் ரவியிற்சேர்த்து
தன்னைப்பார் தன்சாய்கை ருத்திரரூபம்
தானவனாய் நின்றமுகந் தன்னைப்பாரே. 321

பார்நயன மூலமடா கண்தான்தெய்வம்
பருதிமதி சுடரெனவே நின்றசூச்சம்
ஆரறிவார் அந்தரங்க மானகண்ணை
அறிந்துநடுக் கண்ணொளியால் விண்ணைப்பார்த்தால்
நேர்பெரிய விலாசமடா கமலமாது
நிறைந்திருக்குங் கற்பூர தீபமாது
பேர்பெரிதாய் நின்றதொரு மவுனமாது
பெரிதான வாலையடா மகாரமாது. 322

ஆமப்பா ருத்திரனார் நிஷ்டைசொன்னோம்
அறிந்துகொள்ளு மயேசுரனா ரருளைக்கேளு
தாமப்பா விந்தவடா சோதிசோதி
தாயான சோதியடா தங்கமாது
ஓமப்பா பூரணமாய் நின்றமாது
ஒளியாகி விண்மயமாய் ஒன்றாய்நின்று
நாமப்பா மந்திரக்கலைக் கியானரூபி
நாதாந்த அமுர்தரச ரூபிதானே. 323

தானான அமுர்தரச ரூபிதன்னை
சங்கையுட னறிந்துரசந் தானேகொண்டால்
கோனான மயேசுரனார் நிஷ்டையாகும்
குருவான நிஷ்டையடா யேகரூபம்
தோனாத ரூபமடா மூலாதாரம்
துஞ்சிநின்ற விந்துவடா அமுர்தபானம்
தேனான அமுர்தமதைக் கொண்டுநீயும்
தெளிந்துகலைக் கியானமதில் நின்றுதேரே. 324

தேறினால் கலைக்கியான தேவிபாதம்
தெகிட்டாத மந்திரகலைக் கியானபோதம்
மாறினால் திருநடனஞ் சிலம்பினோசை
மகத்தான ஓசையடா நாதகீதம்
கூறினா ளனுராகம் திசைநாதந்தான்
கொண்டுநின்ற இடமதுதான் குறிகண்ணாட்டம்
மீறினா லாகாச வெளியிலேதான்
வேதாந்த ஞானவொளி தீபந்தானே. 325

தானான மயேசுரத்தி நிஷ்டைசொன்னேன்
சதாசிவத்தி நிஷ்டைதனைச் சாற்றுக்கேளு
ஊனான காயமடா ஐங்காயந்தான்
உத்தசிவ கலைக்கியான சத்தியமாது
தேனான பூரணமாய்த் தெளிந்துவந்து
சென்றுபரி பூரணமாய்ச் சேர்ந்தநாதம்
கோனான நாதமடா சமாதிகற்பம்
குருவான கற்பமதில் குவிந்துநில்லே. 326

நில்லந்த நிலையான சுழியில்நீயும்
நிலையான கலையறிந்து கற்பங்கண்டு
செல்லந்த ஆதார மூலாதாரஞ்
சேர்ந்துநின்ற வாசியடா ஞானபோதம்
கொள்ளந்த போதமதைக் குறியாயெண்ணி
குருவான பராபரத்திற் குறிகண்ணாட்டி
நல்லந்தப் பூதிதனைக் கையில்வாங்கி
நாடிநின்று தேகமெல்லாம் நயமாய்ப்பூசே. 327

பூசியே பூரணத்தை மனதிற்கொண்டு
புத்தியுடன் ஓட்டியான பெந்தம்பண்ணி
வாசியென்ற அனலெழும்பி மேலேதாக்கும்
வரைஞான கற்பூர தீபந்தன்னில்
நேசமுடன் சென்றுவிளை யாடிநின்றால்
நிருவிகற்ப சமாதியென நேரலாகும்
பாசமுட னிவ்விதமாய் நின்றாயாகில்
பதிவான வாசியது பணியுந்தானே. 328

தானேதான் தத்துவத்தை யறியவேணும்
சற்குருவால் பிருதிவியைக் காணவேணும்
வீணேதான் திரிந்ததினா லேதுண்டப்பா
விதியறியாய் பாவிகளை விரும்பவேண்டாம்
கோனேதான் தானெனவே குறிக்கமாட்டார்
குறும்பரவர் வாய்ச்சமத்தால் கூறுவார்பார்
பூணேநீ பொற்கமல நந்திபாதம்
பூரணமா யனவரதம் பூசைபண்ணே. 329

பூசையுள்ள நிஷ்டையிலே பஞ்சநிஷ்டை
பூரணமாய்ச் சொன்னமொழி கண்டுகொள்ளு
ஆசையுடன் பஞ்சநிஷ்டை அறிந்தாயாகில்
அகண்டவெளி தனிலேறி யாடலாகும்
நாசிநுனி நடுவான நயனதீபம்
நடுவான கற்பூர தீபந்தன்னை
வாசியென்ற சவுதகிரி வட்டமேறி
வளர்ஞான தீபமதில் சேர்ந்துநில்லே. 330

சேர்ந்துநின்ற பூரணமா மமுர்தந்தன்னை
சிவசிவா அந்தமுர்தஞ் சிக்குங்காலம்
கூர்ந்துபரி பூரணமாய் வாங்கிமைந்தா
குருவான ஆதியந்தப் பொருளைநீயும்
சார்ந்ததொரு பூரணத்திற் சரியாய்க்கூட்டி
சமரசமா யமுர்தமதிற் தளரப்பண்ணி
தேர்ந்தமனங் குன்றாமல் ரவியிற்போட்டு
சிவசிவா மண்டலஞ்சென் றெடுத்துப்பாரே. 331

பாரப்பா மண்டலஞ்சென் றெடுத்துப்பார்த்தால்
பசுமையுள்ள பூரணமு மெழுகாய்ப்போகும்
சேரப்பா அம்மெழுகை மேருக்குள்ளே
சிவசிவா வைத்துநன்றாய்ப் பூசைபண்ண
நேரப்பா நின்றநடு மனையிற்குள்ளே
நின்றிலங்குந் தீபமதை நினைவிற்கொண்டு
காரப்பா அந்திசந்தி பணவிடைதான்கொண்டால்
காலான வாசியது களறாதய்யா. 332

## குளிகை

களறாமல் விந்துநிலை கட்டமைந்தா
கருவான குளிகையொன்று சொல்லக்கேளு
மலறான விந்ததுவுட நாதங்கூட்டி
மடியநன்றாய் ரேகித்து மைந்தாகேளு
ஏறாமல் ரசமதுவைச் சுத்திபண்ணி
எடுத்துமே அந்திடைக்கிச் சரியாய்ச்சேர்த்து
குளராமல் கமலரச நாதங்கூட்டி
குமுறவே யரைத்துருட்டி மணிபோல்செய்யே. 333

செய்தமணி தனையெடுத்த நாதனீரில்
சிம்மெனவே நிருத்திரவி முகத்தில்வைத்து
கய்தவறாக் கருணையினால் மறுநாள்வாங்கி
கருவான அண்டமதின் மெழுகுள்வைத்து
தொய்தமணி யிருகவேதான் தீபந்தன்னில்
தொந்தமுடன் வாட்டிடவே சூடுதாக்கி
மெய்தவறா மணியதுவு மிருகிநல்ல
வேதாந்த தம்பனமா மணியிதாச்சே. 334

ஆச்சப்பா அம்மணியை அடக்கம்பண்ணி
அந்தரசங் கொண்அனு போகஞ்செய்தால்
நீச்சப்பா நின்றதொரு விந்துதானும்
நெகிளாமற் நின்றிடத்திற் கட்டிப்போகும்
மாச்சப்பா மங்கையர்கள் மனதுநொந்தால்
மணியதனை யடக்கமிட்டுக் கயலில்வாங்கி
மூச்சப்பா விந்ததுவு மிருபேருக்கும்
முந்தாது பிந்தாது முத்தியாமே. 335

முத்தியுள்ள மோச்சமடா மூலம்மூலம்
முனையான சுழிமுனையாம் விந்துமூலம்
சித்திபெற விந்துநிலை மூலந்தன்னை
சிதறாமல் கட்டினவன் சித்தன்சித்தன்
வெத்தியுள்ள சித்தமதா யிருக்கவேணும்
வேதாந்த பூரணத்தைக் கார்க்கவேணும்
சத்தியமே தவறாம லிருக்கவேணும்
தன்னுயிர்போல் மன்னுயிரைக் கார்க்கநன்றே. 336

கார்க்கவென்றால் வாசியைத்தான் கார்க்கவேணும்
கருணையுடன் கார்ப்பதற்கு குளிகைகேளு
ஏர்க்கையுட னரிதாரக் கட்டிவாங்கி
என்மகனே துருசுடனே ஆதியந்தம்
மார்க்கமுள்ள பொரிகார மண்டத்தோடு
மனோசிலையோ டறுசரக்கு வகையாய்மைந்தா
சேர்க்கையுடன் சரியிடையாய் வாங்கியந்த
திருவான நாதனீர் தன்னாலாட்டே. 337

ஆட்டியந்த இடைக்கிநிகர் தாரந்தன்னில்
அழுத்தமுடன் கவசமது அன்பாய்ச்செய்து
நாட்டியதோர் கவசமதில் மண்தான்பூசி
நன்றாகக் காய்ந்தபின்பு புடத்தைப்போடு
தேட்டமுடன் புடமாறி யெடுத்துப்பாரு
சிவசிவா தாரமது ஈயம்போலாம்
பூட்டியதோர் ஈயமதை வாங்கிநீயும்
புத்தியுட னந்திடைக்கி ரசத்தைவாங்கே. 338

வாங்கியதோர் ரசமுடனே தாரயீயம்
வகையுடனே கூட்டிநன்றாய்க் கல்வத்திட்டு
பூங்கமல மாதுதிரு நீராலாட்டி
புத்தியுடன் வளித்தெடுத்து மணிபோற்செய்து
பாங்குபெற அம்மணிக்குக் கவசங்கேளு
பத்தியுள்ள அண்டமதின் மெழுகினாலே
சாங்கமாய்க் கவசமது நன்றாய்ச்செய்து
தவறாமல் வாட்டியபின் னெடுத்துப்பாரே. 339

எடுத்துமிகப் பார்த்திடவே மைந்தாகேளு
    என்னசொல்வேன் சத்திசிவம் ஒன்றாய்ச்சேர்ந்து
தொடுத்தமணி தனையெடுத்து வைத்துக்கொண்டு
    சுந்தரம்போல் வாலைபதந் தொழுதுமைந்தா
அடுத்தமனை சுழிமுனையில் வாசிபூட்டி
    அந்தரங்க மானமணி நாவில்வைத்து
நடுத்தரமாய் நின்றுசிவ யோகஞ்செய்தால்
    நாதாந்த நடுவணையில் நாடலாமே. 340

நாடலாம் நடுமனையில் வாசிபூட்டி
    நாதாந்த பூரணத்தில் நாடிநின்று
தேடலாம் வெகுகோடி சித்துமார்க்கம்
    சித்தென்றாற் புலத்தியனே செப்பக்கேளு
காடெல்லா மலைந்துசுத்தித் திரிந்தாலென்ன
    கதையான சாஸ்திரத்தைப் படித்தாலென்ன
வீடெல்லா மலைந்துவாய் பசப்பிலென்ன
    வேதாந்த சின்மயத்தில் விரும்பிநில்லே. 341

விரும்பிநின்று சத்திசிவ பூசைசெய்து
    வேதாந்த வாலைபதம் பணிந்துகொண்டு
திரும்பிமனங் கோணாமல் பூரணத்தில்
    தெளிந்துநன்றாய்ப் பஞ்சகண தீச்சைபெற்று
வரும்பிறவி தனையகற்று மவுனதீச்சை
    வகைவிபர மறிந்துஆ தாரம்பார்த்து
கரும்பதிலு மதிகருசி போலேமைந்தா
    கருணைவளர் சற்குருவைக் காருகாரே. 342

காரப்பா சற்குருவைக் கார்த்தாயானால்
    கருணைவைத்து அனுக்கிரகங் காட்டுவார்பார்
நேரப்பா அனுக்கிரகங் கண்டபோது
    நேர்மையுடன் வாசியிலே நின்றுகொண்டு
சாரப்பா அந்தநடு மனையினுள்ளே
    சார்ந்துசிவ யோகமது தானேசெய்தால்
வீரப்பா கொண்டசெடஞ் சித்தியாச்சு
    வேதாந்த முத்தியடா விண்ணைப்பாரே. 343

## தாரயீயம்

பாரப்பா யின்னமொரு கருவைக்கேளு
    பச்சையென்ற துருசுடனே காரங்கூட்டி
வீரப்பா கொண்டதொரு அரிதாரந்தான்
    விபரமுடன் மூன்றுகரு ஒன்றாய்ச்சேர்த்து
சாரப்பா கல்வமதிற் பொடியாப்பண்ணி
    சங்கையுடன் நாதனீர் தன்னைவாங்கி
தேரப்பா அப்பொடியில் பிசறிக்கொண்டு
    செம்மையுடன் குகைதனிலே யிட்டுமூடே. 344

மூடிநன்றாய் மண்சீலை வலுவாய்ச்செய்து
    முக்கியமாய்ப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
நாடிநின்ற மூன்றுகரு ஒன்றாய்ச்சேர்ந்து
    நன்மையுட னுருகியது யீயம்போலாம்
வாடிநின்ற யீயமதை யெடுத்துமைந்தா
    மார்க்கமுட னதற்குநிகர் ரசத்தைக்கூட்டி
ஆடிநின்று அலையாமல் கல்வத்திட்டு
    அப்பனே நாதநீர் தன்னாலாட்டே. 345

ஆட்டிவிட ரசமுடனே ஈயஞ்சேர்த்து
    அருமையுடன் கூடிநன்றாய்த் திரளும்பாரு
தாட்டிகமாய்த் திரண்டரச முருட்டிநீயும்
    தன்மையுடன அண்டமெழு கதனைவாங்கி
தேட்டமுடன் வாய்நீராற் குழைத்துநல்ல
    செயமான ரசமணிக்குப் பூசிமைந்தா
வாட்டிடுவாய் கற்பூர தீபந்தன்னில்
    மார்க்கமுடன் மணியதுதா னிருகும்பாரே. 346

இருகிநின்ற மணியெடுத்து மைந்தாநீயும்
    இன்பமுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
பருதியெனும் ரவிநாதஞ்செகநாதந்தான்
    பார்முழுது மரசாளும் பரமநாதம்
சுருதிபொரு ளானதொரு நாதந்தன்னை
    சூக்ஷமென்ற மணிக்கிநிகர் காரங்கூட்டி
ஊருகிமன துரிமையினால் உருக்கிப்பாரு
    உருக்கமுட னுருகியது களங்கமாச்சே. 347

களங்கமில்லாக் களங்கமதில் கெந்திசேர்த்து
கருவான செந்தூரச் செயநீர்தன்னால்
உளங்கனியக் கல்வமதில் நன்றாயாட்டி
உரிமையுடன் வளித்துருட்டி ரவியிற்போட்டு
துலங்குவதைக் காரோட்டில் வைத்துமூடி
துப்புறவாய்ப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
விளங்கிநின்ற களங்கமது என்னசொல்வேன்
வேதாந்த பூரணத்தாற் செந்தூரமாச்சே. 348

ஆச்சப்பா செந்தூர மென்னசொல்வேன்
அந்திசந்தி பணவிடைகால் கொண்டுதேர்ந்தால்
மூச்சப்பா முன்னிலைவிட் டசையாதய்யா
மூதண்ட கேசரியில் வாசியேறும்
நீச்சப்பா வாசியிற்சென் றேறினாக்கால்
நிலையான தீபமதில் நேரலாகும்
காச்சப்பா அத்தீபந் தன்னிலேதான்
கசடான தத்துவத்தைக் கருக்கிப்போடே. 349

கருக்கிடாய் தத்துவப்பேய் தன்னைமைந்தா
காலறிந்து கருக்குதற்கு வகையைக்கேளு
அரிக்கிமுத லானதொரு எழுத்தால்நீயும்
அமர்ந்துநிலை தனையறிந்து ஊதிவிட்டால்
கிருக்குடைய தத்துவப்பேய் மாண்டுபோகும்
கேசரத்தில் மணிநாத ஓசைகேட்கும்
சுருக்கமுள்ள மணிநாத ஓசைதன்னால்
சோதியென்ற சுயஞ்சோதி காணலாமே. 350

காணாத சோதிதனைக் கண்ணால்காண
கமலமென்ற கடைக்கண்ணை மனக்கண்ணால்பார்
தோணாத சோதியது சுழினைமீதில்
துலங்குமடா செங்கதிர்போல் சோதிமூலம்
கோணாத வட்டமடா விந்துமூலம்
குவிந்தவிந்து மாலுடைய காலேயாச்சு
ஊணாத காலறிந்து உள்ளேஊண
ஓங்காரச் செங்கதிரா லுலாவலாமே. 351

ஆமப்பா செங்கதிரே அங்கமாச்சு
    அங்கமென்ற தங்கமடா சோதியாச்சு
ஓமப்பா சோதியென்ற மனக்கண்ணாலே
    உள்ளுணர்ந்து அந்தமென்ற கண்ணைப்பாரு
நாமப்பா அந்தமென்ற கண்ணைப்பார்த்தால்
    தானவனாய் அங்கனையே தானேதோணும்
காமப்பா லானதிருக் கண்ணாலந்தக்
    கருணைவளர் பூரணத்தைக் காணலாமே. 352

காணலாம் பூரணமே வாமபீடம்
    கருணைவளர் சோதியடா அண்டமேரு
தோணலாஞ் சோதியென்ற சோதிமேரு
    தூண்டாத நாதமடா ஞானமேரு
பேணலாம் ஞானமென்ற நயனமேரைப்
    பிலத்தபுத்தி அறிவாலே பேணிப்பார்த்து
ஊணலாங் காலறிந்து வாசிகொண்டு
    ஒடுங்கலாம் ஒடுங்கியந்தக் கண்ணைப்பாரே. 353

கண்ணான சோதியடா தான்தானாகும்
    கருணையுள்ள அஞ்செழுத்துந் தான்தானாகும்
விண்ணான மூன்றெழுத்துந் தான்தானாகும்
    விசையான எட்டெழுத்துந் தான்தானாகும்
பண்ணான சடாட்சரமுந் தான்தானாகும்
    பதிவான மண்ணும்விண்ணுந் தான்தானாகும்
ஒண்ணான அச்சரங்கள் தான்தானாகும்
    உத்தசிவ சத்தியுமே தான்தானாமே. 354

ஆமப்பா தேவகணந் தான்தானாகும்
    அடங்காத பூதகணந் தான்தானாகும்
நாமப்பா அஷ்டநதி தான்தானாகும்
    சங்கையில்லா அஷ்டகிரி தான்தானாகும்
நாமப்பா உலகமெல்லாந் தான்தானாகும்
    நன்மையொடு தின்மைரெண்டுந் தான்தானாகும்
ஓமப்பா கலைக்கியானந் தான்தானாகும்
    உரிமையுள்ள பூரணமுந் தான்தானாகும். 355

பாரப்பா பிர்மமது தான்தானாகும்
பத்தியுள்ள சிதம்பரமுந் தான்தானாகும்
சாரப்பா சராசரமுந் தான்தானாகும்
சதாகோடி மந்திரமுந் தான்தானாகும்
காரப்பா தன்னொளியுந் தான்தானாகும்
கருணையுள்ள விண்ணொளியுந் தான்தானாகும்
ஊரப்பா நாதவிந்துந் தான்தானாகும்
உற்பனமு மொடுங்கினமுந் தான்தானாகும். 356

தானேதான் தானவனாய்த் தன்னுள்ளேதான்
தன்மையுடன் தானகத் தன்னுள்பாரு
கோனேதான் தன்னருளால் எல்லாந்தானாய்
குருவான இருதயத்தில் பிரகாசிக்கும்
மானேதான் தன்னருளாம் பிரகாசத்தை
மௌனமுடன் மானதமாய்ப் பூசைபண்ண
காணாத கண்காட்சி யெல்லாந்தன்னுள்
கண்ணெதிரே தோணுமடா கண்ணால்பாரே. 357

பார்ப்பதுதான் கண்ணாடிக்குள்ளே மைந்தா
பத்தியுடன் தன்னுருவைப் பதிவாய்ப்பார்த்து
நேர்ப்பதுதான் மானதமாய்ப் பூசைபண்ண
நிசமுனக்கு யில்லையடா நெற்றிக்கண்ணை
கூர்ப்பறிந்து குறிப்புடனே திறந்துபார்த்து
குணமாக அந்திசந்தி பூசைபண்ணி
தீர்ப்புடனே சிவபூசை கோடிக்கொக்கும்
சிவசிவா தேகவச்சிர காயமாமே. 358

காயமென்ற காயமடா தேவரூபம்
கருணையுள்ள பஞ்சகர்த்தா ளிருந்தவீடு
தாயகமாய் வாசிதனக் குகந்தவீடு
சச்சிதா னந்தபூ ரணமாம்வீடு
நாயகனார் நின்றநா தாந்தவீட்டை
நன்மையுடன் தானறிந்து பூசைபண்ணி
நேயமுடன் பராபரத்தோ டொத்துவாழ்ந்தால்
நீடுலகில் நீயுமொரு சித்தனாமே. 359

சித்தனென்ற தேகமடா தேவரூபம்
சின்மயமாய் நின்றபரா பரத்தின்ரூபம்
பத்தனென்ற வாசியடா தேசியாகி
பரைஞான கேசரியாய் நின்றமூலம்
சுத்தமுட னம்மூலச் சோதியாலே
சூச்சமாம் பராபரையைத் தொழுதுபோற்றி
புத்தியுடன் தானிருக்கச் சகலசித்தும்
பூரணமாய் நிறைந்ததிரு ஆதியாமே. 360

ஆதியாய் மிகநிறைந்த ஞானசோதி
அருள்பெருகும் எக்கியமா முனியேஅய்யா
சோதியெனும் பூரணமாம் வாலைதீட்சை
சுருதிமய மானதொரு புவனைதீட்சை
நீதிபெரும் திரிபுரையாள் தீட்சைமூன்றும்
நேர்மையுட னடுமைதனக் குபதேசித்து
ஓதிவரு மந்திரகலைக் கியானமான
உறுதியென்ற தீபநிலை உறுதிசொல்லே. 361

உண்மையுட னடிபணிந்து கேட்பாய்மைந்தா
உந்தனுக்குச் சொல்லுகிறேன் வாலைதீட்சை
நன்மையுள்ள ஆதார மூலந்தன்னில்
நாடிநின்ற வாலையுட தீட்சைதன்னை
தன்மையுடன் காணுதற்கு மைந்தாகேளு
தனதாக ஓங்அங்உங்லங் கிலிசுவாகா
உண்மையாய்த் தானிருந்து தினம்நூற்றெட்டு
திருவான உருவேறச் சித்தியாமே. 362

சித்தியுள்ள வாலையவள் தீட்சையாலே
சிவசிவா சிவதவத்துக்கு றுதியாகும்
புத்தியாய் சிவதவத்தி லுறுதியானால்
பூரணமாய் வாசிசிவ யோகமாகும்
பத்தியாய் சிவயோக சத்தியானால்
பரைஞான கேசரியில் தீபங்காணும்
முத்திபெற உதயமதில் வாலைதீட்சை
மோனமுடன் தான்செபிக்க முத்திபாரே. 363

பாரப்பா வாலையுட தீட்சைசொன்னேன்
பதிவான புவனையுட தீட்சைகேளு
நேரப்பா புருவமதில் மனதைவைத்து
நேர்மையுடன் ருத்திரனார் பதியில்நின்று
காரப்பா ஓம் சிரீங் றீங் வசிங் சுவாகாவென்று
கருணையுடன் புருவமதில் மனதுவைத்து
சேரப்பா மதியமதில் தினம்நூற்றெட்டு
சங்கையுடன் தான்செபிக்க தன்மைகேளே. 364

தன்மையென்ன சொல்லுகிறேன் மைந்தாகேளு
சத்தியென்ற ருத்திரியாம் புவனைதானும்
உண்மையுட னிருதயமாங் கமலமீதில்
ஒருகோடி சூரியன்போற் பிரகாசிக்கும்
நன்மையுடன் சோதிப்பிர காசங்கண்டால்
நாதாந்த தேகமது சித்தியாகும்
சின்மயமாய்த் தேகமது சித்தியானால்
சீவகற்ப காலவரை தெளிவாங்காணே. 365

தெளிவாகப் புவனையுட தீச்சைசொன்னேன்
சிவசிவா திரிபுரையின் தீச்சைகேளு
ஒளியான புருவநடுச் சுழிமேல்நின்று
உத்தமனே அய்யுங்கிலியும் சவ்வும்வசிசுவாகாவென்று
முளியான முழியறிந்து முழிமேல்நின்று
முத்தியுள்ள நேரமடா சந்திநேரம்
நெளியாமல் தானிருந்து தினம்நூற்றெட்டு
நேமமுடன் னுருச்செபித்து நிலையில்நில்லே. 366

நிலையான நிலையறிந்து வாசியேறி
நின்றிலங்கும் புருவநடுச் சுடறிற்சென்றால்
கலையான சந்திரகலை ஒளிபோல்மைந்தா
காணுமடா திரிபுரையாள் கருணைதானும்
சிலையான திரிபுரையாள் கருணைபெற்றால்
செல்வமென்ற கண்மணியே சொல்லக்கேளு
மலையான அண்டமடா பொதிகைதன்னில்
மகத்தான சிவசத்தி வசமாம்பாரே. 367

பாரப்பா சிவத்தி வசமாய்நின்று
பரைஞான அமுர்தரசந் தானேயீவாள்
ஆரப்பா உனக்கீடு சொல்லப்போறேன்
ஆதிசிவ சத்தியுட முப்பேர்தன்னை
காரப்பா காலசந்தி உச்சிமூன்றும்
கண்மூக்கு மத்தியிலே கருத்தைவைத்து
நேரப்பா விபூதியைநீ தியானம்பண்ணி
நேமமுடன் மெய்க்கணிந்து கொண்டுபாரே. 368

கொண்டுநிலை தனையறிந்து குருவைப்போற்றி
கூர்மையுடன் விபூதியைநீ கடாச்சித்தாக்கால்
மண்டிவரும் பூதகணம் ஏவல்பில்லி
மகத்தான விஷரோகம் மாண்டுபோகும்
எண்டிசையுங் கீர்த்திபெற வாழ்வாய்மைந்தா
ஏகாந்த வாலையுட முப்பேர்தன்னை
கண்டபடி காலசந்தி உச்சிமூன்றும்
கருத்துவைத்து மானதமாய்ப் பூசைசெய்யே. 369

செய்யப்பா மானதமாய்ப் பூசைசெய்து
செயமாகத் திருநீறை யணிந்துகொண்டால்
மெயயப்பா தளருது வாசியேறும்
வேதாந்த பூரணமு மெய்யில்தங்கும்
மையப்பா மையமென்ற சுழினைதன்னில்
மகத்தான தீபவொளி மயங்காதய்யா
கய்யப்பா கையில்நெல்லிக் கனிபோல்மைந்தா
கருத்துவைத்துப் பூரணத்திற் கலந்துகொள்ளே. 370

கலந்துகொண்டு பூரணமே தானாய்நின்று
கால்வாசி வாசியிலே கருத்துவைத்து
உளங்கனிந்து ஆச்சிரமம் ஐந்தும்நன்றாய்
உண்மையுடன் காணுதற்கு வேதம்பார்த்து
தலங்களுட சன்னதியைத் தானேதானாய்
தானவனாய் நின்றுசிவ யோகஞ்செய்து
இயங்குமணி மண்டபஆச் சிரமந்தன்னை
இருந்துசிவ யோகமதா லறிவாய்ப்பாரே. 371

## ஐந்து ஆச்சிரமம்

அறிவான புலத்தியனே சொல்லக்கேளு
அருமையுள்ள பிர்மசாரி ஆச்சிரமந்தன்னை
நெறியாக ஒருபோது பிச்சைகொண்டு
நேமமுட னனுதினமும் வேதம்பார்த்து
திறிகால மறவாமல் நிஷ்டைநேமம்
செய்துமன தறிவாலே யோகஞ்செய்து
குறியாகச் சிகைவளர்த்து எண்ணைதள்ளிக்
கூர்மையுள்ள பிர்மஆச் சிரமந்தானே. 372

தானாகத் தானவனாய் மனதுகூர்ந்து
சங்கையுடன் யிம்முறைதான் தவறாமல்தான்
கோனான குருபதியில் மனதுகூர்ந்து
குறிப்புடனே செபிக்கிறதோர் மந்திரங்கேளு
தேனான அமுர்தமடா அம்கிலிசிம்மென்று
சிவசிவா தினம்நூறு செபித்தால்மைந்தா
ஊனான தேகமடா பிர்மமாச்சு
உத்தமனே பிர்மசூச் சிரமஞ்சித்தே. 373

சித்தியுடன் பிர்மசூச் சிரமஞ்சொன்னேன்
சிவசிவா கிரகஷ்த னாச்சிரமங்கேளு
பத்தியுடன் கொலைகளவு காமந்தீமை
பாராமல் சமுசார மார்க்கமாகி
சுததமுடன் சகலவுயிர் தானாயெண்ணி
சுகிர்தமுடன் தர்மங்க ளீய்ந்துகொண்டால்
வெத்தியுடன் சகலசவு பாக்கியம்பெற்று
விளங்குமடா கிரகஷ்த னாச்சிரமங்காணே. 374

காணவே கிரகமதி லிருந்துகொண்டு
காசினியில் தர்மவா னாகிமைந்தா
பூணவே சற்குருவின் பாதம்போற்றி
புத்தியுடன் செபிக்கிறதோர் மந்திரங்கேளு
தோணவே தானிருந்து புருவமேவி
சுத்தமுடன் ஓங்றீங் அங்உங்கென்று
பேணவே தானிருந்து செபித்தாயாகில்
பிலக்குமடா கிரகஷ்த னாச்சிரமம்பாரே. 375

பாரப்பா கிரகிஷ்த னாச்சிரமஞ்சொன்னேன்
 பதிவான சன்யாசி ஆச்சிரமங்கேளு
சேரப்பா சிகைநூல்கள் அகற்றிமைந்தா
 தேகசுத்தி காயாசம் செய்துகொண்டு
காரப்பா தற்பனஓ மங்கள்செய்து
 காலறிந்து சிவயோகக் கருத்தில்நின்று
நேரப்பா பிச்சைகொண்டு அறிவில்நின்றால்
 நிலைத்துதடா சன்யாச ஆச்சிரமங்காணே. 376

தானான சன்யாசம் பெற்றோர்தானும்
 தன்மையுட னிம்முறைகள் தவறாமற்றான்
தானான பதிநோக்கித் தானேதானாய்
 தன்மையுடன் செபிக்கிறதோர் மந்திரங்கேளு
தானான விஞ்சையுட ஓம்அய்யும் கிலியுஞ் சவ்வும்
 தன்மையுடன் தினம்நூறு செபித்தாயாகில்
தானான சன்யாசி யாச்சிரமம்மைந்தா
 தன்மையுடன் தானாகத் திறக்குங் காணே. 377

காணவே சன்யாச ஆச்சிரமஞ் சொன்னேன்
 கருணையுடன் வானப்பிரஷ்த னாச்சிரமங்கேளே
கோணவே சுகதுக்கம் ரெண்டும்விட்டு
 சூழ்காவிற் கிழங்கருத்திச் சுத்தமாக
பூணவே பனிவெயிலிற் பொருந்திமைந்தா
 புகழ்பஞ்சாக் கினிநடுவி லிருந்துகொண்டு
பேணவே குருபதியில் பெலமாய்நின்றால்
 பிலக்குமடா ஆச்சிரமம் பேணிப்பாரே. 378

பாரப்பா வானப்பிரஸ்த னாச்சிரமந்தானும்
 பதிவாகி நிற்பதற்கு மந்திரங்கேளு
நேரப்பா தானிருந்து குருவைப்போற்றி
 நீமகனே ஓம்அம்சிவ வசியென்றேதான்
காரப்பா புருவமதில் தினம்நூறுமைந்தா
 கருணையுட ணுருவேறக் காச்சிகாணும்
சீர்பெருகும் வானப்பிரஸ்த னாச்சிரமந்தானும்
 சிவசிவா திறமாகுஞ் சிவயோகம்பாரே. 379

பாரப்பா புலத்தியனே சொன்னவகைநாலும்
பதிவான அதிலிருந்து மனஞ்செவ்வையானால்
நேரப்பா அதிவர்னாச் சிரமந்தன்னை
நேர்மையுடன் சொல்லுகிறே னினைவாய்க்கேளு
காரப்பா பிரபஞ்ச மாயைவிட்டு
கனயோக நிஷ்டைதனைக் கடக்கத்தள்ளி
தேரப்பா செவியுடனே விழியுங்கெட்டு
சிவசிவா சின்மயமாய்த் தெளிவார்காணே. 380

தெளிவற்றுச் சுளியற்றுச் செகமுமற்று
சிவசிவா வென்றதொரு சத்தமற்று
ஒளிவற்று ஆகாச ஓசையற்று
ஒன்றுமுதல் எட்டுரெண்டு உணர்வுமற்று
நெளிவற்று நினைவற்று நேர்மையற்று
நேசமுதல் பாசமற்று நிலையுமற்று
அளிவற்று வெளியொளியில் யெங்குந்தானாய்
அமர்ந்திருந்தா லாதிவர்னாச் சிரமம்பாரே. 381

பார்பிரமச் சாரியடா பிர்மாவாகும்
பதிவான கிரகஸ்தன் விஷ்ணுவாகும்
நேர்குருவாஞ் சன்யாசம் ருத்திரனாகும்
நிலைவானப் பிரஷ்தனடா மயேசனாகும்
சீர்பெருகும் ஆதிவர்னாச் சிரமமைந்தா
சிவசிவா சதாசிவனாய்த் தெளிந்துகொள்ளு
ஆரறிவா ரஞ்சுநிலை விரதம்பெற்று
அமர்ந்திருப்பான் கோடியிலே ஒருவன்றானே. 382

ஒருவனடா உலகமதில் சிறுவனாகி
உத்தமர்க்குப் புத்திரனா யொடுங்கிவாழ்வான்
சிறுவனவன் செகசால மகிமையெல்லாம்
தீர்க்கமுடன் தானறிந்து சிவனேயென்பான்
பருவமுடன் பலசமயந் தானேதானாய்
பாருலகெல் லாம்நிறைந்த பரமாய்நிற்பான்
துருவமென்ற மேருவடா அண்டமேரு
சோதியென்ற சோதியைப்போல் துலங்குவானே. 383

துலங்கிநின்ற சோதியைப்போற் சோதியாகி
சோதிமய மானகே சரியாய்நின்று
விளங்கிநின்ற ஆதார வாசியாகி
மெஞ்ஞான பூரணமுந் தான்தானாகி
களங்கமில்லாக் கற்பூர சோதியாகி
கயிலாச மேருகிரி வாசமாகி
உளங்கனிந்த பூரணத்தே சிகராய்நின்று
உத்ததவ நிஷ்டைசிவ யோகியாமே. 384

சாமளை மந்திரம்

சிவயோகச் சாமளா அம்பாள்தன்னைத்
தினந்தோறு மவுனமதால் தியானஞ்செய்ய
சிவயோக ரகசியமா மந்திரந்தன்னை
செப்புகிறேன் புலத்தியனே தெளிவாய்க்கேளு
சிவயோக பூரணமாய் வந்தசூச்சம்
சிவசிவா ஓங்கிறீங் அங்கென்று
சிவயோக மானதொரு சிந்தையாகி
தினம்நூறு உருச்செபித்துத் திரமாய்நில்லே. 385

திரமாகத் தினம்நூறுருச் செபிக்குஞ்செய்கை
தீர்க்கமுடன் சொல்லுகிறேன் திருவைநோக்கி
கரமான இடதுகரந் தன்னிலேதான்
கருணையுடன் விபூதியைநீ நிறுத்திமைந்தா
பரமான விந்தெழுதி விந்துக்குள்ளே
பாலகனே அறுகோணம் நன்றாய்த்தீர்ந்து
வரமான அறுகோணத் துள்ளோங்கார
மார்க்கமுடன் தானெழுதி வங்கு சிங்கே. 386

வங்கென்றுஞ் சிங்கென்றும் ஓங்காரத்துள்
வணக்கமுடன் தானெழுதி வாசிபூட்டி
அங்கமுடன் கண்டமதி லங்கென்றூணி
ஆதிமனோன் மணியினுட அருட்கண்மேவி
எங்குநிறைந் திருந்தமயேஷ் பரியேயென்று
இன்பமுடன் ஓங்கிலி சிறீங்அங்கென்று
சங்கையுடன் புருவநடு மனக்கண்வைத்துத்
தான்செபித்து விபூதியைநீ தரித்துக்கொள்ளே. 387

கொள்ளடா விபூதிஉத் தளமாய்ப்பூசி
　　குருபரனைத் தியானித்துப் பணவிடைதான்கொண்டால்
உள்ளடா வாசியது உறுதியாகி
　　ஓதுகிற மந்திரமுஞ் சித்தியாகி
அல்லடா தேகவச்சிர காயமாகி
　　ஆதிமயேஷ் பரியுடைய அருளேதங்கும்
சொல்லடா அபமிருத்து விலகிப்போகும்
　　சுந்தரமா யென்னாளும் வாழலாமே. 388

வாழலா மயேஸ்பரியைத் தினமும்நோக்கி
　　மானதா யனுதினமும் பூசைசெய்தால்
ஆளலாம் அண்டபகி ரண்டமெல்லாம்
　　ஆதிமயேஷ் பரியுடைய அருளேகண்டால்
மேளெல்லாங் கற்பூர தீபம்போலே
　　விளங்குமடா சோதிப் பிரகாசங்காணும்
நாளெல்லாஞ் சோதிப்பிர காசங்கண்டால்
　　நல்லநா ளெந்தநாள் நாடிப்பாரே. 389

பாரப்பா நாடிமனக் கண்ணாலந்த
　　பருதிமதி சுடரொளியை நன்றாய்ப்பாரு
நேரப்பா முச்சுடரு மொன்றாய்நின்று
　　நெடுவானி லுதையமதாய் நேரேகண்டால்
மேரப்பா மேருநடு உதையம்பார்த்து
　　விளங்கிநின்ற கண்காச்சித் தன்னைப்பார்த்தேன்
சாரப்பா கண்காச்சி பார்க்கும்போது
　　சந்திரனுஞ் சூரியனு மொன்றாங்காணே. 390

ஒன்றாகக் காண்பது காச்சிகாச்சி
　　உற்பனமும் ஒடுங்கினமுஞ் செகசாலந்தான்
நன்றாகச் செகசால வித்தைபார்த்தால்
　　நன்மைதின்மை யென்றதெல்லா மொன்றுமில்லை
கண்டாயோ ஆதியிலே குமிளிவெள்ளங்
　　கரையேறிப் பாயிரதோர் சத்தந்தானும்
உண்டான போதிலது மடிந்துபோச்சு
　　ஒமுடிந்து போனதுவும் வெளியில்தானே. 391

தானென்ற வெளிதானே மூலமாகி
தற்பரத்தி னொளியாகிச் சத்தமாகி
நானென்ற சத்தமதாய் விழுந்தசத்தம்
நாடிநின்ற சத்தமதில் சுத்தமாச்சு
ஏனென்ற சுத்தமெல்லாஞ் சத்தமாகி
ஏகாந்த பரவெளியி லெங்குந்தானாய்
ஊனென்ற உலகமெல்லாம் ஆஊவென்று
உளன்றுமிகத் தளன்றுஅது உண்ணும்பாரே. 392

உண்ணுவது மொடுங்குவது மூன்றிலொன்று
ஓடுவது மாடுவது மூன்றிலொன்று
எண்ணுவது மெழுதுவது மூன்றிலொன்று
ஏங்குவதும் தாங்குவது மூன்றிலொன்று
நண்ணுவதும் நாடுவது மூன்றிலொன்று
நகைப்பதுவும் பகைப்பதுவு மூன்றிலொன்று
கண்ணுமனக் கண்ணதுவு மூன்றிலொன்று
கருணையுடன் மூன்றிலொன்றைக் கருதிப்பாரே. 393

கருதிமிகப் பார்க்கையிலே கருவொன்றாச்சு
கலந்துநின்ற பூரணமுந் தான்தானாச்சு
உறுதியுள்ள மவுனமதுந் தான்தானாச்சு
உத்தசிவ யோகமதுந் தான்தானாச்சு
பருதிமதி சுடரதுவுந் தான்தானாச்சு
பஞ்சகன மூலமதுந் தான்தானாச்சு
சுருதியுடன் நால்பதமுந் தான்தானாச்சு
சோதியென்ற சுடரொளியும் வெளிதானாச்சே. 394

வெளியொளியாய் நின்றபர வெளுயில்மைந்தா
வேதாந்த உயிர்பயிர்கள் செனித்துநல்ல
வெளியான வெளியொளியி லமர்ந்துபோச்சு
வேதாந்த பரவெளியின் விஞ்சைமூலம்
வெளியான மூலமடா வொளியாய்நின்று
விளங்குதடா திருநடன வேதக்கூத்து
வெளியான முழியதனால் நன்றாய்ப்பார்த்தால்
விசையான கால்விசைதான் வெளியிலாச்சே. 395

ஆச்சென்ற ஆசையெல்லாம் வெளிதானாச்சு
அருளான சிவயோகம் வெளிதானாச்சு
மூச்சென்ற சத்தமெல்லாம் வெளிதானாச்சு
மோகமென்ற ஆசையெல்லாம் வெளிதானாச்சு
பேச்சென்ற மந்திரமும் வெளிதானாச்சு
பேசாத மவுனமது வெளிதானாச்சு
நீச்சென்ற அமுர்தரசம் வெளிதானாச்சு
நிசமான பரவெளியும் வெளிதானாச்சு. 396

ஆச்சப்பா சகலமுமே வெளிதானென்றும்
அடங்கியே போனதுவும் வெளிதானென்றும்
நீச்சப்பா நிலையான கலையிற்பார்த்தேன்
நின்றகலை பருதிமதி சுடர்மூன்றாக
பேச்சப்பா பெருகிநின்ற வெளியில்பாரு
பிலமான மவுனமதா யிருந்துபார்த்தால்
மூச்சப்பா நிலையான சீவாத்துமாவும்
மூர்த்திபர மாத்மாவில் முத்தியாச்சே. 397

## ஜீவாத்மா பரமாத்மா

முத்தியுள்ள ஜீவாத்மா மூலத்தீதான்
முளங்கிநின்ற பரமாத்மா வெளிதானாச்சு
சுத்தமுள்ள வெளிதனிலே வாய்வுந்தீயும்
சுகமாக மண்ணுடனே தண்ணீராச்சு
பத்தமுள்ள மண்ணுடனே தண்ணீர்கூடி
பருமணியாய் நின்றதச னாதமாச்சு
புத்தியுடன் தசநாதங் காதிற்கேட்டால்
பூரணதே சிகரவர்தான் வாசமாச்சே. 398

வாசமுள்ள முப்பூவின் வாசந்தன்னை
மார்க்கமுடன் கண்டறிந்து கொண்டாயானால்
நேசமுள்ள வாசியடா வாசமாகி
நிலையான பூரணமுந் தான்தானாகி
பாசமுள்ள பலதொழிலுந் தான்தானாகி
பரைஞான கேசரியில் வாசமாகி
பேசவொண்ணா மவுனமதின் மவுனமாகி
பேரண்ட மானசிவ சூச்சங்கேளே. 399

கேளடா சூச்சாதி சூச்சந்தன்னை
கிருபையுடன் சொல்லுகிறேன் கேள்வியென்ன
வாளடா அண்டபகி ரண்டமான
மந்திரகலை யானசிவ வாமபீடம்
ஆளடா அந்தரமாய் நின்றபீடம்
அசைவற்று நின்றதொரு ஆதிபீடம்
சூளடா நின்றநவ ரெட்னபீடம்
சுத்தமுள்ள பீடமதின் சுகத்தைக்கேளே. 400

## முப்பூ

சுகத்தைஅனு பவிப்பதற்கு மைந்தாமைந்தா
சுகமான வெடிபூர மண்டத்தாதி
அகத்தைமிகத் தானறிந்து ஆதிமூன்றும்
ஆதியென்ற அம்பரத்தி நீராலாட்டி
முகத்தைமிகத் தானறிந்து ரவியிற்காய்ச்சி
முனையான சுழினைநந்தி செந்தீயாலே
செகத்தைமிகத் தானறிந்து புடமேசெய்ய
திருவாசி வாசியினால் முப்பூவாச்சே. 401

ஆச்சப்பா முப்பூவே நாதம்நாதம்
ஆச்சரியம் நாதம்விந்து பிரமகற்பம்
பேச்சப்பா பேசாத மவுனகற்பம்
பேருலகெல் லாம்நிறைந்த ஆதிவஸ்து
மூச்சப்பா நிறைந்ததொரு முதலாம்வஸ்து
முத்திதரும் வஸ்துவைநீ பூசைபண்ண
போச்சப்பா அபமிருந்து விலகிப்போச்சு
பூரணமா யென்னாளும் வாழலாமே. 402

பாரப்பா ஆதிதொடுத் தந்தந்தன்னை
பத்திமுத்தி யாகவேநீ சுத்தமானால்
நேரப்பா நின்றதொரு சோதிதீபம்
நின்னிடத்தில் நின்றிலங்கும் நினைவாய்ப்பாரு
காரப்பா கருணையினாற் கருவாய்ப்பார்க்க
கண்காச்சி மெத்தவடா கடைக்கண்ணால்பார்
ஆரப்பா கண்ணறிந்து பார்க்கப்போரார்
அங்கமென்ற செங்கதிரை யறிந்துகாணே. 403

காணடா கண்ணறிந்து கண்ணைக்கொண்டு
கருவான செங்கதிரைக் கண்டாயானால்
ஊணடா கலையறிந்து வாசிதன்னை
உத்தசிவ ஞானதிருப் புருவமீதில்
பேணடா பேணிமனங் கொண்டுநின்றால்
பிசகாது வாசிதிரு மூலத்தேகி
பூணடா பூண்டுகெதி கண்டபோது
போதமய மானபூ ரணமுமாமே. 404

ஆமப்பா பூரணமே ஆதியாகும்
ஆதிசிவ் சோதியடா அமுர்தபோதம்
தாமப்பா தன்னகமாய் வந்தபோதம்
சகலஉயிர் தாபரமாய் நின்றபோதம்
நாமப்பா வென்றதொரு நாதபோதம்
நடுவெழுந்த போதமடா நந்திக்கண்ணு
ஓமப்பா ஒன்றுமறி யாதகண்ணு
ஓமுடிந்த கண்ணதுவை யடக்கம்பண்ணே. 405

## அவையடக்கம்

அடக்கமென்ற அவையடக்க மொன்றுகேளு
அடிநடுவாய் நின்றதொரு ஆதிபீடம்
முடக்கமில்லாச் சிந்தையதாய்க் கண்டுகொண்டால்
முனையான சுழினையிலே வாசியேறி
நடக்கவிசை யானதிரு வாசியாலே
நந்தியெனுஞ் செந்தீயில் நாட்டமாகி
கடக்கவழி யறியாமல் நடுவில்நின்று
கால்மாறி யாடினதைக் கண்டுபாரே. 406

கண்டுபார் கமலரச விந்துதன்னை
கைமுறையாய் மெய்யெனவே கமலமேவி
உண்டுபார் கற்பூர தீபந்தன்னை
உன்தேகம் விளக்கொளிபோ லொளியோவீசும்
நின்றுபா ரந்தவெளி தன்னில்நின்று
நிசமான வெளியொளியும் நன்றாய்ப்பாரு
சென்றுநீ பார்த்ததினால் மைந்தாமைந்தா
திருவேறி உருவேறிச் செங்கண்ணாமே. 407

செங்கமலக் கண்ணான உப்புதன்னை
சிவசிவா அமுர்தரசத் தேனினாலே
அங்கமுடன் தானாட்டி உறங்கப்பண்ணி
அதன்பிறகு கமலரசப் பாலையூட்டு
சங்கையுட னந்தரசங் கொண்டபோது
தயக்கமுள்ள மயக்கமது தானேதீர்ந்து
மங்களமாய் மதிபோலே வளர்ந்துதேய்ந்து
மதிகுறைந்த ரவிதனையே கண்டுதேறே 408

தேறுவது ரவியான பூரம்பூரம்
சேர்ந்துநின்ற பூரமதில் காரமேறி
நீறுவது யென்னசொல்வே னந்தனீரு
நிசமான திருநீரு நிலையாய்க்கேணி
ஊறுவது முன்னிலையா யூறுங்கேணி
ஒடுங்காத குமிளியடா சத்தவெள்ளம்
சேரும்விதங் கண்டறிந்து நின்றுகொண்டால்
தெளிவான தங்கமடா தெளிந்துபாரே. 409

தெளிந்துநின்ற தங்கமடா அங்கமங்கம்
திருநிறைந்த அங்கமதின் செயலைக்கண்டு
அழுந்திஅங்கம் புகுந்தேறும் வாசிதன்னை
அடிநடுவின் முடிமேலே யழுந்திப்பாரு
வளிந்துவரு மமுர்தரச மென்னசொல்வேன்
மதியான விந்துவடா மவுனபோதம்
குழிந்துவரும் போதமதைத் தினமுங்கொண்டு
கூர்மையுடன் பூரணமாய்த் தெளிந்துபாரே. 410

பாரப்பா தெளிந்துநின்ற மாதுமையை
பத்தியுள்ள புலத்தியனே சொல்லக்கேளு
நேரப்பா செஞ்சடையோன் சடைமேல்மங்கை
நிலைத்துநின்ற கெங்கையடா மங்கைநாதம்
கூறப்பா குருவான மங்கைநாதம்
குன்றாத சத்தமடா குமுளிவெள்ளம்
பேரப்பா பெருகிநின்ற விந்துநாதம்
பேசாத வாசமதிற் நாதஞ்சேரே. 411

சேர்த்துமிக நன்மையுடன் சிமிழில்வைத்து
சிவானந்த பூரணத்தைத் தியானம்பண்ணி
பார்த்துமிகப் பூரித்துத் தம்பித்தப்பால்
பத்தியுடன் நெற்றிதனில் திலதம்போட்டு
கார்த்துநன்றாய் ரேசித்துக் கொண்டுநின்றால்
கருணையுடன் உன்சமுகங் கண்டோர்க்கெல்லாம்
மாத்திவிடுஞ் சகலபிணி ரோகமெல்லாம்
மாறாத சூனியமு மாண்டுபோமே. 412

போமென்று விடுகாமற் தினமுநீயும்
பூரணமாய் ரேசித்து நின்றுகொண்டால்
ஓமென்று நெற்றிதனில் திலதம்போட்டு
ஒருமனதாய்ப் பூரித்துக் கொண்டேநின்றால்
நாமென்ற வறுமைகள்தான் நாடாதோடும்
நன்மையுட னுன்சமுகம் நாடிப்பார்த்தால்
ஆமென்ற அருளான தீபந்தோன்றி
ஐஸ்வரியம் வளருமடா அறிந்துபாரே. 413

அறிந்துநிலை கண்டுமன வாசிபூட்டி
அருளான பூரணகே சரத்தில்நின்று
தெரிந்துமனத் திறமதனால் கமலமேவி
சிவசிவா கற்பூர தீபந்தன்னில்
வருந்திஅந்தத் தீபமதால் சோதிகண்டால்
வந்துதடா சிவஞான வாசியோகம்
பொருந்தியந்தச் சிவயோகந் தனிலிருந்து
பூரணமாய் நின்றுபூ ரணத்தைப்பாரே. 414

**கற்பூரச் சுண்ணம்**

பாரப்பா பூரணமாய்ப் பூரச்சுண்ணம்
பத்தியுள்ள புலத்தியனே பகரக்கேளு
காரப்பா நிறைந்தகற் பூரம்வாங்கி
கமலமென்ற அமுர்தமதில் சுத்திபண்ணி
நேரப்பா கல்வமதில் பொடித்துக்கொண்டு
நிசமான துருசுஅடி மூன்றுங்கூட்டி
வாரப்பா அமுர்தரசத் தேனைவிட்டு
வாசமுடன் தானரைத்து வட்டுப்பண்ணே. 415

பண்ணியதோர் வட்டதனைக் காயப்போட்டு
பதிவாக ஓடழுத்தி மண்ணுஞ்செய்து
கண்ணிறைந்த சற்குருவை தியானம்பண்ணி
கருணையுடன் புடம்போட்டு யெடுத்துப்பாரு
விண்ணிறைந்த சோதியுட கிருபையாலே
வேதாந்தக் கற்பூரச் சுண்ணமாச்சு
புண்ணியனே சுண்ணமதைப் பதனம்பண்ணி
புத்தியுடன் தாம்பூலந் தின்றுபாரே. 416

பாரப்பா தாம்பூலந் தரிக்கும்போது
பத்தியுடன் கற்பூரச் சுண்ணங்கொண்டால்
வீரப்பா கொண்டதொரு தந்தவாய்வு
மேலெரிவு காலெரிவு அஷ்டகுன்மம்
நேரப்பா கற்பூர வாசங்கண்டால்
நெகிழ்ந்துநின்ற தந்தமெல்லா மிறுகும்பாரு
ஆரப்பா அறிவார்கள் பூரச்சுண்ணம்
அரகரா கற்புர மாதிதானே. 417

ஆதியென்று மந்தமென்று ஆடிபூரந்தான்
ஆரறிவா ரடிமுடியை யறிந்துகொண்டால்
சோதியென்ற கற்பூரம் பூரச்சுண்ணம்
சோலிவெகு சோலியடா சுண்ணம்பண்ண
நீதியுடன் சற்குருவால் முறைகள்கண்டு
நேர்மையுடன் செய்துகொண்டா லவனேசித்தன்
வாதியென்ற ரசவாதி செய்வான்பாரு
மானிலத்தில் மானிடர்கள் மயங்குவாரே. 418

மயங்காம லின்னமொரு முறையைக்கேளு
மார்க்கமுடன் கற்பூரக் கட்டிவாங்கி
தியங்காமற் கற்பூரக் கட்டிதன்னை
திருவான சேனீரால் சுருக்குப்போட்டு
நயங்காணச் சுருக்கிட்டு யெடுத்துக்கொண்டு
நாதாந்த வெடியுடனே சத்துக்கூட்டி
செயங்காணக் கல்வமதில் வாய்நீர்விட்டு
செம்மையுடன் மூன்றுகரு ஒன்றாயாட்டே. 419

ஆட்டிநன்றாய் வழித்துருட்டி வட்டுப்பண்ணி
அப்பனே ரவியினிடங் காயவைத்து
தாட்டிகமா யோடமுழுத்தி மண்ணுஞ்செய்து
தாய்பதத்தில் பூசித்து புடத்திற்போடு
வாட்டிநன்றாய்ப் புடம்போட்டு எடுத்துப்பாரு
மகத்தான சுண்ணமதாய் நீறிநிற்கும்
பூட்டிநன்றாய் நீறினதோர் சுண்ணந்தன்னை
புத்தியுடன் பரணிதனி லடக்கம்பண்ணே. 420

பண்ணப்பா பதனமதாய்ப் பதனம்பண்ணி
பக்குவமாய்ப் பணவிடைதான் கொண்டாயானால்
கண்ணப்பா தான்துலங்கு மந்தக்கண்ணால்
கயிலாச மேருதனைக் காணலாகும்
விண்ணப்பா மேருதனைக் கண்டாயானால்
வேதாந்த கற்பூர தீபங்காணும்
நண்ணப்பா அத்தீபந் தன்னைக்கண்டால்
நாதபூ ரணமான தேகமாச்சே. 421

ஆச்சப்பா தேகமென்ற பாசந்தானும்
ஆதியிலே நாதவிந்தா யமைந்தவாறு
பேச்சப்பா பேசாத் நாதவிந்து
பெறுகிநின்று ஒன்றாக நின்றபோது
மூச்சப்பா உண்டாகி அதனிலொருஆவி
முத்தியுள்ள சத்தியமா யக்கினியுமாச்சு
நீச்சப்பா நிலையாத அக்கினிதன்னாலே
நிசமாக நால்பதமும் பூரணமாங்காணே. 422

காணவே பூரணமு மக்கினிதானாச்சு
கருணையுள்ள ஆகாச மக்கினிதானாச்சு
பூணவே வாசியது அக்கினிதானாச்சு
பொருந்திநின்ற அப்பதுவு மக்கினிதானாச்சு
தோணவே பிருதிவியு மக்கினிதானாச்சு
சுகமான அனலதுவு மக்கினிதானாச்சு
பேணவே சிவயோக மக்கினிதானாச்சு
பெலமான சத்தமது அக்கினிதானாச்சே. 423

தானான அக்கினியே திருவாசியாகும்
சதாகோடி மந்திரத்துக் குறுதியதுவாகும்
ஊனான தேகமதுக் காதாரமாகும்
உண்மையுள்ள தீபவொளி நன்மையதுவாகும்
தேனான மதியமுர்த மக்கினிதன்னூரல்
சிவசிவா வென்றதுவு மக்கினிதன்னாவி
மானாகே ளாவியது சீவசிவமயமாய்
மகத்தான மூலமது அக்கினிதன்தேகம். 424

தேகமென்ற பீடமதில் நாதகீதம்
தினந்தினந்தான் முழங்குதடா அறிவாய்ப்பாரு
ஆகமுட னடிநடுவு முடியொன்றாக
அமர்ந்திருந்து பார்க்கையிலே அந்தநாதம்
ஏகமுட னெங்குமதாய் ஒன்றாய்நின்று
எழுந்தசுத்த ஆவியடா சத்தமாச்சு
தாகமுடன் சத்தமதாய் வந்தசத்தம்
சதானந்தத் திருநடன ஓசையாச்சே. 425

ஓசையென்ற திருநடனம் பார்ப்பதென்ன
உரிமையுடன் சிவதவங்கள் செய்வதென்ன
நேசமுடன் வாசிநிலை பார்ப்பதென்ன
நிலையறிந்து தீபமதை நேர்வதென்ன
பாசமுடன் சித்துவிளை யாடலென்ன
பத்தியுடன் சிவயோக விபரமென்ன
நாசிமுனை மீதில்வெகு நாட்டமென்ன
நாடிநின்ற நாட்டமெல்லா மாசைதானே. 426

தானென்ற ஆசையது தான்தானாச்சு
சதானந்த யோகமது தான்தானாச்சு
ஊனென்ற கலைக்கியானந் தான்தானாச்சு
ஓடுவது மாடுவதுந் தான்தானாச்சு
ஏனென்ற சத்தமதுந் தான்தானாச்சு
ஏங்குவதுந் தாங்குவதுந் தான்தானாச்சு
ஊனென்ற உடலுயிருந் தான்தானாச்சு
உகமுடிந்து போனதுவுந் தான்தானாச்சு. 427

தானாகித் தான்முடிந்த சூச்சந்தன்னை
தரணிதனி லறியாமல் தான்தானென்று
ஊனாகி நின்றதொரு உடலைக்காணான்
உடலில்நின்ற அச்சரத்தி லுறுதிகாணான்
பூனாகி நின்றதிரு வாசிகாணான்
பொருந்திநின்ற வாசிதிரு நயனங்காணான்
வானாகி நின்றஅடி முடியுங்காணான்
மதிகெட்டு விதியழிந்து மாழுவானே. 428

மாழுவது ரெண்டுவித மைந்தாகேளு
மகத்தான சீவகலை மாறும்போது
ஆழுவது பூரணமா யறிவோடய்யா
அடங்குவது பராபரத்தோ டமைப்பேயாகும்
சூழுவது நோயுடனே பாசஞ்சூழ்ந்தால்
சுழிவான மதிமயங்கி அலைவான்பாரு
காலுநிலை யறியாமல் அலைந்துகெட்டு
கானலிலு நீரினுலுங் கரைந்துபோமோ. 429

கறைந்துமதி போகாம லறிவோடேர
கருணையுள்ள சற்குருவைக் கனிந்துதேடி
நிறைந்தபரி பூரணமா யுபசரித்து
நித்தியமு மவர்பாதஞ் சிரமேற்கொண்டு
திறைந்துவரும் பாசமதை யகற்றிநல்ல
தீபவொளி சோதியதைத் தினமுங்காண
குறைந்தமதி நிறைந்தகதிர் கற்பங்காட்டி
குருவான சிவயோக வழிசொல்வேன். 430

என்னமுட னவர்பதமே கெதியென்றெண்ணி
இன்பமுட னடுமைதனக் கடுமையானால்
தன்னகமே தானாகத் தான்தானென்று
தன்மையுள்ள கண்மணியே வாவென்றேதான்
உன்னகமே தானாக உண்மைகேளு
உண்மையென்ற அகாரமுட னுகாரம்ரெண்டும்
முன்னகமே தானாகக் கண்டுகொள்ள
முத்தியுள்ள அகாரமதைப் பூசைபண்ணே. 431

பண்ணப்பா அகாரமதைப் பூசைபண்ணப்
பாலகனே அபமிருத்துப் பாழாய்ப்போச்சு
கண்ணப்பா தான்துலங்கிக் கதிரில்சேரும்
கதிரான சுடரதிலே ஒளிதான்காணும்
விண்ணப்பா நிறைந்தஒளி கண்ணிற்கண்டால்
வேதாந்த தேகமடா மெய்தான்பாரு
நண்ணப்பா தேகமென்ற நடத்தைகாணும்
நன்மையுடன் பாராட்டால் நசிக்குந்தானே. 432

நசிக்காம லகாரமதை உருவேசெய்து
நன்மையுட லுகாரமதை நாட்டிக்கொண்டால்
பசிக்காம லமுர்தரசங் கொண்டோர்போல
பாலகனே பசியடங்கி வாசியேறும்
பொசிக்காமல் எட்டிரண்டு மறந்தாயாகில்
பொல்லாத தீவினையால் போகுங்காயம்
வசிக்கஒரு வசியமது சொல்லக்கேளு
மந்திரகலை அம்பிகா தேவிதானே. 433

## அம்பிகாதேவி மந்திரம்

தேவியென்ற அம்பிகா தேவிதன்னை
செம்மையுடன் கண்டுபதஞ் சேவைசெய்ய
ஆவியென்ற மந்திரமாஞ் சூச்சந்தன்னை
அருள்பெருகும் புலத்தியனே சொல்லக்கேளு
தாவிமனங் கொண்டுகே சரத்தில்நின்று
தன்மையுடன் அங்உங்நங் கிலிஓமென்றேதான்
கூவிமன மசையாமல் மவுனமாகக்
கூர்மையுட னந்திசந்தி உருநூற்செய்யே. 434

செய்யடா உருவறிந்து உருவேசெய்ய
திருவுருவாய் நின்றதொரு மூலமீதில்
மெய்யடா அக்கினிகொண் டுயரயேறி
வேதாந்த பூரணத்தில் தீபங்காணும்
மய்யடா மய்யமதில் தீபங்கண்டால்
மகத்தான அம்பிகா தேவிரூபம்
அய்யனே நன்றாகச் சொல்லக்கேளு
ஆலாத்தி கற்பூர தீபந்தானே. 435

தானென்ற தீபமதில் மனதைநாட்டி
    தன்மையுடன் விபூதியைநீ கையில்வாங்கி
கோனென்ற குருபரனைத் தியானம்பண்ணி
    குவலையத்து மானிடர்க்குக் கடாட்சித்தாக்கால்
ஊனென்ற தேகமதில் நின்றநோய்கள்
    உத்தமனே அப்போதே விலகிப்போகும்
வினென்ற பில்லிமுதல் யேவலெல்லாம்
    விட்டகன்று போகுமடா மெய்தான்பாரே. 436

பாரடா அம்பிகா தேவிதானும்
    பதிவான அட்டசித்துக் குயிரேயாகும்
ஆரடா அறிவார்கள் தேவிமூலம்
    அரகரா குருவருளால் அறிந்தாயானால்
நேரடா குருவருளால் தியானஞ்செய்து
    நின்மனமே சாட்சியதால் நிற்கவேணும்
வீரடா கொண்டதொரு மூடர்க்கீய்ந்தால்
    வீணாகிப் போகுமடா தன்னைக்காரே. 437

தன்னைத்தாய் தானறிந்து தன்னைக்கார்க்க
    தாரணியில் கோடான கோடிக்கொன்று
விண்ணைத்தா னறிந்துநடு விண்ணில்நின்று
    வேதாந்த சற்குருவைத் தியானம்பண்ணி
மண்ணைத்தா னறித்துமண்ணுந் தண்ணீர்கொண்டு
    வகையுடனே அடிப்படையைப் பிலக்கப்பண்ணி
கண்ணைத்தா னறிந்துமனக் கண்ணாலந்த
    கருணைவளர் ஓங்காரக் கம்பம்நாட்டே. 438

நாட்டுவது ஓங்கார வாசிக்கம்பம்
    நடுவீதி முதல்வீதி அந்தவீட்டில்
மூட்டுவது நாசிநுனி வாசிமைந்தா
    முனைகண்டு நிருத்தியந்த வாசிநாட்டி
பூட்டுவது ரவிமதியு மொன்றாய்ப்பூட்டி
    பூரணமாம் புருவநடுக் கமலமீதில்
தாட்டிகமாய் நின்றுஅந்தச் சோதிதன்னை
    தன்மனமே சாச்சியதாய்க் கண்டுபாரே. 439

கண்டுநிதஞ் சோதியைநீ தெரிசித்தாக்கால்
கயிலாச பூரணதே சிகராய்வாழ்வாய்
நின்றுநிலை தனையறிந்து வாழ்த்துகொண்டால்
நிலையான சோதிபர தேசியாகும்
அண்டர்நிதங் கண்டுதொழும் வாசியாகும்
அருளான வாசிசிவ யோகியாகும்
எண்டிசையுந் தானவனா யோகியாகி
யேகநிரா மயமான குருவாவாயே. 440

குருவான பெரியோரை வணங்கிநித்தம்
கூர்மையுட னடிதொழுது குணமதாக
திரிவதனா லறிவுதனைச் சோதிப்பார்கள்
சிந்தைமன தொன்றாக நின்றாயானால்
தருவான கற்பகமு மவனுக்கீய்ந்து
தன்னைமிகத் தானறியத் தீட்சைசொல்லி
அருவருவாய் நின்றதொரு சோதிகாட்டி
ஆனந்த மதியமுர்த மீவார்பாரே. 441

பாரப்பா அமுர்தரச பானமீய்ந்து
பதிவான ஆதார மூலஞ்சொல்லி
நேரப்பா நிலையான வாசிசொல்லி
நிசமான பூரணத்தி நிலையுஞ்சொல்லி
சாரப்பா மேருஅடி முடியுங்காட்டி
சதாபோத நிருவிகற்ப சமாதிசொல்லி
வீரப்பா கொண்டதொரு லகிரிசொல்லி
வேதாந்த சின்மயத்தின் வெளிசொல்வாரே. 442

வெளியான பரமவெளி தன்னைக்காட்டி
வேதாந்தப் பரமவெளி தன்னிலேதான்
ஒளியான சோதிபரஞ் சோதியான
உத்தகலைக் கியானமிரு நயனங்காட்டி
விழியான நயனமிகு சூட்சங்காட்டி
மேலான அனுக்கிரக வீடுஞ்சொல்லி
தெளிவான சிந்தையதாய் நாட்டமாகி
சிவசிவா சிவயோகத் திருவென்பாரே. 443

## பகவதி தியானம்

பாரப்பா இன்னமொரு தீச்சைமார்க்கம்
பத்தியுள்ள புலத்தியனே சொல்லக்கேளு
நேரப்பா பகவதியாள் தியானந்தன்னை
நேர்மையுடன் சொல்லுகிறே நிசமதாக
சாரப்பா தன்சார்பு நிலையில்நின்று
சங்கையுடன் ஓம்றீங்றீங் அங்கென்றேதான்
காரப்பா புருவநடுக் கமலத்தேகி
கருணையுட ணாயிரத்தெட் டுருவேசெய்யே. 444

செய்யடா மானதமா யுருவேசெய்யத்
திருஉருவாய் நின்றபக வதியாள்தானும்
மெய்யடா உனதிடமாய் நிருத்தஞ்செய்வாள்
மெஞ்ஞானக் கருணைவிழிக் கண்ணால்பார்த்து
கையடா கூப்பியபடி பணிந்துகொண்டு
கருணைபெறத் தேவதா பகவதிவாவென்று
வையடா அமுர்தரச பானம்வைத்து
மார்க்கமுடன் ராஜரா ஜேஸ்பரியென்னே. 445

என்னம்மா ராஜரா ஜேஸ்பரியேயென்று
ஏகநிரா மயமாகத் தியானம்பண்ணி
கன்னம்மா கமலாயி மந்திரரூபி
கமலசித்து ரூபசிவ சோதித்தாயே
முன்னம்மா நீயிருந்து தன்னைக்கார்த்து
முத்தியுட னினைத்தபடி சுத்தமாக
பண்ணம்மா யிதுசமய மென்றுநீயும்
பகவதியாள் விபூதியைநீ தரித்துக்கொள்ளே. 446

கொள்ளடா விபூதியைநீ தரித்துக்கொண்டு
குணமாகப் பகவதியைத் தியானம்பண்ணி
நில்லடா உன்முகங்கண் டோருக்கெல்லாம்
நீங்காத பாவமெல்லாம் நீங்கிப்போகும்
சொல்லடா உன்வசனம் நன்மையாகும்
சோதிதிருப் பகவதியாள் சுருக்கினாலே
அல்லடா உன்மனதை நோகப்பண்ணும்
அவர்கள்குடி செந்தீயி லழுந்துப்பாரே. 447

பாரப்பா பகவதிசென் றிருக்கும்நாடு
பாதாள மலையாளம் நடுநாடாகும்
காரப்பா மலையாள நடுநாடய்யா
கண்மூக்கு மத்தியென்ற உச்சிவட்டம்
நேரப்பா உச்சிவட்ட மலையாளத்தில்
நிலையான பகவதியை யார்தான்காண்பார்
ஆரப்பா அறிவார்க ளாருமில்லை
அந்தமலை உச்சியடி வாரம்பாரே. 448

பாரப்பா உச்சிஅடி வாரமான
பதிவான மலையாள பகவதிதன்பீசம்
நேரப்பா சொல்லுகிறோம் ஸ்ரீம்றீங்கென்று
நிலையான மலையாளத் துருவமீதில்
சாரப்பா சார்ந்தஅந்த அடிவாரத்தில்
சந்திரனைச் சூரியனிற் சாரப்பண்ணி
காரப்பா அக்கினிகொண் டுயரயேறி
கண்ணறியக் கண்ணாரத் தியானம்பண்ணே. 449

பண்ணப்பா பகவதியைத் தியானம்பண்ண
பரைஞான கேசரியில் பளீரென்றேதான்
முன்னப்பா நிறைந்த்திருக் கண்ணில்தோணும்
முத்திதரு மவ்வொளியில் நின்றுபாரு
மண்ணப்பா குவிந்துமலை யாளந்தன்னில்
மக்களே வெகுநிதிகள் காணலாகும்
விண்ணப்பா அதனில்வெகு சோதிகாணும்
மேல்கீழும் நன்றாக நின்றுபாரே. 450

நின்றுமிகப் பார்க்கையிலே மைந்தாமைந்தா
நிசமாக அருளோடு பொருளுங்கண்டேன்
அண்டரொடு முனிவர்களும் ரிஷிகள்சித்தர்
அனேகவித விதமாக யங்கேகண்டேன்
பண்டுடைய வேதமொடு சாத்திரங்கள்
பலவிதமாய் நின்றுவிளை யாடல்கண்டேன்
கண்டதொரு காச்சியெல்லா மங்கேகண்டேன்
கலந்துவெளி வெளியான கருக்கண்டேனே. 451

கருக்கண்டு கருவறிந்து உண்ணும்போது
கருஉருவாய் நின்றதொரு நாதங்கண்டேன்
உருக்கொண்டு நின்றதொரு நாதந்தானும்
ஓமுடிந்து நின்றவிடம் பார்க்கும்போது
திருக்கண்டு ஆடியது முடிந்துதப்பா
சிவசிவா யென்னசொல்வேன் வெளிதானாச்சு
மருக்கொண்டு நின்றவெளி தன்னைக்கேளு
மகத்தான அண்டவெளி உச்சிதானே. 452

உச்சியென்ற மூலமடா யார்தான்காண்பார்
உண்மையென்ற ரகசியமடா வெளிவிடாதே
பச்சியென்ற பச்சியடா அண்டரெண்டம்
பாய்ந்துநின்ற மத்தியடா புருவமத்தி
குச்சியென்ற கோலாலே யளந்துபார்க்க
கொடுமுடிக்கு மடிப்படைக்கு மிச்சமாச்சு
உச்சமென்ற மாளிகையில் நிறுத்திப்பார்த்தால்
ஓங்காரக் கம்பநுனி மிச்சமாச்சே. 453

ஆச்சப்பாமிச்சமதாய் நின்றமிச்சம்
அண்டமென்ற சுழினையிலே நின்றுபார்த்தேன்
காச்சப்பா கம்பநுனி மிச்சம்பார்த்தால்
கம்பநுனி கற்பூர தீபம்போலே
பேச்சப்பா பேசாத சோதியாச்சு
பிரணவமாய் நின்றதொரு சோதித்தாயை
மூச்சப்பா நிறைந்ததிரு வாசியாலே
முனைகண்டு கம்பமதில் யேறினேனே. 454

ஏறினேன் சவுதகிரி வட்டமேறி
ஏகாந்த வெளியொளியைப் பார்த்துமைந்தா
மீறினேன் அகாரமதின் செயல்தன்னாலே
மின்னொளியி னமுர்தரச பானங்கொண்டு
தேறினேன் சாகாத கால்மேல்நின்று
தெளிந்துகொண்டு போகாத புனலைக்கண்டு
ஆறினேன் வேகாத தலையைக்கண்டு
அடங்கினேன் முப்பொருளு மடக்கினேனே. 455

## ஆதி குரு

அடக்கமென்ற முப்பொருளு முப்பூவாச்சு
ஆதியென்ற குருவாச்சு யவாதியாச்சு
அடக்கமென்ற ஆதிகுரு முப்பூவாலே
ஆனந்த மானதொரு கதையைக்கேளு
அடக்கமென்ற பிருதிவியு மப்புஉப்பு
மாதியென்ற பூரணமும் ஒன்றாய்க்கூட்டி
அடக்கமென்ற பழச்சாற்றால் நன்றாயாட்டி
ஆவிபுடத்தில் தானவித்து யெடுத்துக்கொள்ளே. 456

எடுத்துமிகப் பதனமதா யெடுத்துக்கொண்டு
என்மகனே மண்ணுடனே தண்ணீர்கூட்டி
கடுத்ததொரு குகைதனிலே வைத்துமூடி
கருகவித்த மருந்ததுவுங் கூடச்சேர்த்து
அடுத்ததொரு அக்கினியி லுருக்கிப்பாரு
அடங்கிநின்ற சித்தாகிச் சத்துமாச்சு
முடித்ததொரு சத்தெடுத்து வெள்ளிநாலில்
முனையறிந்து தானுருக்கி யெடுத்துப்பாரே. 457

எடுத்துமிகப் பார்க்கையிலே மைந்தாகேளு
ஏகாந்த வெள்ளியடா தங்கமாச்சு
தொடுத்தவெள்ளி தங்கமய மாகக்கண்டால்
சோதிவெளி யானசிவ சோதிகாணும்
அடுத்தசிவ சோதிமய மாகக்கண்டால்
அஷ்டாங்க யோகமடா திட்டமாச்சு
முடித்ததொரு திட்டமடா அடுத்தபேச்சு
முனையறிந்து இன்னமொரு சத்தங்கேளே. 458

சத்தமது தானெடுங்கு மப்புமுப்பும்
சங்கையில்லா விந்துஉடன் மூன்றுங்கூட்டி
சுத்தமுள்ள அரிதாரம் காரம்வீரம்
சுகமாக அறுசரக்குங் கல்வத்திட்டு
பத்தமுள்ள பழச்சாற்றால் நன்றாயாட்டி
பாலகனே உருட்டிமிக அவித்தெடுத்து
வித்தான செம்புடனே சிவந்தான்கூட்டி
வேகமுள்ள அவிமருந்து கூடச்சேரே. 459

சேர்த்துவொன்றாய்க் கூட்டியொரு குகையில்விட்டு
திரையகல ஊதியெடு சத்துமாகும்
பூத்துமிக நின்றசத்தைப் பதனம்பண்ணி
புதுமையுள்ள சத்துடனே வெள்ளிநாலு
காத்துமிக உருக்கியதைப் பார்க்கும்போது
கண்கொள்ளாக் காட்சியடா தங்கமேரு
மாத்ததிக மானதங்க மேரைக்கண்டு
மகத்தான சிவயோக வழியைப்பாரே. 460

வழியான துறையறிந்து வெளியிலேகி
வந்துவெளி தனிலுளன்று மயக்கமாகி
தெளிவான சோதியைத்தான் அறியாமாண்பர்
செகந்தனிலே மெத்தவடா வேடம்பூண்டு
நெழியான வழிதுறையை அறியமாட்டான்
நிலையான கலையறிந்து யோகஞ்செய்யான்
பழியான பாவமதைத் தினமுஞ்செய்து
பாழ்நரகில் குடியிருந்து பாழாவானே. 461

பாழான முப்பாலை யறியவேணும்
பரமகயி லாசவரை பார்க்கவேணும்
காலான வாசிநிலை காணவேணும்
கருணைவளர் பூரணத்தைப் பணியவேணும்
மேலான பூரணத்தைப் பணிந்துகொண்டு
மெஞ்ஞான தீபவொளி காணவேணும்
நூலான சாத்திரத்தைப் பார்த்துமைந்தா
நுணுக்கமென்ற கருக்களைநீ நோக்குவாயே. 462

நோக்குவது தீபமதை நோக்கவேணும்
நெடியான சீவநிலை காணவேணும்
மூக்குநுனி முனையறிந்து முனைமய்யத்தில்
முத்தியுடன் சிவயோக முடிக்கவேணும்
வாக்குமன தொன்றாகி மனக்கண்கொண்டு
மகத்தான சத்திசிவ பூசைவேணும்
தூக்கிறதோர் கெவுனரச வாசிவேணும்
சுகமான இடமறிந்து தூங்குவாயே. 463

தூங்குவது பூரணத்திற் தூங்கவேணும்
தூங்கிமன தறிவாலே விழிக்கவேணும்
பாங்குபெற நித்தியகர்ம அனுஷ்டானத்தில்
பலநினைவைத் தானிருத்திப் பதியவேணும்
பூங்கமல உச்சியிலே நயனநாட்டம்
புத்தியுடன் தானிருந்து தீபம்பார்த்து
தாங்குவது என்னவென்றால் மைந்தாகேளு
சற்குருவின் பாதமதைத் தாங்கிப்பாரே. 464

பாரப்பா இன்னமொரு சூச்சஞ்சொல்வேன்
பதிவான புலத்தியனே நன்றாய்க்கேளு
நேரப்பா நின்றகுரு பாதத்தீபம்
நினைவுகொண்டு மனதறிவால் தாங்கும்போது
மேரப்பா அண்டமொடு புவனமெல்லாம்
மெஞ்ஞான தீபமதின் மேலேகண்டேன்
ஆரப்பா அறிவார்கள் ஞானதீபம்
அறிவான அறிவாளி தீபந்தானே. 465

## நாக செந்தூரம்

தானென்ற தீபமதைத் தினமும்நோக்க
சதானந்த தெரிசனத்தைச் சாற்றக்கேளு
வானென்ற நாகமொடு ரசமுந்தங்கம்
மகத்தான கெந்தியொடு தாரஞ்சேர்த்து
கோனென்ற பொற்றலையின் சாத்தாலாட்டி
கூர்மையுடன் தானரைத்து வட்டுப்பண்ணி
தேனென்ற வாலைபதந் தியானம்பண்ணி
தீர்க்கமுடன் புடம்போட்டு யெடுத்துப்பாரே. 466

எடுத்துமிகப் பார்க்கையிலே மைந்தாகேளு
என்னசொல்வேன் செந்தூர மதிககாந்தி
தொடுத்தகதிர் காந்தியென்ற செந்தூரத்தை
தொல்லுலகில் கோடியிலே ஒருவர்காண்பார்
அடுத்ததொரு செந்தூரந் தன்னில்மைந்தா
அப்பனே பணவிடைகால் கொண்டுதேர்ந்தால்
முடித்ததொரு தேகமதை யென்னசொல்வேன்
முத்தியுள்ள வாலைவய தாகும்பாரே. 467

பாரப்பா வாலைவய தானாலென்ன
    பதிவான சாத்திரங்கள் பார்த்தாலென்ன
மேரப்பா கற்பமதைக் கொண்டாலென்ன
    மெஞ்ஞான சிவயோகத் திருந்தாலென்ன
காரப்பா அண்டமெல்லாம் னொடியிற்சுத்தி
    கற்பாந்திர வரையிருந்து கனிந்தாலென்ன
நேரப்பா மனம்நிறுத்தி அறிவோடந்த
    நிலையறிந்து நிற்பதுவே முத்திதானே. 468

முத்தியுள்ள சற்குருவின் பாதங்காண
    முனையான கருவிலொரு விபரங்கேளு
பத்தியுடன் தான்முடித்த செந்தூரத்தில்
    பாலகனே பணவிடைதா னெடுத்துக்கொண்டு
சுத்தமுள்ள செம்பினிலே பத்துக்கொன்று
    சுருக்கிட்டு உருக்கியதை யெடுத்துப்பாரு
சித்தியுள்ள ஆறுவய தென்னசொல்வேன்
    சிவசிவா தங்கவய தாகுந்தானே. 469

தானென்ற பூரணமாந் தங்கத்தாயை
    சதானந்த பரப்பிர்ம சோதியென்று
ஊனென்ற சராசரத்துக் குயிர்தானென்றும்
    உத்தசிவ யோகமதுக் காதியென்றும்
மானென்ற வாசிதனக் குயிர்தானென்றும்
    மகத்தான பொருளென்றும் அருளேயென்றும்
தேனென்ற அமுர்தரசத் தெளிவேயென்றும்
    தெளிந்துநின்ற பூரணமே யென்றுபோற்றே. 470

போற்றியே பூரணமாஞ் செந்தூரத்தை
    பூரணச்சந்திரோ தயமென்ற வெள்ளிதன்னில்
பார்த்திபனே பதினாறுக் கொன்றுபோடு
    பதிவான குகைதனிலே உருக்கிப்பாரு
கார்த்துமன துறுதியினா லுருக்கிப்பார்க்க
    கனகமென்ற கனகரதி வயதென்சொல்வேன்
தேத்தியதோர் வயதறிய முடியாதய்யா
    செகசோதி யானபரஞ் சோதியாமே. 471

ஆமப்பா ஆதிபரஞ் சோதியான
அருளான செந்தூரந் தன்னைமைந்தா
நாமப்பா சொல்லுகிறோம் நவலோகத்தில்
நாட்டமுட னொன்றுபத்தாய் நாட்டிப்பாரு
ஓமப்பா ஒன்றுபத்தாய் நாட்டிப்பார்க்க
உள்ளெழுந்த சோதியைநா னென்னசொல்வேன்
தாமப்பா தன்மயமாய் நின்றசோதி
சகலகலை பூரணத்தின் சோதிகாணே. 472

காணாத கண்காட்சி சோதியாகும்
கருணையுள்ள பூரணமுஞ் சோதியாகும்
கோணாத வாசியதுஞ் சோதியாகும்
குருவான பிர்மமதுஞ் சோதியாகும்
மாணாகேள்சசிவயோகஞ் சோதியாகும்
மகத்தான அண்டமெல்லாஞ் சோதியாகும்
தோனாத சோதியெல்லாஞ் சோதியாகும்
சோதிமய மாய்விளங்குஞ் சோதிதானே. 473

சோதியென்ற சோதியைத்தான் கண்ணாற்காணச்
சொல்லுகிறேன் கருமான சூட்சந்தன்னை
ஆதியென்ற இரும்பையொரு கல்வத்திட்டு
ஆதிவிந்து தன்னுடனே வாய்நீர்கூட்டி
சாதியென்ற சம்பழத்தின் சாராலாட்டி
சாதிலிங்க ரசத்துடனே நாகஞ்சேர்த்து
ஓதியதோர் மந்திரத்தால் பாகம்பண்ணி
உத்தமனே கடலைமணி போலேசெய்யே. 474

செய்ததொரு மணியெடுத்து மைந்தாமைந்தா
செயமான தங்கமதை உருக்கிக்கொண்டு
கொய்ததொரு மணியெடுத்துக் கொடுத்துப்பாரு
குடுக்கவே வாங்கியது குருவாய்நிற்கும்
உய்தமுள்ள குருவான களங்குதன்னை
உத்தமனே வெள்ளிபத்தி லொன்றுதாக்கு
சைதன்ய மாகவேநீ தாக்கிப்பார்க்க
சதகோடி சோதிப்பிர காசந்தானே. 475

தானென்ற சோதிப்பிர காசந்தன்னை
தன்மனமே சாட்சியதாய்த் தானேநின்று
கோனென்ற குருவருளைக் காணுதற்கு
குறியொன்று சொல்லுகிறேன் குணமாய்க்கேளு
ஊனென்ற ஆதார மூலாதரம்
உள்ளெழுந்த ஆவியடா ஓங்காரந்தான்
மானென்ற ஓங்காரக் கம்பத்தேகி
மகத்தான புருவநடு உச்சம்பாரே. 476

பாரப்பா உச்சமென்ற உச்சிமீதில்
பரைஞான கேசரியின் சோதிதானும்
நேரப்பா நின்றநிலை தன்னிலேதான்
நிசமாகத் தோணுதடா நினைவாய்ப்பாரு
ஆரப்பா அறிவாலே பார்க்கப்போறார்
அறிவான தீபமடா ஆதிசோதி
மேரப்பா மேருகிரி சோதிதானும்
விண்ணடங்காக் கண்ணொளியின் தீபந்தானே. 477

தானான கண்ணொளியே பிர்மமாகும்
தனையறிந்த சோதியடா அறிவானந்தம்
தேனான ஆனந்த போதந்தானும்
திருவான பூரணமாய் நிறைந்துதப்பா
மானாகேள் பூரணமாய் நிறைந்துநின்ற
மதியமுர்த மாரறிவார் மனமேசாட்சி
ஊனான மனதறிவாய் நின்றகாட்சி
உத்தமனே செகசாட்சி யாகும்பாரே. 478

பாரடா செகசாட்சி கண்ணின்கண்ணு
பதிவான கண்ணதுதான் தெய்வந்தெய்வம்
சாரடா தெய்வமென்ற கண்ணிலேதான்
தன்மையுள்ள மனக்கண்ணைச் சாரப்பண்ணி
காரடா தேசியென்ற வாசியாலே
கருணைபெறக் கண்டமதில் அங்கென்றூணி
ஏரடா ஆதார மூலம்பார்த்து
இருக்கிறதே நிராதார சமாதியாங்காணே. 479

காணவே இன்னமொரு சூட்சங்கேளு
கருவான பிருதிவியில் பழச்சார்விட்டு
பூணவே கல்வமதில் வெண்ணைபோலே
பொருதிமிக அறைக்கையிலே ரசத்தைவாரு
தோணவே இருகருவு மொன்றாய்ப்போகும்
துலங்கிநின்ற அரிதாரம் லிங்கஞ்சேர்த்து
ஊணவே அரைத்துஒரு வட்டுப்பண்ணி
உத்தமனே அவிபுடமாய்ப் புடத்தைப்போடே. 480

போடப்பா அவிபுடமாய்ப் போட்டுமைந்தா
புத்தியுடன் தானெடுத்து வைத்துக்கொண்டு
நாடப்பா செம்புதனை உருக்கிமைந்தா
நன்மையுட னதுக்குநிகர் மருந்துசேர்த்து
ஆடப்பா குகையழுக ஊதிப்பார்த்தால்
அப்பனே செம்பதுவும் அந்தமாச்சு
கூடப்பா அந்தமதில் மதியைச்சேர்த்து
குன்றாத ரவியொளிபோல் மிச்சமாச்சே. 481

மிச்சமென்ற சோதியடா உச்சந்தன்னில்
விளங்கிநின்ற கருணையைநா னென்னசொல்வேன்
மச்சுவென்ற மாளிகையா மாருதாரம்
மணிமந்திர மேடையடா மவுனபீடம்
உச்சமென்ற பீடமதிற் கண்டகாட்சி
ஒருகோடி சூரியன்போல் ஒளியைக்கண்டேன்
அச்சமரக் கொண்டுநின்று கண்டகாட்சி
அரகரா பூரணத்தி னாண்மைகாணே. 482

## ரெட்னகிரி

காணவே இன்னமொரு கதையைக்கேளு
கமலமென்ற ரெட்னகிரி மலையில்மைந்தா
ஊணவே அதனிலொரு ராச்சதன்றான்
உண்மையுள்ள தேவாதி ரிடிகள்தன்னை
பேணவே தவசுகளுக் கிடறுபண்ணி
பெரிதான கொடுமைகளைச் செய்தானப்போ
தோணவே யானறிந்து மைந்தாகேளு
சுருக்கிலே ரெட்னகிரி வலம்வந்தேனே. 483

வந்துநின்று பிரமராச் சதனைப்பார்த்து
  வணக்கமுடன் பேசையிலே நீயாரென்றான்
அந்தமென்ற பரதேசி யென்று சொன்னேன்
  அறியாம லதட்டியெனைப் பேசும்போது
சொந்தமுட னாதரவாய் நின்றுகொண்டு
  சுருக்கிலே அவனுடைய பெலத்தைமைந்தா
பந்தமுடன் உயிரறவே பிலத்தைநன்றாய்
  பதிவாக வாசியினால் வாங்கினேனே. 484

வாங்கியந்த ருச்சதனை சம்மாரம்பண்ணி
  வணக்கமுடன் தேவாதி ரிஷிகள்கிட்ட
பாங்குபெறச் சென்றடுத்து நிற்கும்போது
  பத்தியுட னருகழைத்து அருட்பாலீய்ந்து
தீங்குசெய்த ராச்சதசங் காரஞ்செய்த
  திறமதனை யறுளுமென்று தேவரிஷிகேட்டார்
தாங்கிமிகக் கேட்டதினால் மைந்தாநானும்
  தன்மையுட னுபதேசஞ் சாற்றினேனே. 485

சாற்றியதோ ருபதேசம் நன்றாய்க்கேளு
  சங்கையுடன் ரும்றீம் சிம்ராவென்று
போற்றிமிகத் தான்செபித்து பூரணத்தைநோக்கி
  புத்தியுடன் தானிருக்கும் போதிலேதான்
தேற்றியதோர் சித்தர்சிவ யோகிதானும்
  திருநீறு தானெடுத்துக் கொடுக்கும்போது
பார்த்திபனே மந்திரத்தை நினைத்துவாங்க
  பதிலாக அவன்பிலமும் வருகும்பாரே. 486

பாரப்பா எதிராளி முகத்தைப்பார்த்து
  பாங்குடனே ரும்றீங் சிம்ராவென்று
நேரப்பா நின்றுமிக பூரித்தாக்கால்
  நிசமான தவமுடனே பிலன்களெல்லாம்
சாரப்பா தன்வசமாய்ச் சார்ந்துநிற்கும்
  தன்மையுள்ள மந்திரமிது வெளிவிடாதே
தேரப்பா வேதியர்தான் சொன்னமார்க்கம்
  சிவசிவாசூட்சம்வெகு சூட்சமாமே. 487

## எதிரிசங்காரம்

ஆமப்பா சூட்சம்வெகு சூட்சமான
அருமையுள்ள மந்திரத்தைத் தியானம்பண்ணி
ஓமப்பா நல்லோர்க ளிடமாய்மைந்தா
உத்தமனே விபூதியுட னெதுவானாலும்
தாமப்பா தனதாக வாங்கும்போது
சங்கையுட னவர்கள்செய்யுந் தவமெல்லாந்தான்
வாமப்பால் பூரணத்தின் மகிமையாலே
வந்துவிடும் மனதறிவால் மனதைப்பாரே. 488

மனதாக நல்லோர்க ளிடத்திலிந்த
மந்திரத்தைத் தானினைத்துப் பூரித்தாக்கால்
மனதாக அவர்கள்செய்யுந் தவப்பலன்றான்
மந்திரங்கள் தன்னுடனே வந்துசேரும்
மனதாக மூடர்வெகு வஞ்சர்கிட்ட
மணிமந்திர பூதியுட னெதுவானாலும்
மனதாக அவர்களிடம் வாங்கும்போது
மக்களே அவர்கள்குணம் வருகும்பாரே. 489

பாரப்பா ஆனதினால் மைந்தா மைந்தா
பாலகனே பகுத்தறிவா யிருக்கவேணும்
நேரப்பா மனுநீதி ஔவைசொன்னாள்
நிசமான மூதுரையை நன்றாய்ப்பாரு
சாரப்பா பார்க்கையிலே நல்லோர்தீயோர்
சங்கையுடன் தோனுமடா தனதாய்ப்பாரு
தேரப்பா பகுத்தறிவாய் நின்றுகொண்டு
சிவசிவா ஓரறிவில் திறமாய்நில்லே. 490

## எழுவகைத் தோற்றம்

திறமாக இன்னமொரு சூட்சங்கேளு
தீர்க்கமுள்ள புலத்தியனே மார்க்கவானே
உறமாக எழுவகை தோற்றந்தானும்
உத்தமனே நாலுவகை யோனியாச்சு
பறமான நாலுவகை யோனிதன்னில்
பக்குவமா யெண்பத்துநாலு நூறாயிரம்
திறமான முகபேத முண்டாச்சப்பா
நேர்மையுட னிதுவிபரஞ் சொல்லக்கேளு. 491

## நாலு வகை யோனி

கேளடா நாலுவகை யோனிமார்க்கம்
கிருபையுள்ள உற்பீசம் பையசந்தான்
கேளடா அண்டசந்தான் முட்டையாகும்
கெணிதமுள்ள சுவேதசம் வேர்வையாகும்
கேளடா சாராயுசந்தான் வித்துவாகும்
கிருபையுட னிதுநாலு மைந்தாமைந்தா
கேளடா நாலுவகை யோனியென்பார்
கேள்வியென்ன எழுவகையின் பிறப்புக்கேளே. 492

கேளப்பா தேவர்பதி நூறாயிரம்
கிருபையுள்ள மானிடர்கள் ஒன்பதுநூறாயிரம்
சூழப்பா மிருகமது பத்துநூறாயிரம்
சுருக்கமான பட்சியது பத்துநூறாயிரம்
வாளப்பா நீர்வாழுஞ் சாதிமுகபேதம்
வகையுடனே பத்துநூறா யிரமதாகும்
நாளப்பா ஊர்வன சாதிபதினொன்று
நன்மையுள்ள தாவரமு மிருபதுதான்பாரே. 493

## எழுவகைப் பிறப்பு

பாரப்பா எழுவகையுந் துகைதான்பார்க்க
பத்தெட்டு நாலுநூறா யிரமுமாச்சு
நேரப்பா எண்பத்து நாலுநூறாயிரம்
நிசமான உயிர்பயிர்கள் அவரவர்செய்தவத்தால்
சாரப்பா பூமிதனில் மானிடராய்வந்து
தான்பிறப்பா ரவரவர்கள்குண மறியப்போமோ
காரப்பா அவரவர்செய் நடத்தையாலே
காணலா மவர்குலத்தைக் கருதலாமே. 494

ஆமப்பா தேவர்களு மனிதராவார்
அரகரா மனிதர்களு மனிதராவர்
தாமப்பா மிருகமது மனிதராவார்
சங்கையில்லாப் பட்சிகளு மனிதராவார்
நாமப்பா நீர்வாழுஞ் சாதிமனுவாகும்
நாட்டமுட னூர்வனச் சாதிமனுவாகும்
ஓமப்பா தாவரமு மனிதராவார்
உத்தமனே இனமறிய உண்மைகேளே. 495

கேளப்பா தேவாதி தேவர்தானும்
கெணிதமுடன் மானிடராய்ப் பிறந்தாரானால்
கேளப்பா கலைக்கியானம் யோகநிஷ்டை
கிருபையுடன் சிவலிங்கஞ் சத்திபூசை
கேளப்பா அன்னமொடு சொர்னதானம்
கெணிதமுள்ள தடாகமடா பதிகள்செய்வார்
கேளப்பா சதாகாலங் குருவைப்போற்றி
கிருபையுடன் தானிருப்பார் தேவர்தானே. 496

தானென்ற தேவாதி குலத்தைச்சொன்னேன்
தன்மையுள்ள மானிடர்கள் குலத்தைக்கேளு
கோனென்ற குருவருளைத் தியானம்பண்ணி
குவலையத்தில் பொருமையுடன் தவமேசெய்வான்
நானென்ற அகமதனை விட்டுநீங்கி
நல்லோரைப் பெரியோரை நயந்துகொள்வான்
ஊனென்ற அறுசுவையை அன்பர்க்கீவான்
உத்தகுல மானிடரி னுண்மைகாணே. 497

காணவே மிருகாதி மனிதராகக்
காசினியிற் பிறந்தவன்தன் குணத்தைக்கேளு
ஊணவே சண்டையிட்டு முரண்டுசெய்து
உளன்றுமிகத் தனையறியா வார்த்தைசொல்லி
பேணவே தானமின்றித் தருமமின்றி
பேய்போலே திரிந்தலைவான் பின்முன்காணான்
பூணவே விலங்கினங்கள் மனிதரானால்
புண்ணியனே இக்குணத்தால் கண்டுகொள்ளே. 498

கொள்ளடா விலங்கினத்தின் குணத்தைச்சொன்னேன்
குறிப்புடனே பட்சிகளின் குணத்தைக்கேளு
விள்ளடா அன்னமென்று கேட்டோர்க்கீயான்
வெரும்பேச்சாய்த் தெருத்தோறு மலைவான்மட்டை
நல்லடா நல்வசனஞ் செவியிற்கேளான்
நாட்டமில்லான் வெட்கமில்லான் நன்மையில்லான்
உள்ளடா உள்ளளவும் பறந்தேநிற்பான்
உத்தமனே இக்குணத்தால் குலத்தைப்பாரே. 499

பாரடா நீர்வாழுஞ் சாதிநானும்
பக்குவமாய் மானிடராய்ப் பிறந்தாரானால்
ஊரடா தெருத்தோறுங் குலைத்துநிற்பான்
உத்தமனே சாடிசொல்லிச் சண்டைசெய்வான்
கூரடா கொலைகளவு சதியேசெய்வான்
குருவான பெரியோரை அழிம்பாய்ச்சொல்வான்
நேரடா நல்லுரவைப் பிறிவேசெய்வான்
நீர்வாழுங் குணத்திலுட நெறிதான்காணே. 500

காணவே ஊர்வனந்தான் மனிதராகக்
காசினிபிற் பிறந்திருந்தால் குணத்தைக்கேளு
ஊணவே பத்தியுடன் புத்திகெட்டு
உழன்று பாதவித்துமிக உறுதிகெட்டு
நாணவே உடம்பெடுத்து முணுமுணுத்து
நல்வசனம் நாட்டமுள்ள வசனங்கெட்டு
கோணவே நன்மைதின்மை ரெண்டுங்கெட்டு
தோன்றிடுமே யிக்குணத்தால் குணத்தைக்காணே. 501

குணமான ஊர்வனத்தின் குலத்தைச்சொன்னேன்
குறியில்லா தாவரத்தின் குலத்தைக்கேளு
இனமான இன்பங்கள் செவியிற்கேளான்
இன்பதுன்ப மிரண்டையுமே யறியமாட்டான்
கனமான சிவதவங்கள் செய்யமாட்டான்
காசினியில் வேடமிட்டுப் பொய்யேசொல்வான்
வனமான கானகமே குடியாய்நின்று
வாழுமரக் கர்குலத்தோர் வாழ்க்கைதானே. 502

தானென்ற எழுவகையின் தோற்றமான
சங்கையுடன் மனுநெறியின் முறமைசொன்னேன்
கோனென்ற குருவருளா லறிந்துகொண்டு
குணமான அவகுணத்தைத் தள்ளிநல்லோர்
வானென்ற கேசரியை வணங்கிமைந்தா
மகத்தான சிவயோக முத்தராகித்
தேனென்ற அமுர்தரசங் கொண்டுநல்ல
சிவஞான குருவாகித் திரிவார்காணே. 503

காணப்பா சிலதுபேர் மைந்தாகேளு
கயிலாச வர்க்கமென்று கருணையாவார்
தோனப்பா சிலபேர்கள் மூலவர்க்கத்
துரைதனிலே அழுந்திமிகச் சுகமேயாவார்
வீணப்பா சிலதுபேர் ரெண்டுங்கெட்டு
மேல்வரம்பு கீழ்வரம்பு அறியமாட்டார்
பூணப்பா உலகமதில் கண்டுகொண்டு
புத்தியுடன் தானிருந்து தன்னைப்பாரே. 504

தன்னைத்தான் தானறிந்து பார்க்கும்போது
தயங்காத ஒளிமூலம் வெளியாய்க்கண்டேன்
கண்ணைத்தா னறிந்தஒளி வெளியாய்க்கண்டேன்
கண்கண்ட வெளியில்எழு வகையுங்கண்டேன்
விண்ணைத்தா னறிந்துஅந்த விண்ணிலேதான்
விதவிதமா யொளிவான தெளிவைக்கண்டேன்
மண்ணைத்தா னறிந்துமண்ணும் விண்ணுமொன்றாய்
மகத்தான ஒளிவெளியாய் வெளியுமாச்சே. 505

ஆச்சப்பா இன்னமொரு தீச்சைகேளு
அருளான அஞ்சனா தேவிமூலம்
பேச்சப்பா பேசாத மவுனமூலம்
பிலமான புலத்தியனே சொல்லக்கேளு
மூச்சப்பா நிறைந்தவெளி மூலாதாரம்
முத்திதரும் ஆதார முடிவில்நின்று
காச்சப்பா ஓங்கிலியும் ரங்ரங்கென்று
கண்ணார நூறுருவிற் காணலாமே. 506

காணுகிற விதமென்ன மைந்தாகேளு
கற்பூர தீபஒளி சோதிபோலே
தோணுகிற போதுமனம் ஒன்றாய்நின்று
சோதியெனு மஞ்சனா தேவியென்று
பேணியவள் பாதமதைசிர மேல்கொண்டு
பிலமாக மானதாய்ப் பூசைபண்ணி
ஊணிமன மொன்றாக நீறுசாத்தி
உத்தமனே நித்தியமுந் தியானம்பண்ணே. 507

பண்ணப்பா நித்தியமுந் தியானம்பண்ண
  பதிவான இருதயமே வாசமாகி
முண்ணப்பா நிறைந்ததிரு சோதிபோலே
  முக்யமுடன் காணுமந்த சோதிதன்னால்
கண்ணப்பா கண்ணுமன மொன்றாய்நின்று
  காணுதடா அண்டபதங் கண்ணிநேரே
உண்ணிப்பா உன்னியந்த விண்ணுமண்ணும்
  ஊடுருவிப் பார்த்ததைநீ ஒண்டிக்கேளே. 508

ஒண்டுமிடந் தனையறிந்து அண்டத்தேகி
  ஊசாடு மஞ்சனா தேவிமூலம்
நின்றுமன தறிவாலே தியானம்பண்ணி
  நேமமுடன் விபூதியைநீ தரித்துக்கொண்டு
சென்றுஅந்த ஆகாச வெளியைப்பாரு
  திருவான அஞ்சனா தேவிதன்னால்
கண்டுகொள்வாய் பகல்காலம் நட்சத்திரங்கள்
  காணுமடா கண்ணறிந்து கண்ணால்பாரே. 509

கண்ணாரப் பூமியைநீ நன்றாய்ப்பார்த்து
  கருணைவிழிப் பார்வையினால் உண்ணிப்பாரு
பொன்னான பூமிநடுப் பாதளத்தில்
  பொருளான வெகுநிதிகள் பொருந்தக்காணும்
முன்னோர்கள் வைத்தநிதி கண்டாயானால்
  மோகமென்ற ஆசையைநீ வைக்கவேண்டாம்
விண்ணோர்கள் செய்தவத்தை நன்றாய்ப்பாரு
  மெஞ்ஞான அஞ்சனா தேவிதானே. 510

தானான அஞ்சனா தேவிதானும்
  தன்மையுடன் தானிருக்கும் பதியைக்கேளு
வானான புருவமடா அண்டத்தாதி
  மகத்தான பரவெளியில் வாசமாகி
கோனான ரவிமதிபோல் பிரகாசித்து
  கொண்டுநின்ற வடிவுதனை என்னசொல்வேன்
ஊனான உலகமெல்லாங் கண்ணாய்நின்று
  ஒளிவெளியாய் நின்றுதடா உண்மைபாரே. 511

உண்மையென்ற பூரணமே மவுனபீடம்
உத்தகலை ரவிமதிசென் றிருக்கும்வீடு
நன்மையென்ற வீடதிலே நயனநாட்டம்
நாட்டமுட நீயிருந்துநன்றாய்ப் பார்த்தால்
சின்மயமாய் நின்றஓங் காரதீபம்
திருவான கம்பமடா வாசியாச்சு
தன்மையுட னின்றிலங்கும் வாசியாலே
சாயுட்ச பதவியது தான்தானாச்சு. 512

ஆச்சப்பா சாயுட்ச பதவியான
அருள்பெருகுந் தெரிசனத்தைச் சொல்லக்கேளு
பேச்சப்பா பேசாத பஞ்சபூதம்
பெரிதான பூதமடா வாதந்தந்தங்
காச்சப்பா கருவறிந்து அந்தம்பார்க்க
கருவிபரஞ் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
மூச்சப்பா நிறைந்தஅயக் காந்தத்தோடே
முத்தியுள்ள ரவிமதியுஞ் சுழினைகூட்டே. 513

கூட்டிநன்றாய் குகைதனிலே உருக்கிப்பார்க்க
குருவான களங்கமடா அயக்களங்கம்
நாட்டமுள்ள களங்கமதை வைத்துக்கொண்டு
நாலாறு வெள்ளியிலே ஒன்றுபோட்டு
வாட்டிமிக உருக்கிநன்றா யெடுத்துப்பாரு
மகத்தான சோதிபரஞ் சோதியாகும்
தேட்டமுடன் சோதிதனைக் கண்டாயானால்
சிவசிவா சிவயோகத் திறந்தான்பாரே. 514

திறமாக இன்னமொரு செய்திகேளு
தீர்க்கமுள்ள புலத்தியனே செயமதாக
திறமான அயமதனைத் தகடாய்த்தட்டி
செயமாகக் குகைதனிலே சேர்த்துமைந்தா
உறமாகத் தானுருக்க வகையைக்கேளு
உத்தமனே அப்புடனே தேய்வுசேர்த்து
உறமான வாய்வுடனே ஆகாசந்தானே
உண்மையுட னைந்தையுமே ஒன்றாய்க்கூட்டே. 515

கூட்டிநன்றாய் காரமிட்டு உருக்கிப்பார்க்க
குருவான அயமதுவு முருகிமைந்தா
வாட்டமில்லாச் சோதியைப்போல் பிரகாசிக்கும்
மைந்தனே அதுக்குநிகர் ரசமுங்கெந்தி
தேட்டமுடன் கூட்டிநன்றாய்க் கல்வத்திட்டு
திருவான முப்பூவும் பணவிடைதான்போட்டு
நாட்டமுள்ள பொற்றலையின் சாற்றாலாட்டி
நன்மையுடன் ரவிமுகத்திற் காயப்போடே. 516

போடப்பா ரவிதனிலே நன்றாய்க்காய்ந்தால்
புத்தியுடன் தானெடுத்து பத்துக்கொன்று
நாடப்பா செயவீரம் ஒன்றாய்ச்சேர்த்து
நன்மையுடன் தான்பொடித்துக் குப்பிக்கேத்தி
மூடப்பா குப்பிதனக் கங்கிபூட்டி
மூர்க்கமுள்ள தாளியிலே சாம்பலிட்டு
வீடப்பா பிலப்பதற்குக் குப்பிவைத்து
மேலுமந்த மூக்களவு சாம்பல்சாத்தே. 517

சாத்திமிகப் பாண்டமதை அடுப்பிலேத்தி
சற்குருவைத் தான்தொழுது அனலைமூட்டி
பார்த்திபனே சருகுகம்பு விறகுதன்னால்
பக்குவமாய்த் தானெரிப்பா யாவிகாண
போத்திமிக ஆவிதனைக் கண்டபோது
புத்தியுடன் பூரணமே யென்றுபோற்றி
ஆத்துமத்துக் கரசான சோதியென்று
அன்புடனே தானிறக்கிக் குளிரவையே. 518

வையடா பாண்டமதைக் குளிரவைத்து
மார்க்கமுள்ள குப்பிதனை யெடுத்துப்பாரு
மெய்யடா சொல்லுகிறேன் செந்தூரந்தான்
வேதாந்த அருணநிற மிதுக்கொவ்வாது
அய்யனே புலத்தியனே பதனம்பண்ணி
அந்திசந்தி பணவிடைதான் கொண்டாயானால்
மய்யடா மய்யமென்ற சுழினைதன்னில்
மக்களே செகசோதி காணலாமே. 519

சோதியென்ற செந்தூரங் கொள்ளும்போது
சுகமாகப் பாலுடனே அன்னங்கொண்டால்
ஆதியென்ற தேகமதுந் துஞ்சாதய்யா
அரகரா வாசியது நிலையில்நிற்கும்
ஓதியதோர் வாசியது நிலையில்நின்றால்
ஒருதீங்கு மில்லையடா உண்மையாகும்
வாதியென்ற ரசவாத முறுதியாகும்
மகத்தான செந்தூர வரிசைபாரே. 520

வரிசையென்ன சொல்லுகிறேன் மைந்தாகேளு
மகத்தான செந்தூர வளமைதன்னை
உருசையுடன் வெள்ளிசெம்பு தகடுதட்டி
உண்மையுடன் செந்தூரத் திலதமிட்டு
கரிசனமா யோட்டில்வைத்துப் புடமேசெய்தால்
கருணையுள்ள செந்தூரத் தாலேமைந்தா
தெரிசனமாய் நின்றதொரு சோதிபோலே
சிவசிவா தங்கமய மாகுந்தானே. 521

பாரப்பா தங்கமய சோதித்தாயை
பத்திகொண்டு அவள்மகிமை பெற்றோர்க்கெல்லாம்
பேரப்பா பெற்றசிவ யோகியாகும்
பேரண்டஞ் சித்தண்டம் ரெண்டுங்காண்பான்
நேரப்பா நின்றநிலை தனையறிந்து
நேர்மையுட னஷ்டசித்து நிலையைக்காண்பான்
சாரப்பா யிகரபரமுந் தானேதானாய்
சச்சுதா னந்தமயந் தானாவானே. 522

தானான தங்கரதி சோதித்தாயை
தரணிதனிற் கோடியிலே ஒருவனப்பா
கோனான சற்குருவின் கடாட்சம்பெற்று
கூர்மையுடன் பஞ்சகர்த்தா நிலையுங்கண்டு
வானான நிலையறிந்து பஞ்சபூத
வகையறிந்து துகையறிந்து வணக்கம்பெற்று
நானான அகம்போக்கித் தானாய்நின்று
நாதாந்த பூரணத்தில் நாடுவானே. 523

நாடுவான் நந்திபதங் கெதியென்றெண்ணி
நாதாந்த பூரணத்தை நலமாய்க்கண்டு
பாடுவான் சாஸ்திரங்க ளனேகமார்க்கம்
பருதிமதி நிலையறிந்து பணிந்துகொண்டு
கூடுவான் நாதாந்தக் குறிகண்ணாட்டி
குருவான ரசவாத முறமைபெற்று
தேடுவான் சின்மயத்தின் சோதிபாதம்
சிந்தைமன தொன்றாகத் தெளிவான்பாரே. 524

பாரப்பா இன்னமொரு பாகஞ்சொல்வேன்
பதிவான பிருதிவியைப் பழச்சாற்றாலே
நேரப்பா மய்யதுபோல் நன்றாயாட்டி
நினைவாக நாகரசம் லிங்கந்தாரம்
சேரப்பா பிருதிவியில் கூட்டிக்கொண்டு
செம்மையுடன் தானரைத்து உருட்டிமைந்தா
காரப்பா அவிபுடத்திற் பாகம்பண்ணி
கருணையுட னின்னமொரு கருவைக்கேளே. 525

கருவான வகைவிபர மென்னசொல்வேன்
களிம்பான செம்புதனைக் குகையிலிட்டு
கருவான கார்மிட்டு உருகும்போது
கருணையுட னவிபுடத்தின் மருந்தையூட்டு
கருவாக வாங்கியது கட்டும்பாரு
கட்டியது திட்டமுடன் கருத்துநிற்கும்
கருவாகக் கட்டிநின்ற செம்பைமைந்தா
கருத்துறவே யிடைக்கிடைதா னயத்தைச்சேரே. 526

சேர்த்துநன்றாய் காரமிட்டு உருகும்போது
சிவசிவா பருதிமதி சுழினைகூட்டி
பார்த்துமிகப் பத்தியதா யுருக்கிப்பார்த்தால்
பாலகனே பரஞ்சோதி விந்துவாச்சு
கார்த்துநன்றாய் சோதியுட விந்துவாங்கி
கருணையுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
ஆத்துமத்துக் குயிரான வித்துப்போட
அப்பனே கலைபொருந்திச் சோதியாச்சே. 527

ஆச்சப்பா வெள்ளியது சோதியாச்சு
அண்டகே சரிமாதி னருள்தன்னாலே
மூச்சப்பா நிலையான முக்கோணத்தில்
முளைத்தெழுந்த வாசியடா ஓங்காரந்தான்
பேச்சப்பா பேசாத ஓங்காரந்தான்
பிலமான அகாரமடா மகாரபீடம்
நீச்சப்பா நிலையாத மகாரபீடம்
நிசமான புருவமத்தி உச்சம்பாரே. 528

உச்சமென்ற ஆகாசந் தன்னில்மைந்தா
உண்மையென்ற மவுனரசச் சுனைதானுண்டு
பச்சமுட னச்சுனையைக் கண்டுமைந்தா
பாலகனே பசியார அமுர்தங்கொண்டு
அச்சமர அமுர்தரசங் கொள்ளும்போது
ஆனந்த போதமடா அறிவானந்தம்
நிச்சயமா யறிவான போதந்தன்னை
நீமகனே மறவாதே நிலையைப்பாரே. 529

நிலையான அடிவார மூலாதாரம்
நின்றநிலை தனையறிந்து மேலாதாரம்
மலையான மேருவடா அண்டத்துச்சி
மகத்தான கொடுமுடியில் வாசிமூலம்
கலையான பூரணமாய் நிறைந்துதய்யா
கண்ணுமனக் கண்ணதனால் நின்றுபாரு
சிலையான தேகமடா வெளியாய்க்காணும்
சித்திபெறத் தெளிவறிந்து ஒளியைப்பாரே. 530

பாரப்பா பரமவெளி தன்னிலேதான்
பருதிமதி ஒளிவுதனைப் பார்க்கும்போது
நேரப்பா நிலையான நயனஞ்சூட்சம்
நிசமான சூட்சமடா கமலக்கண்ணு
ஆரப்பா அறிவார்க ளந்தக்கண்ணை
ஆதியிலே வாசிகொண்ட அருமைக்கண்ணை
சாரப்பா தன்னறிவா லந்தக்கண்ணை
சதானந்த பூரணத்தால் கண்டுபாரே. 531

கண்டுநிதம் பார்க்கையிலே மைந்தாமைந்தா
கமலமென்ற கண்ணதிலே மனக்கண்பாய்ந்து
கொண்டுநின்ற வடிவுதனை யென்னசொல்வேன்
கூர்மையுடன் பார்க்கையிலே யெல்லாந்தானாய்
அண்டமொடு புவனமெல்லாந் தானேதானாய்
ஆதிசிவ சோதிவொளி தானேதானாய்
நின்றநிலை தனையறிந்து நின்றசோதி
நினைவுகொண்டு பார்க்கையிலே வெளிதானாமே.532

## அயக்காந்த சத்து செந்தூரம்

வெளியாக இன்னமொரு கருவைச்சொல்வேன்
வேதாந்த புலத்தியனே நன்றாய்க்கேளு
வெளியான நாகமடா விஷ்ணுவாகும்
விசையான ரசமதுதான் ருத்திரமூர்த்தி
வெளியான தங்கமடா பிரமரூபம்
மேன்மைபெற மூன்றுமொன்றாய்ச் சேர்த்துக்கொண்டு
வெளியான அயக்காந்தம் ஒன்றாய்க்கூட்டி.
மேன்மைபெற உருகையிலே மூன்றுஞ்சேரே. 533

சேர்க்கையிலே அயக்காந்தச் சோதிதன்னில்
செம்மையுடன் பாய்ந்துமிகத் தெளியலாச்சு
ஏர்க்கையுட னத்தெளிவை நன்றாய்ப்பார்த்து
யேமரச பூரணத்தை யிடைதான்சேர்க்க
மார்க்கமுள்ள தங்காதி களங்கமாச்சு
மகத்தான களங்கதனைக் கல்வத்திட்டு
தீர்க்கமுள்ள பொற்றலையின் சாற்றாலாட்டி
செயமாக ரவிதனிலே காயப்போடே. 534

போட்டதொரு மருந்ததனைப் பொடித்துநல்ல
பூரணமாஞ் செயவீரம் நாலுக்கொன்று
நாட்டமுடன் தான்கூட்டிப் பொடித்துமைந்தா
நன்மையுடன் காசியென்ற குப்பிக்கேத்தி
தேட்டமுடன் மண்சீலை திறமாய்ச்செய்து
தீர்க்கமுள்ள பாண்டமதில் சாம்பலிட்டு
தாட்டிகமாய்க் குப்பிநடு மூக்குமட்டும்
சாம்பலிட்டு அடுப்பேற்றித் தாயைப்போற்றே. 535

போத்திமிக அடுப்பேற்றிப் பதத்தைப்பாரு
புண்ணியனே ஆவியது மேலேகண்டால்
பாத்திபனே மயேஸ்பரியைத் தியானம்பண்ணி
பதிவாக ஆயிரத்தெண் ணுருவேசெய்து
வாத்திமிகப் பாண்டமதை யிறக்கிமைந்தா
மனங்குளிரக் குளிரவைத்து யெடுத்துப்பார்த்தால்
பூத்தமலர் வாசனையா முருக்கம்பூப்போல்
புண்ணியனே செந்தூரக் கட்டியாமே. 536

கட்டிநின்ற செந்தூரக் கட்டிவாங்கி
கருணையுடன் பணவிடைதான் பாலிற்கொண்டால்
கெட்டிகெட்டி யென்னசொல்வேன் பாண்டத்திட்டம்
கிருபையுள்ள வாசியது கெட்டியாச்சு
சட்டமுடன் வாசியது கெட்டியானால்
சதாசிவனு மனோன்மணியுந் தானேதானாய்
இட்டமுட னிருதயமே சோதியாகி
ஏகாந்த பூரணத்தி லிருக்கும்பாரே. 537

பாரப்பா பூரணத்தி லிருந்துகொண்டு
பத்தியுடன் செந்தூரந் தன்னைவாங்கி
காரடா நவலோகந் தன்னிற்பூசி
கருணையுடன் புடம்போட்டு யெடுத்துப்பாரு
நேரடா நீயிருந்து பார்க்கும்போது
நிசமான நவலோகஞ் செந்தீப்பட்டு
வீரடா கொண்டதுவும் சோதியாச்சு
விளங்கிநின்ற சோதிமயத் தங்கமாச்சே. 538

தங்கத்தாய் பரப்பிரம சோதிதானாய்
சமரசமாய்த் தரணிதனி லார்தான்காண்பார்
அங்கத்தா யாதியிலே மங்கைத்தாயாய்
அரிதரிது அமுர்தரசம் அப்போயீய்ந்தால்
மங்கைத்தா யமுர்தரசங் கொண்டபோதே
மகத்தான சோதிசிவ சூட்சங்கண்டேன்
கெங்கைத்தா யங்கமுடன் மங்கைத்தாயாய்
கேசரத்திற் கண்டுகெதி கொண்டேன்பாரே. 539

பாரப்பா கேசரத்தில் மனக்கண்வைத்து
பத்தியுடன் பூரணத்தில் நிற்கும்போதில்
நேரப்பா அண்டவெளி யென்னசொல்வேன்
நிசமான பரவெளியி னேர்மைதன்னை
ஆரடா அறிவார்க ளாருமில்லை
அண்டவெளி தன்னிலொரு அதிசயந்தான்
காரடா கண்ணதனால் பார்க்கும்போது
கமலரச முரைந்திருந்து தயிருமாச்சே. 540

தயிரான தயிரறிந்து உயிரைக்கார்க்க
தயிரியமா யத்தயிரைக் கொண்டேனப்போ
உயிரான உயிரதுதான் தயிரியமதாகி
உத்தகலைக் கியானமென்ற வாசியேறி
பயிரான உயிர்பயிரை யெல்லாந்தன்னுள்
பார்க்கையிலே சோதிசிவ மயமுமாச்சு
தயிரான பூரணத்தின் மகிமையாலே
சகலமுமே வெளிமயமாய்த் தான்கண்டேனே. 541

கண்டதொரு ஆகாச வெளிதானென்றும்
கடந்தகட மாகாச வெளிதானென்றும்
விண்டபொரு ளிருவகைய்ாய்ச் சொல்லும்வார்த்தை
வேதாந்த மயக்கமென அறியார்மூடர்
கொண்டதொரு ஆகாச வெளியினுள்ளே
குறிப்பான வஸ்துவெல்லாம் வெளிதானாச்சு
அண்டர்பிரா னருளதுவும் வெளிதானாச்சு
ஆனஉயிர் பயிர்களெல்லாம் வெளிதான்பாரே. 542

பாரான ஆகாச மதுதானாச்சு
பதிவான வாய்வுமடா அதுதானாச்சு
நேரான நெருப்பதுவு மதுதானாச்சு
நிலையான சிவமதுவு மதுதானாச்சு
வாரான பிருதிவியு மதுதானாச்சு
மகத்தான பரவெளியு மதுதானாச்சு
பேரான பராபரமு மதுதானாச்சு
பெருகிநின்ற சத்திசிவ மதுதானாச்சே. 543

ஆச்சென்று சொன்னதுவு மதுதானாச்சு
　　ஆனந்த மானதுவு மதுதானாச்சு
பேச்சென்ற சத்தமெல்லா மதுதானாச்சு
　　பேசாத மவுனமது மதுதானாச்சு
மூச்சென்ற வாசியது மதுதானாச்சு
　　மோகமென்ற மாய்கையெல்லா மதுதானாச்சு
நீச்சென்ற சாகரமு மதுதானாச்சு
　　நின்றுவிளை யாடும்வெளி வெளிதானாச்சே. 544

ஆச்சப்பா சிவஞானஞ் சுத்தஞானம்
　　அந்தரங்க மானதொரு ஞானந்தன்னை
பேச்சப்பா பேசுதற்கு மூச்சங்கில்லை
　　பிரணவத்தின் கிருபையினால் பேசுவேன்கேள்
மூச்சப்பா நிறைந்தவெளி மண்விண்ணப்பா
　　முத்தியுள்ள செடமாச்சு செடத்தினுள்ளே
வீச்சப்பா நிறைந்தஉயிர் பயிர்களெல்லாம்
　　விளங்கிநின்ற ஆகாச மென்றும்பாரே. 545

பேரான விண்ணுமண்ணும் செடமதாச்சு
　　பெருகிநின்ற உயிர்பயிரா காசமாச்சு
நேரான செடமதிலா காசந்தானும்
　　நிறைந்தபரி பூரணமாய் விளங்குதய்யா
சீரான செடமதுவும் நசிப்பதில்லை
　　சிறந்தபயி ருயிரதுவும் நசிப்பதில்லை
கூரான செடமதிலா காசந்தானும்
　　கூர்மையுடன் தானறிய வெளிதான்காணே. 546

வெளியான சோதிதனை விழிதான்கண்டு
　　விளங்கும்விழி வெளியோடே ஒளியாய்ப்போச்சு
வெளியான சாகரத்தில் மைந்தாகேளு
　　விளங்கும்ஒளி யானதொரு சுழிதானென்று
வெளியான சுழிதனிலே உயிர்பயிர்கள்
　　விளைந்துஅந்தச் சுழிதனிலே அமர்ந்துபோச்சு
வெளியான வெளியாச்சு சுழியின்சூட்சம்
　　வெட்டவெளி சுத்தமதின் திட்டந்தானே. 547

திட்டமுடன் பிரபஞ்ச நிலையைப்பார்த்தால்
  சிவசிவா செகசால மென்னசொல்வேன்
திட்டமுள்ள சாலமெல்லா மனக்கண்ணாலே
  தீர்க்கமுடன் யானறிந்து பார்க்கும்போது
திட்டமுள்ள ரவிமதியின் ஒளிதன்னாலே
  திருநடன மானசெக சாலமப்பா
திட்டமுள்ள சாலமெல்லாம் விழிமயக்கம்
  தெளிந்தவிழி மயக்கமதை அறிவால்பாரே. 548

அறிவாலே தெளிவதுதா நாதவிந்து
  ஆதியந்த பூரணமு நாதவிந்து
குறியான நால்பதமு நாதவிந்து
  குவிந்துஅண்ட சராசரமு நாதவிந்த
நெறியான பஞ்சகர்த்தா நாதவிந்து
  நிலையான ஆதாரம் நாதவிந்து
சரியான சமரசமு நாதவிந்து
  சதானந்த போதமது நாதவிந்தே. 549

விந்தான நாதவிந்து நிலையைப்பார்த்தால்
  விண்ணுக்கு மண்ணுக்கு நடுவிலேதான்
சொந்தமென நின்றுவிளை யாடுதப்பா
  சோதியென்ற பருதிமதி சூக்ஷந்தானும்
பந்தமென்ற சூட்சமதை யென்னசொல்வேன்
  பரவெளியில் ஒளியாகிப் பாய்ந்துபாய்ந்து
அந்தமென்ற வெளியோட வெளியாய்ச்சேர்ந்து
  அந்தவெளி பரவெளியா யமர்ந்தவாறே. 550

அமர்ந்தநிலை யறியாத மூடருண்டு
  ஆதாரந் தெரியாத அசடருண்டு
சுமந்தபிணம் போல்திரிவார் வெகுபேருண்டு
  சோதிமய மறியாத சுணங்கருண்டு
குமந்தசெடம் நோய்மிகுந்து வேடம்பூண்டு
  குறிநெறியை யறியாமல் குணமில்லாமல்
நமனான கூத்துவன்றன் பாசத்துள்ளே
  நடுங்கிமனம் குளன்றவரை நயந்துதள்ளே. 551

தள்ளுவது யென்னவென்றால் மைந்தாகேளு
தருகாமல் பொய்யுரைக்குஞ் சவங்கள்தன்னை
உள்ளுணர்ந்து பாராத லுத்தர்தன்னை
உத்தமரைத் தூசிக்கும் உருப்பேய்தன்னை
கள்ளுடனே அபினரக்குக் கொண்டுமோக
காமவலைக் குள்ளழுந்தும் கழுதைதன்னை
அல்லடா இவர்களைநீ கண்டாயானால்
அவர்கள்முகம் பாராதே அருளைப்பாரே. 552

அருளான புருவமய்ய மாதிவீடு
ஆதியந்த மானதொரு உச்சிமூலம்
பொருளான அருள்விளங்கும் போதஞானம்
போதமய மானசிவ ஞானதீபம்
இருளான மாய்கையெல்லா மகற்றுமந்த
ஏகநிரா மயமான சோதிதன்னை
மருளாமல் மனதுகந்து மனக்கண்கொண்டு
மாசற்ற பூரணத்தை வணங்கிக்காணே. 553

வணங்குவது பெரியோரை வணங்கவேணும்
மகத்தான நூல்முறைகள் பார்க்கவேணும்
குணங்களொரு மனதாகக் குவியவேணும்
குருவான சத்திசிவ பூசைவேணும்
இணங்குவது வாசியிலே யிணங்கவேணும்
ஏகாந்த மானசிவ யோகம்வேணும்
மனங்குவிந்து மவுனரசங் கொள்ளவேணும்
மகத்தான கேசரியில் வாசிபூட்டே. 554

### மலையில் குகையுண்டாக்க

வாசிநிலை கண்டுசிவ யோகஞ்செய்ய
மகத்தான புலத்தியமா ரிஷியேகேளு
பேசவொண்ணா அந்தரங்க உண்மைதன்னை
பெரிதான எக்கியமா முனிதான்சொன்னார்
நேசமுடன் மலைகளிலே குகையுண்டாக்க
நீமகனே மனதுகந்த மலையிற்சென்று
பாசமுடன னால்புறமுஞ் சுத்திப்பார்த்து
பதிவான யிடமதிலே குகைதான்செய்யே. 555

குகையறிந்து செய்வதற்கு வகையைக்கேளு
குருவான பூனிரு கல்லுப்போடு
தகையாத கரியுப்பு வெடியுப்யுத்தான்
சார்வான நவாச்சார மன்னபேதி
பகையான மலைபேதி மாங்கிசபேதி
பத்தியுள்ள கல்நாதம் கல்மதந்தான்
புகையாத அரைபொடியுங் கல்காந்தங்சிட்டம்
புண்ணியனே சரக்குவகை பதிமூன்றாச்சே. 556

ஆச்சப்பா சரக்குவகை பதிமூன்றுந்தான்
அப்பனே சமபாகம் நிறுத்துக்கொண்டு
பாச்சப்பா கல்வமதில் பொடித்துநன்றாய்
பருசான யிரும்பினுட தாளிசேர்த்து
நீச்சப்பா யானைபரி கத்தம்விட்டு
நிசமான புலிகரடி ரெத்தம்வார்த்து
வாச்சப்பா கொள்ளவித்த தண்ணீர்விட்டு
மார்க்கமுடன் நவ்வலுட கம்பால்கிண்டே. 557

கிண்டிநன்றாய் ரவியில்வைத்து தெளிவைநன்றாய்
கிருபையுட னத்தெளிவை மலைமேலூத்த
சுண்டுநன்றாய்ச் சுவறியது உவடுபோலே
சுத்தமுடன் பொங்கியது உப்பாம்பாரு
கண்டிதமாய் நீருண்டு கல்லுப்புப்போல்
கசிந்துமிக உருகுமடா அந்தவேளை
தொண்டதுபோல் கூந்தாளஞ் செய்துகொண்டு
திரமாக வெட்டியெடு குகைபோல்தானே. 558

தானான உவர்நீரைப் பின்னும்விட்டு
தன்மனதுக் கேற்கவே குகைதான்செய்து
மானாகேள் குகையதுவும் நன்றாய்ச்செய்து
மகத்தான உவர்நீங்க வகையைக்கேளு
தேனான மதுஉடனே தண்ணீர்பாலும்
சிறுகரந்தைச் சாத்துடனே சேர்ந்துகொண்டு
கோனான குகையைநன்றாய்க் கழுவிப்போட்டால்
கொடுமையுள்ள உவர்நீங்கித் திறக்கும்பாரே. 559

பாரப்பா யிவ்விதமாய்க் குகைதான்செய்து
பத்தியுட னதிலிருந்து தவமேசெய்வாய்
நேரப்பா தனித்திருந்து தவமேசெய்தால்
நினைவதிலே பாய்ந்துரவி யொளிதான்காணும்
சாரப்பா தனித்திருந்து ஒளிதான்பார்க்க
தலைமலைகள் கெவிகள்வனம் தனில்சென்றார்கள்
காரப்பா கண்ணொளியைக் கண்ணால்பார்க்க
கருத்துறவே தனித்திருந்து கண்ணைப்பாரே. 560

கண்ணைப்பார்த் தந்தஒளி தன்னைப்பார்க்க
கருவாக இன்னமொரு கருவைக்கேளு
நன்னப்பா அரபொடியுங் காந்தங்சிட்டம்
நவாச்சாரம் பூனீரு அன்னபேதி
ஊணப்பா பழச்சாற்றால் நன்றாயாட்டி
உத்தமனே பழச்சாற்றால் கலக்கிவைத்து
விண்ணப்பா உயர்ந்ததொரு திட்டுப்பார்த்து
மேன்மைபெறக் குளியடித்து ஊத்திடாயே. 561

ஊத்தியொரு மண்டலமே சென்றுபாரு
உறுதியுள்ள கல்மடிந்து உப்பாய்நிற்கும்
வாத்திநின்றாய் மடிந்தகல்லு உப்பைவாங்கி
மார்க்கமுடன் பழச்சாற்றா லரைத்துருட்டி
போத்திநன்றாய்க் காயவைத்து புடத்தைப்போட்டால்
புண்ணியனே உப்பதுவுஞ் சுண்ணமாகும்
காத்துநன்றாச் சுண்ணமதை வைத்துக்கொண்டு
கனகமென்ற வாதமுறைக் கருவைப்பாரே. 562

## ஆதிக் களங்கு

கருவான வாதமுறை கருவேதென்றால்
கசிந்துருகு மமுர்தரச வாதமப்பா
உருவான அமுர்தரச வாதந்தானும்
உத்தகெந்தப் பிருதிவியு மப்புமாச்சு
திருவான பிருதிவியு மப்புங்கூட்டி
தீர்க்கமுட னுருகையிலே நாகஞ்சேரு
குருவான நாகமது சேர்ந்தபோது
கூசாமற் சோதியென்ற தங்கஞ்சேரே. 563

சேர்த்துமிகத் தாளுருக்கிப் பார்க்கும்போது
சிவசிவா தங்காதி களங்குமாச்சு
பாத்திபனே தங்காதிக் களங்கைமைந்தா
பத்தியுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
போத்திமிகத் தாளுருக்கி யெடுத்துப்பாரு
பூரணமாய்ச் சோதிமயத் தங்கமாமே
மாத்ததிக மானதங்கச் சோதித்தாயை
மார்க்கமுடன் கண்டுசிவ யோகஞ்செய்யே. 564

செய்யடா சிவயோகத் தவமேசெய்தால்
சிந்தைதனில் நினைத்ததெல்லாம் தீர்க்கமாகும்
மெய்யடா மய்யமதில் தீபங்காணும்
வேதாந்தக் கேசரியாள் வசமாய்நிற்பாள்
கையடா கூப்பியவள் பாதம்போற்றி
கருணைபெற மானதமாய்ப் பூசைசெய்து
அய்யனே அவள்பாதமே கெதியென்றெண்ணி
அஷ்டசித்து சூட்சமெல்லா மறிவிப்பாளே. 565

அறிவான பூரணமே ஆதிசோதி
அகண்டபரா பரமான அருள்ஞானத்தீ
குறியான தீயறிந்து நெறியில்நின்றால்
கூடுறுதி யாகுமடா குருவைக்காரு
நெறியறிந்து குருவருளைக் கார்க்கவென்றால்
நேசமுடன் அஞ்சதிலே மூன்றைப்பாரு
சரியாக மூன்றதிலே ஒன்றைப்பார்க்க
தன்மயமு விண்மயமு மொன்றாய்ப்போச்சே. 566

ஒன்றான வஸ்துவடா ஆண்பெண்ணாச்சி
உத்தமனே எழுவகையின் தோற்றமாகி
பண்டான பலதொழிலுக் கேதுவாய்நின்று
பாலகனே ஒன்றான வஸ்துக்குள்ளே
நன்றாக அயிக்கமாய் சொர்க்கஞ்சென்று
நாதாந்த பூரணமாம் விழிதன்னோடே
நின்றாடிக் கொண்டதிரு நடனம்பார்க்க
நீயேது நானேது அருபந்தானே. 567

தானான ரூபமடா அனுக்கிரகம்
    தனையறிந்த நவக்கிரக மொன்பதுக்கும்
கோனான அனுக்கிரக மரூபவீட்டில்
    குவித்தெழுந்த சிவஞான போததீபம்
தேனான அமுர்தரசத் தேனையூட்டி
    சிவாயகுரு அஞ்செழுத்தின் திறமுஞ்சொல்லி
ஊனான உயிர்காட்டி வெளியுங்காட்டி
    உத்தவெளி வெளியொளியா யொடுக்கமாச்சே. 568

ஆச்சென்று ஒடுங்குநிலை யறியவேணும்
    அறிந்துமன துரிமையினா லேறவேணும்
மூச்சென்ற வாசியினா லேறியந்த
    முத்திதருந் தீபமதைக் காணவேணும்
பேச்சென்ற சத்திசிவ சூட்சங்கொண்டு
    பெலமான சூட்சமதா லிறங்கவேணும்
ஆச்சென்று யேறுதுறை யிறங்குதுறைகண்டால்
    ஆதிசிவ சோதியென அறியலாமே. 569

அறிவான அறிவெல்லாம் வெளியின்மாய்கை
    ஆதியந்தமானதெல்லாம் வெளியின்மாய்கை
நெறியான பொருளெல்லாம் வெளியின்மாய்கை
    நிலையான சிவயோகம் வெளியின்மாய்கை
விரிவான வாசியெல்லாம் வெளியின்மாய்கை
    வேதாந்த சித்தாந்தம் வெளியின்மாய்கை
சரியான பஞ்சகர்த்தா வெளியின்மாய்கை
    சதுர்போத தீபவொளி மாய்கைதானே. 570

தானான உலகமது பேயானகூத்து
    சங்கையுள்ள கூத்துக்குள் கூத்தாய்நின்று
தானான திருநடன மாகுமைந்தா
    சச்சுதா னந்தமென்ற அறிவில்நின்று
தானான தன்மையமே விண்மயமாஞ்சோதி
    சகலநிரா மயமான சோதிதன்னை
தானாகத் தானவனாய்த் தான்தானாக
    சதாபோத பூரணத்தில் சார்ந்துநில்லே. 571

நில்லப்பா நிலையறிந்து சார்ந்துகொண்டு
நீமகனே யின்னமொரு கருமானங்கேள்
சொல்லப்பா பழுதல்ல பழுக்கும்வித்தை
சுத்தமுள்ள அயக்காந்தம் நாதவிந்து
கொல்லப்பா நாதவிந்து ஒன்றோடொன்று
கூட்டியல்லோ மனமுருக உருகுமைந்தா
கல்லப்பா உருகுநிலை யறிந்துகொண்டு
கணக்காக ரவிமதியுங் கூடச்சேரே. 572

சேர்த்துநின்று உருகையிலே யிடைதானாகம்
செம்மையுடன் சீரியங்கே கொத்தும்போது
நேர்ந்துநின்று கலைநாலில் விசந்தான்சென்று
நிர்மலம்போல் சத்திசிவஞ் சுத்தமாச்சு
கூர்ந்துநின்று சுத்தமதைச் சித்தத்தாலே
குருவான கயிலாச வரையில்தாக்க
சார்ந்துஅத்த சுத்தசித்தத் தாலேமைந்தா
தங்கமய மானமகா மேருபாரே. 573

பாரான பிருதிவியா மேரைப்பார்க்க
பாய்ந்துநின்ற நாகமதால் கும்பமாச்சி
மேரான கும்பமதில் பிறிந்துஅந்த
மெஞ்ஞான பூரணத்தைக் கண்டுபோற்றி
நேரான நிலையறிந்து வாசிகொண்டு
நிலைதவறாச் சோதியிலே அடுக்கும்போதில்
கூறாத கண்காட்சி யென்னசொல்வேன்
கூர்ந்துநின்று பார்த்ததெல்லாம் வெளித்தான்பாரே.574

வெளியான சோதிநவ ரெட்னதீபம்
மெஞ்ஞானப் புருவநடு உச்சிமீதில்
வெளியாகி ஒளியாகி யிருளுமாகி
மேலான யிருளதிலே வொளியுங்கண்டேன்
நெளியாமல் நின்றுஅந்த ஒளியினாலே
நேசமுடன் கண்டதெல்லாம் வெளியாய்ப்போச்சு
வெளியான மாய்கைவெளி யென்னசொல்வேன்
மெஞ்ஞான சோதியுட விலாசந்தானே. 575

தானான சோதியுட விலாசந்தன்னை
தன்மையுடன் காணவொரு சூட்சங்கேளு
தானான பிருதிவியாம் உப்புஉப்பு
சங்கையுள்ள தண்ணியென்ற வன்னிகூட்டி
தானான லிங்கமரி தாரம்வீரம்
சங்கையுடன் கெங்கையிலே சுத்திபண்ணி
தானான அப்புஉப்பு முருகும்போது
சங்கையுடன் சுத்திசெய்த மருந்தைத்தாக்கே. 576

தாக்கிமிக உருகையிலே தங்கஞ்சேரு
தங்கமது சேர்ந்தவுடன் நாகஞ்சேர
நோக்கிமிக நன்றாய்ச்சேர்ந் துருகும்போது
நுண்மையுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
பாக்கியமாய் நின்றசிவ சோதியென்று
பணிந்துமிக அயக்களங்கை யெடுத்துமைந்தா
தூக்கியந்த வெள்ளியிலே பத்துக்கொன்று
சோதியென்ற அயக்களங்கைக் கொடுத்துப்பாரே. 577

கொடுத்துமிக உருக்கியதை யெடுத்துப்பார்த்தால்
குருவான பொற்குருவை யென்னசொல்வேன்
அடுத்தஅந்தக் குறியறிந்து பார்க்கும்போது
அடங்காத சோதியடா அருமைத்தங்கம்
முடித்தங்கச் சோதியைநீ மைந்தாமைந்தா
முத்திதரும் பரஞ்சோதி என்றுபோற்றி
தொடுத்ததொரு காரியத்துக் கரசாய்நின்று
சுயஞ்சோதி யானசிவ யோகமாமே. 578

ஆமப்பா யோகமென்றால் சிவயோகந்தான்
அருள்பெருகும் ஞானமென்றால் மவுனஞானம்
சாமப்பா மவுனமென்ற ஞானத்தேகி
சகலகலை யோகமென்ற வாசியேறி
ஓமப்பா அந்தரங்கச் சுழினைபார்க்க
உறுதியுள்ள ரவிமதியை யென்னசொல்வேன்
சோமப்பா்ல் பெருகிரவி சுனையிற்சேர்ந்து
துலங்கியது தெளிந்ததும் யிருக்கும்பாரே. 579

இருக்கிறதோர் மவுனமதின் சமாதிகேளு
யேகாந்த சற்குருவால் சொல்லவேணும்
முருக்கியதோர் மாய்கைதனை யறுத்துத்தள்ளி
முத்திதருஞ் சிவஞான யோகத்தேகி
சுருக்கியதோர் வாசியினால் சுழினைசென்று
சோதியென்ற சிவஞான தீபம்பார்த்து
திருக்கறவே அமுர்தரசங் கொள்வதற்கு
சிவசிவா சிவயோகத் திருந்துபாரே. 580

பாரப்பா அகாரமது கண்டத்தேநிற்கும்
பதிவான உகாரமது மூலத்தந்தம்
நேரப்பா மகாரமது மவுனபீடம்
நிட்சயமாய் மூன்றுமது ஒன்றாய்க்கண்டால்
மேரப்பா மவுனமது அறிவிற்கூடும்
வேதாந்த அண்டமது அங்கேதோணும்
காரப்பா இருக்கையிலு நடக்கையிலுமைந்தா
கண்ணறிந்து பார்க்கயெல்லாங் கதையுமாச்சே. 581

ஆச்சப்பா முன்னுமில்லை பின்னுமில்லை
அரகரா தசனாத மங்கேகேட்கும்
மூச்சப்பா ரவிகோடி வன்னிகோடி
முன்னிறைந்த ரவிகோடி காந்திகாணும்
நீச்சப்பா தினந்தோறும் பார்க்கில்மைந்தா
நிசமான வாசியது நிலைநின்றாடும்
பேச்சப்பா மனமிறந்து மவுனமாகும்
பேச்சறிந்து காயசித்து பிலமாய்ப்பண்ணே. 582

பண்ணப்பா காயசித்தி யறுந்துகொண்டால்
பத்தியுடன் மவுனமது சித்தியாகும்
முன்னப்பா மவுனசித்தி யாலேமைந்தா
மூதண்ட ரவியொளியை நன்றாய்ப்பாரு
கண்ணப்பா கொண்டுநிலை பார்க்கும்போது
கற்பூரத் தீபம்போற் சடமேகாணும்
விண்ணப்பா தன்சாய்கை யத்துப்போச்சு
வேதாந்த அந்தமென்ற தேகமாச்சே. 583

## கலை விபரம்

ஆமப்பா தேகமதில் நின்ற சூச்சம்
அருயான கண்மணியே சொல்லக்கேளு
தாமப்பா சூரியகலை பனிரெண்டாகும்
சங்கையுள்ள மதிகலைதான் பதினாறாகும்
ஓமப்பா அக்கினியின் கலைதானாலு
உத்தகலை முப்பத்தி ரெண்டேஅங்கம்
சோமப்பால் சொலித்தசிவ அங்கத்தானும்
சூட்சமென்ற மவுனமதின் சூட்சந்தானே. 584

தானென்ற சூட்சமதால் மூலம்பாரு
தன்னறிவால் நடுப்பாரு முன்பின்பாரு
வானென்ற அண்டகே சரியைப்பாரு
மவுனமென்ற ஞானமடா சோதிபாரு
கோனென்ற சோதியுட கிருபையாலே
குறையற்ற நிருவிகற்பத் துறையைப்பாரு
தேனென்ற நிருவிகற்ப சமாதிகண்டால்
சிவயோக முத்தரெனச் செப்பலாமே. 585

செப்பலாஞ் சமாதிவிட்டு நடக்கும்போது
சிவசிவா மவுனமதில் திரமாய்நின்று
தப்பலாம் பிரபஞ்ச மாய்கைவிட்டு
சதாகாலம் பூரணமே தானாயெண்ணி
ஒப்பலாம் ஆமையுட அங்கம்போலே
உலகமதில் தானொடுங்கி உறுதிபெற்று
முப்பாழே பெரும்பாழாய் வெரும்பாழாகி
முடிவில்லா ஆகாச வெளிதான்பாரே. 586

பாரப்பா வெளியான சோதிதன்னால்
பாதாள முடிவையெல்லாம் பார்க்கும்போதில்
நேரப்பா யென்னசொல்வே வெளியினேர்மை
நேர்ந்துநின்று பார்த்ததெல்லாம் வெளிதானாச்சு
சாரப்பா வெளிதனிலே சார்ந்துகொண்டு
தன்னொளிவே பூரணமாய்ச் சார்ந்திராமல்
வேரப்பா யெண்ணியெண்ணி மடிந்துபோனால்
வேதவழி சேராமல் இருள்சேர்வானே. 587

இருளான மாய்கைவெளிக் குள்ளேமைந்தா
 என்னசொல்வேன் ஒளிவெளியி னின்பதந்தன்னை
மருளாமல் மனதறிவால் வாசியேறி
 மகத்தான கண்ணுமனக் கண்ணால்பார்த்தால்
அருளான ரவிமதிசென் றாடுங்கூத்தை
 ஆனந்த போதமதா லறிந்துபார்த்தால்
பொருளாகிப் போதநிலை யருளுமாகி
 பூரணமாய் நின்றுவெளி வெளியாய்ப்போச்சே. 588

### லிங்கக் கட்டு

வெளியாக இன்னமொரு கருவைச்சொல்வேன்
 வேதாந்தப் பச்சையுடன் பச்சைசேர்ந்து
ஒளியான நாகரச லிங்கக்கட்டி
 உததமனே அஞ்சுமொன்றாய்ப் பழச்சார்விட்டு
நெளியாமல் தானரைத்து உருட்டிமைந்தா
 நேமமுடன் சற்குருவைத் தியனாம்பண்ணி
சளியாமல் புடம்போட்டு யெடுத்துப்பார்த்தால்
 சங்கையுடன் கட்டியது திட்டமாமே. 589

திட்டமுட னயமுடனே வன்னிகூட்டி
 சிவசிவா குகைதனிலே உருக்கிமைந்தா
சட்டமுடன் கட்டினதோர் சரக்கைதாக்கி
 சந்தோஷ மாயெடுத்து வைத்துக்கொண்டு
இட்டமுடன் வெள்ளிசெம்பு நாலார்தன்னில்
 இன்பமுட னுருகையிலே ஒன்றுபோட்டு
மட்டமதா யுருக்கிடநல் மட்டமாகும்
 மகத்தான மட்டமதில் தங்கஞ்சேரே. 590

சேரப்பா தங்கமது பத்துக்கொன்று
 தீர்க்கமுடன் தான்கொடுத்து உருக்கிப்பாரு
நேரப்பா நின்றதங்கஞ் சோதிபோலே
 நிசமாகத் தோனுமடா வசமாய்ப்பாரு
காரப்பா கருணைவிழிக் கமலத்தேகி
 கமலமென்ற சகஸ்திரமா மலருக்குள்ளே
பாரப்பா அமுர்தரசச் செந்தேனூரும்
 பாலகனே கொண்டுமனம் பதிவாய்நில்லே. 591

## குயவன் செம்பு

பதிவாக இன்னமொரு கருமானங்கேள்
　　பதிவான பிருதிவியைப் பழச்சாற்றாலே
கெதியாகத் தானரைத்து மைந்தாகேளு
　　கெணிதமுடன் துருசுவெடி சாரங்கூட்டி
மதியான சருகுடனே பூரஞ்சேர்த்து
　　மைந்தனே பழச்சாற்றா லரைத்துருட்டி
விதியான பித்தளையைத் தகடுசெய்து
　　விரும்பியந்த மருந்ததிலே சேர்த்துமூடே. 592

சேர்ந்துநன்றாய் மூடியபின் மைந்தாகேளு
　　சிவசிவா நிதானமுடன் புடத்தைப்போடு
பார்த்திபனே புடமாறி யெடுத்துப்பார்த்தால்
　　பத்தியுள்ள பித்தளைதான் செம்பாய்ப்போச்சு
போற்றியந்தச் செம்பதனைப் பதனம்பண்ணி
　　புண்ணியனே வெள்ளிதனில் நாலுக்கொன்று
வாத்திமிகத் தான்கொடு உருக்கிப்பார்க்க
　　மகத்தான மதனரதி பொன்தான்பாரே. 593

பாரப்பா பத்திகொண்டு சுத்தமாக
　　பாலகனே கருவறிந்து திருவைக்காண
ஆரப்பா அறிவார்க ளய்யாகேளு
　　அசடரவர் சாஸ்திரத்தை யறியாமல்தான்
வீரப்பா கொண்டுஅவன் புலம்பிமைந்தா
　　வேதாந்த சாஸ்திரத்தைப் பொய்யேயென்பார்
நேரப்பா சாஸ்திரத்தை பொய்யென்போர்கள்
　　நினைவுகெட்ட புலையரென வறிந்துகாணே. 594

காணாத காட்சியெல்லாங் காணவென்றால்
　　கருத்துவைத்து பூரணநூல் தேடிப்பார்த்து
மாணாகேள் மனதுருக ஆதியந்தம்
　　மனமுருகத் தினந்தோறும் நன்றாய்ப்பாரு
தேனான ருசிபோலே பார்த்தாயாகில்
　　சிவசிவா சிவசூட்சம் நன்றாய்த்தோணும்
கோனான குருவினுட பதியேகாணும்
　　கூர்மையுடன் பூரணநூல் கூர்ந்துபாரே. 595

கூர்ந்துமிகப் பார்ப்பதற்கு குறிகண்ணாட்டி
குறியறிந்து மனக்கண்ணால் கூர்ந்துபார்த்தால்
நேர்ந்துமிகக் கொண்டதுவுஞ் சோதியாச்சு
நிலையாத பூரணமுஞ் சோதியாச்சு
சேர்ந்துநின்ற வாசியது சோதியாச்சு
சிவசிவா ஆதியந்தம் சோதியாச்சு
சார்ந்துநின்ற வாசியது சோதியாச்சு
சகலகலைக் கியானமெல்லாஞ் சோதிதானே. 596

சோதியென்ற கண்ணறிந்து சோதிபார்த்தால்
துலங்குமொளிக் குள்ளமைந்த தெல்லாஞ்சோதி
ஆதியென்ற வஸ்துவைநீ யறிந்துகொண்டால்
அப்பவல்லோ சகலநிரா மயமாய்த் தோணும்
சாதியென்ற வரம்பெடுத்தால் தோணாதய்யா
சகலவுயிர் தன்மயமாய்த் தானேகாணும்
நீதியென்ற சாத்திரமே அறிவானந்தம்
நிசமான கலையறிந்து நிலையில்நில்லே. 597

நிலையான கலையறிந்து வாசியேற
நிசமான பூரணமே கெதியென்றெண்ணி
மலையான கொடுமுடியா முச்சிமீதில்
மகத்தான சோதிநவ ரெட்னதீபம்
கலையான தீபமடா கலைக்கியானதீபம்
கண்ணிறைந்த சோதியடா புருவமத்தி
அலையாதே புருவமத்தி துலையென்றெண்ணி
அப்பனே மூக்குநுனி அந்தமாச்சே. 598

அந்தநிலை விந்துவடா விந்தேஅந்தம்
ஆதியென்ற நாதமடா சொந்தவீடு
சொந்தமுடன் வீடறிந்து வாசிபூட்டி
சுகமான அனுக்கிரகத் துள்ளேசென்று
பந்தமுள்ள நவக்கிரகந் தன்னைப்பார்த்தால்
பார்க்கையிலே நிராமாய் வெளியாய்க்காணும்
வந்துவிளை யாடினது வெளிதான்மைந்தா
மனதடங்கிப் போனதுவும் வெளித்தான்பாரே. 599

பாரென்று சொன்னதுவும் வெளிதான்மைந்தா
பரமான கேசரியும் வெளிதான்மைந்தா
நேரென்ற ரவிமதியும் வெளிதான்மைந்தா
நிசமான கழியதுவும் வெளிதான்மைந்தா
சாரென்ற வாசிநிலை வெளிதான்மைந்தா
சதாபோத பூரணமும் வெளிதான்மைந்தா
ஊரென்ற ஆதாரம் வெளிதான்மைந்தா
ஒமுடிந்த வெளியொளியின் மயக்கந்தானே. 600

மயக்கமென்ற திரோதகையை யறிவின்கண்ணால்
மார்க்கமுடன் தானறிந்து மயக்கந்தீர
நயக்கமலச் சோதியைநீ மனக்கண்ணாலே
நாடிமனங் கொண்டுநிலை நயந்துபார்த்தால்
தியக்கமென்ற திரோதகையாள் மயக்கந்தீரும்
சிவசிவா பூரணத்தைத் தினமுநோக்கி
செயக்கமலக் கம்பமடா ஓங்காரத்திற்
தீர்க்கமுடன் மனதுறுதி யாகக்காரே. 601

காரப்பா பலநினைவை மைந்தாதானும்
கருத்துறவே ஒருநினைவாய்க் கருணைகூர்ந்து
பாரப்பா பத்மா சனத்திருந்து
பத்தியுடன் சுழிமுனையைப் பதிவாய்ப்பார்த்தால்
நேரப்பா நின்றிலங்குஞ் சோதிதீபம்
நிலையான தீபமடா அறிவின்கண்ணால்
சாரப்பா அந்தநிலை சார்ந்துகொண்டால்
சச்சுதா னந்தமென்ற யோகமாச்சே. 602

யோகமென்ற சிவயோகம் வாசியோகம்
உற்றகலை வாசியடா சுவாசத்துந்தம்
யேகமென்ற அந்தமடா யென்னசொல்வேன்
எட்டுரெண்டு மொன்றான யேகமாச்சு
ஆகமுடன் ஏகமென்ற பூரணத்தை
அப்பனே அனுதினமு மறிந்துகொண்டால்
தாகமென்ற மயக்கமடா தானேதீரும்
தன்னிலையைத் தானறிந்து தானேபாரே. 603

பாரப்பா தன்னிலையைத் தானேதானாய்
    பதிவான நயனமென்ற சூட்சத்தாலே
காரப்பா சூட்சமென்ற கடைக்கண்தன்னை
    கருத்துவைத்துப் பவுத்திரத்தா லழுத்திப்பார்த்து
நேரப்பா நின்றதினால் மைந்தாகேளு
    நின்றரூபந் தேவாதி ரூபமாச்சு
பேரப்பா தேவாதி தேவனென்று
    பேருபெற்றோர் கோடியிலே ஒருவன்றானே. 604

தானான ஒருவனடா அண்டந்தன்னில்
    சார்ந்துதிரு நடனமதைத் தானேகண்டு
கோனான குருபதியிற் சார்ந்துகொண்டு
    குருவான கருவெடுத்துத் தானேசெய்வான்
தேனான கற்பமடா தான்தானென்று
    திறமான நிருவிகற்பத் திருந்துகொண்டு
வானான கேசரமே தாரகமாய்நின்று
    வாலையென்ற சத்திசிவ பூசைபண்ணே. 605

பூசையென்ற சத்திசிவ பூசைபண்ண
    போக்குவரத் தறியாத புலையர்தன்னை
நாசியென்ற மூக்கதிலே கயிறுகோர்த்து
    நாடாம லாடுகிற செக்கிற்பூட்டி
ஆசையென்ற நாணதினா லடித்துத்தள்ளி
    அறிவான நல்லோரை யடுத்துமைந்தா
வாசியென்ற பூரணத்தை வணங்கிக்கொண்டு
    மகத்தான அட்டசித்து வரிசைபாரே. 606

வரிசையுட னின்னமொரு கருவைக்கேளு
    வாலைமனோன் மணியினுட கிருபையாலே
உருசையுடன் மணிலிரும்பை வாங்கிமைந்தா
    உண்மையுட னுலைதனிலே காய்ச்சிக்காச்சி
கரிசனமாய் வெகுலேசாய்த் தகடடித்து
    காடியென்ற நீரதிலே கழுவிமைந்தா
புரிசமுடன் தானெடுத்து வைத்துக்கொண்டு
    பொரிகார மரைத்ததிலே பூசிக்கொள்ளே. 607

## மணல் இரும்பு களங்கு

கேளப்பா செம்பதனைக் குகையிலிட்டு
கெணிதமுடன் தானுருகும் போதிலேதான்
வாளப்பா மணலிரும்பைப் பத்துக்கொன்று
மார்க்கமுடன் தான்கொடுத்து மடியக்கிண்டி
ஆளப்பா கிண்டையிலே ஒன்றாய்நின்று
அருமையுடன் பொன்போலே உருகும்பாரு
சூளப்பா உருகிநின்ற செம்பைவாங்கி
சுத்தமுள்ள ஓட்டில்வைத்து ஊதிப்போடே. 608

போடப்பா கசடறவே ஊதிப்போட்டால்
பொன்னொளிவு போலிருக்கும் பொன்னைமைந்தா
நாடப்பா பத்ததிலே ஒன்றுபோட்டு
நாட்டிமிகத் தானுருக்கப் பொன்னேயாச்சு
தேடப்பா யிவ்வேதை யாருஞ்சொல்வார்
தேவிமனோன் மணியெனக்குச் செப்பும்வார்த்தை
கூடப்பா அவ்வார்த்தை நிசமென்றெண்ணி
குருமொழியை மறவாமல் கூர்ந்துபாரே. 609

கூர்ந்துமனம் நிலைப்பதற்கு யின்னமொன்று
குறியான குறிமகிமை யொன்றுகேளு
சார்ந்துநின்ற அயமுடனே காந்தங்கூட்டி
சங்கையுட னுருகையிலே மைந்தாமைந்தா
நேர்ந்துகொண்டு நாகமதை யிடையேசேர்க்க
நிசமான அயக்காந்த மொன்றாய்நின்று
சேர்ந்துமிகத் தானுருக்க மைந்தாகேளு
திறமான திருமூர்த்தி களங்கமாச்சே. 610

ஆச்சப்பா திருமூர்த்தி களங்குதன்னை
அப்பனே சொர்க்கமதிற் சேர்த்தாயாகில்
பேச்சப்பா பேசாத சொர்க்கஞ்சேர்ந்தால்
பெருமையினால் திருமூர்த்தி குருவானார்கள்
மூச்சப்பா மும்மூர்த்தி குருவாய்நின்று
முத்தியுள்ள சற்குருவைத் தியானம்பண்ணி
காச்சப்பா வெள்ளிசெம்பி லீய்ந்தாயானால்
கனகமென்ற தங்கமடா யெங்குமாமே. 611

எங்குநிறைந் திருந்தசிவ சோதித்தாயை
ஏகமன மாகவேநீ பூசைபண்ணி
சங்கையுடன் தானிருக்கச் சிவயோகந்தான்
தனதாக வளருமடா தன்னைப்பாரு
அங்கமுடன் தனையறிந்து தன்னைப்பார்த்தால்
ஆதிசிவ சோதியென்ற சோதியாகும்
செங்கமலச் சோதிதனை யங்கேகண்டால்
செகராச யோகமென்ற செல்வமாமே. 612

ஆமப்பா யின்னமொரு வேதைமார்க்கம்
அப்பனே புலத்தியமா ரிடியேகேளு
நாமப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
நன்மையுடன் அரிதாரக் கட்டிவாங்கி
காமப்பா முப்பூவிற் பச்சைகூட்டி
சங்கையுள்ள சருகதுவுங் கூடச்சேர்த்து
ஓமப்பா பழச்சாற்றில் நன்றாயாட்டி
உத்தமனே தாரமதுக் கங்கிபூட்டே. 613

பூட்டிநன்றாய்க் காயவைத்து மண்ணுஞ்செய்து
புத்தியுட னிதானமதாய்ப் புடத்தைப்போட
நாட்டிநின்ற தார்மது யிறுகிக்கட்டி
நன்மையுட னிருக்குமடா உண்மையாக
தாட்டிகமாய்க் கட்டினதோர் தாரந்தன்னை
தானெடுத்து வேதைமுகஞ் சங்கைகேளு
சூட்டியதோ ரயமுடனே வெள்ளிசொம்பு
சொந்தமுடன் தானுருக்கிச் சுகத்தைக்கேளே. 614

கேளடா சுகத்தையனு பவிப்பதற்கு
கிருபையுடன் வெள்ளிசெம்பு அயமூன்றொன்றாய்
சூளடா உருக்குமுகந் தன்னிலேதான்
சுத்தமுள்ள தாரமதை யிடையேதாக்கு
ஆளடா தாக்கியதை யெடுத்துக்கொண்டு
அப்பனே பத்துவெள்ளி ஒன்றுபோட்டால்
பாளடா போகாது பத்துமாத்தாய்
பத்தியுடன் காணுமடா பரத்தைநோக்கே. 615

பரத்தைமிகத் தானறிந்து பரத்தைநோக்கி
பத்தியுடன் சிவயோகத் திருந்துமைந்தா
நிறத்தைமிகக் கண்டறிந்து யார்தான்சொல்வார்
நிசமான பரரூபம் வெளிதானாச்சு
சரத்தைமிகத் தானறிந்து வாசியேறி
சச்சுதா னந்தமென்ற வெளியைப்பார்த்தேன்
உறத்துமிக அவ்வொளியைப் பார்த்தேனப்போ
உள்வெளியும் பரவெளியுமொன்றாங்காணே. 616

ஒன்றாகக் கண்டுநின்ற காட்சிஒன்று
உத்தமனே அந்தமொன்று யெங்குந்தானாய்
நின்றாடி நிரந்தரமாய்த் தானேநின்று
நிச்சயமாய் நின்றதொன்று ரெண்டுமாகி
கொண்டுநின்ற ரெண்டதுவு மூன்றுமாகி
குவிந்துநின்ற மூன்றதுவும் நாலுமாச்சு
கண்டதொரு நாலதுவு மஞ்சுமாச்சு
கலந்துநின்ற அஞ்சதுவு மாறாம்பாரே. 617

பாரப்பா ஆறாகிநின்ற ஆறும்
பத்திகொண்டு எழுவகையின் தோற்றமாச்சு
சேரப்பா எழுவகையின் தோற்றமாகி
சிவசிவா தோற்றமது எட்டுமாச்சு
காரப்பா கருணையுள்ள யெட்டிலப்பா
கண்கண்ட நவக்கிரக மொன்பதாச்சு
வீரப்பா கொண்டநவக் கிரகமய்யா
மெய்யான அனுக்கிரகம் பத்துமாச்சே. 618

பத்தான பரவெளியில் நின்றசூட்சம்
பருதிமதி சுடரொளியி லொளிதானாச்சு
வித்தான வித்தினொளி மூலந்தானும்
விளங்கிநின்ற சோதியைநா னென்னசொல்வேன்
முத்தான சோதியைநான் முன்னேகண்டேன்
முன்னிறைந்த கண்காட்சி கண்டபோது
சித்தான தசதீட்சை முத்திபெற்ற
சிவயோக பூரணத்திற் சென்றேன்பாரே. 619

பாரப்பா பூரணத்திற் சென்றபோது
    பார்த்தவிட மெல்லாந்தான் சோதியாச்சு
நேரப்பா நின்றநிலை சோதியாச்சு
    நிறைந்துநின்ற சோதியைதான் பார்க்கும்போதில்
சேரப்பா சகலமுமே வெளியாப்போச்சு
    சிவசிவா பரவெளியை யென்னசொல்வேன்
காரப்பா பரமவெளி கயிலாசமாச்சு
    கயிலாச பரமவெளி யண்டமாச்சு. 620

அண்டமென்றா லாரறிவார் மைந்தாமைந்தா
    ஆகாசம் பூமியொரு அண்டமாச்சு
விண்டதொரு அண்டமதில் கண்டதெல்லாம்
    விழிமயக்க மல்லாது வேறேயில்லை
கண்டதொரு காட்சியெல்லாங் காணக்காண
    கனவாக நின்றுதடா கருத்தின்மாய்கை
கொண்டதொரு மாய்கைநீ குருவால்கண்டு
    குருவான அம்பரத்திற் குறிகண்ணாட்டே. 621

### கர்ப்ப அயக்காந்த செந்தூரம்

நாட்டமுட னின்னமொரு கருமானங்கேள்
    நாதாந்த நாதமடா சோதிப்பாலில்
தேட்டமுடன் கெந்தியரி தாரம்லிங்கம்
    தெளிவான வீரமொடு பாசாணம்பச்சை
வாட்டமில்லா நாகமொடு ரசமோடெட்டும்
    மகத்தான சோதியுட பால்தன்னாலே
ஆட்டமென்ற கல்வமதில் நன்றாயாட்டி
    அதன்பிறகு அயமுடனே காந்தங்கூட்டே. 622

கூட்டிரெண்டுங் கல்வமதில் நன்றாயாட்டி
    குணமாக முன்மருந்துங் கூடச்சேர்த்து
ஆட்டிநன்றா யெட்டிரெண்டும் பத்துமொன்றாய்
    அப்பனே தானாட்டி வட்டுப்பண்ணி
சூட்டிநின்ற ரவிதனிலே காயவைத்து
    சுகமாக ஓடமுந்தி மண்ணும்பூசி
தாட்டிகமா யெருவடுக்கிப் புடத்தைப்போடு
    சங்கையுடன் சற்குருவை தியானம்பண்ணே. 623

பண்ணப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
பதிவான கவசமதை யெடுத்துப்பார்த்தால்
விண்ணப்பா நுறைந்துநின்ற சோதிபோலே
விளங்குமடா செந்தூர மென்னசொல்வேன்
நன்னப்பா செந்தூரம் பதனம்பண்ணி
நாதாந்த புருவமதில் நயனம்நாட்டி
உண்ணப்பா பணவிடைதான் அந்திசந்தி
உறுதிகொண்டு மண்டலந்தா னுண்டுபாரே. 624

உண்டுநிதம் பார்க்கையிலே மைந்தாமைந்தா
உறுதியுடன் வாசியது நிலையில்நிற்கும்
கண்டதொரு வாசியது நிலையில்நின்றால்
கற்பூர தீபமதைக் காணலாகும்
அண்டர்தொழுங் கற்பூர தீபங்கண்டால்
அரகரா சிவயோக மதுதானுண்மை
கொண்டதொரு உண்மைதனைப் பார்க்கும்போதில்
கூறினசொல் சத்தமடா வெளியுமாச்சே. 625

ஆச்சப்பா வெளியான செந்தூரத்தை
அப்பனே கமலரசந் தன்னிற்கொண்டால்
மூச்சப்பர் முன்னிலைவிட் டசையாதய்யா
முத்தியுள்ள தேகமது சித்தியாகும்
பேச்சப்பா சத்தமது மவுனமாகும்
பெலமாகக் கெவுனமதிற் கெதியுண்டாகும்
காச்சப்பா செந்தூரத் தீயால்தேகம்
கசடற்று ஊழிவரை காணலாமே. 626

காணலாஞ் செந்தூரந் தன்னைமைந்தா
கருணையுடன் முலைப்பாலுந் தேனுங்கூட்டி
தோணவே மண்டலந்தான் கொள்ளும்போது
தூரதிஷ்டி காரியங்கள் துலங்கும்பாரு
பேணவே சகலவுயிர் வசியமாகும்
பேரண்டத் தன்னில்வெகு காட்சிகாணும்
ஊணவே உருதிகொண்டு நின்றாயானால்
உத்தமனே நிருவிகற்ப சமாதியாம்பாரே. 627

பாரப்பா செந்தூரந் தன்னைமைந்தா
　　பாச்சடா வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
நேரப்பா தான்கொடுத்து உருக்கிப்பாரு
　　நிசமான தங்கமடா அதிகவேதை
ஆரப்பா அறிவார்கள் வேதைரூபம்
　　ஆதியந்த பூரணத்தா லறியவேணும்
சாரப்பா பூரணத்தி லிருந்துகொண்டு
　　சத்திசிவந் தனையறிந்து பூசைபண்ணே. 628

பூசையென்ற பூரணமே தெய்வந்தெய்வம்
　　புத்தியுடன் பூரணத்திற் போதமாக
நேசமுடன் தானிருந்து மைந்தாநீயும்
　　நிசமான வாசிமலர் நினைவாய்ச்சாத்தி
ஆசையுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
　　அந்தரங்க நாதவொளி கீதத்தாலே
வாசமுடன் தோத்திரங்கள் செய்தாயாகில்
　　வந்துதடா அஷ்டாங்க வரிசைகாணே. 629

## அஷ்டாங்கம்

வரிசையுட னஷ்டாங்கம் நன்றாய்ச்சொல்வேன்
　　மகத்தான புலத்தியமாமரிஷியேகேளு
உரிசையுடன் புவனாயி தன்னைமைந்தா
　　உண்மையுடன் தியானிக்க வுறுதிசேளு
புரிசமுட னிருதயமாங் கமலமீதில்
　　பொன்னொளிவு போலவுமே தியானஞ்செய்து
கரிசனமாய்ப் புருவமதில் மலர்க்கண்சாத்தி
　　கருணையுடன் ஓம்றீங் டங்டம்மென்னே. 630

எண்ணியே நூற்றெட்டு உருவேசெய்ய
　　என்னசொல்வே னஷ்டகர்ம மெதிர்நின்றாடும்
வன்னியென்ற அக்கினிதான் சோதிமூலம்
　　மகத்தான மூலமடா நெற்றிக்கண்ணில்
புண்ணியனே யென்னசொல்வேன் கமலம்போலே
　　பூரணசந் திரோதயம்போல் சோதிகாணும்
கண்ணிறைந்த சோதியிலே மனக்கண்வைத்து
　　சநனையுட னஷ்டாங்கந் தன்னைப்பாரே. 631

### கபாலரோகத்துக்கு
### புவனை சக்கரம் எழுதிக்கட்ட

பாரப்பா இன்னமொரு சூட்சங்கேளு
பதிவாக அஞ்சுவரை நேரேகீறி
காரப்பா அஞ்சுவரை குருக்கேகீறி
கருணையுடன் பதினாறு அரையுமாச்சு
நேரப்பா அரைதனிலே மைந்தாகேளு
நினைவாக ஓம்றீங் அங்வங்கென்று
சாரப்பா தானெழுதிக் கால்தலையாய்மாறி
சங்கையுடன் மஞ்சளிதிற் சாத்திக்கேளே. 632

கேளடா யெந்திரத்தை நூலால்கட்டி
கிருபையுடன் கணபதிக்கு பூசைபண்ணி
கேளடா மானிடர்க்குச் சிரசில்கட்ட
கேள்வியென்ன சிரசிலுள்ள நோய்கள்தீரும்
கேளடா கபாலவலி கபாலக்குத்து
கேடான பீனிசமும் கெதிகெட்டோடும்
கேளடா சிரசிலுள்ள வியாதிக்கெல்லாம்
கெட்டிகெட்டி எந்திரத்தைத் திட்டம்பண்ணே. 633

திட்டமுள்ள எந்திரமடா மைந்தாமைந்தா
சிவசிவா புவனையுட தீர்க்கம்பாரு
சட்டமுள்ள புவனையடா மயானருத்திரி
சங்கையுட னவள்பதத்தைக் கண்டாயானால்
அட்டாங்க யோகமது தானேதானாய்
அமர்ந்துவிளை யாடுமடா அதுவேமூலம்
இட்டமுடன் புவனையுட சித்துரெம்ப
இன்னமுமே சொல்லுகிறே னிருந்துகேளே. 634

### சந்தானம் உண்டாக

இருந்துகொண்டு குருபரனைத் தியானம்பண்ணி
இன்பமுடன் ஓம்றீங் அங்வங்கென்று
வருந்திமனக் கனிவதனால் தேனில்மைந்தா
மார்க்கமுடன் நூற்றெட்டு உருவேசெய்து
அருந்தவமாய் தலைமுழுகும் போதில்மைந்தா
அன்புடனே பெண்களுக்கு யீய்ந்தாயானால்
திருந்தியந்த மங்கையர்க்குக் கெற்பமுண்டாம்
திட்டமுடன் கண்மணியைக் காண்பாய்பாரே. 635

பாரப்பா மலடாகி இருந்தாலென்ன
பக்குவமாய் யன்பதுக்குள் கெர்பமுண்டாம்
நேரப்பா மணிமந்திர மிதுதானாகும்
நேர்மையுள்ள ரகசியமது சந்தானவித்தை
ஆரப்பா அறிவார்கள் சந்தானகரணி
அறிந்துமன துரிமையனா லடக்கம்பண்ணி
சாரப்பா சாகரத்திற் தவசுபண்ணி
சதாகாலம் பூரணத்தில் சார்ந்துவாழே. 636

சார்ந்துநிலை தானறிந்து தவமேசெய்தால்
தன்மயமும் விண்மயமு மொன்றாய்நிற்கும்
சோந்தந்த விண்மயமே சிவமென்றெண்ணு
திருவான பூரணமே சோதிசோதி
பாந்திபமாஞ் சோதிதனைக் காணப்போமோ
பத்திகொண்டு ஆதாரம் பூந்துபார்த்தால்
காந்தியென்ற காந்தியடா சூரியகாந்தி
கண்கொள்ளாக் காந்தியைநீ கனிந்துபாரே. 637

காந்தியென்ற கனியஒரு கருவைக்கேளு
கருவான ஆகாசந் தன்னிலேதான்
துணிந்துபச்சை சரிசேர்த்துப் பொடித்துக்கொண்டு
சுகமாக ராகியைநீ யுருக்கிக்கொண்டு
பணிந்துநின்ற பொடியைமெள்ளத் தூவிக்கிண்டிப்
பார்க்கையிலே ராகியது பசுமையாகும்
அணிந்துநின்ற பசுமைதனை யார்த்தான்காண்பார்
அரகரா வெடிதுருசு சத்தந்தானே. 638

தானென்ற சத்தமடா வெடிதான்சுட்டால்
தப்பாது சுழினையிலே வாங்கியேறும்
வானென்ற சுழினையிலே சூடுதைத்தால்
மக்களே கண்திறந்து அமுர்தம்பாயும்
தேனென்ற அமுர்தமது மதியாம்விந்து
தெளிவான விந்துவடா நாதத்தந்தம்
ஊனென்ற அந்தமடா விந்தேஅந்தம்
உத்தவிந்து தனிலொடுங்கும் நாதந்தானே. 639

நாதமென்ற சோதியடா லிங்கம்பச்சை
நடுவான பச்சையடா நாலிலொன்று
போதமென்று நினையாம லொன்றாய்க்கூட்டி
பிலமாக அரைத்துருட்டி ஓட்டில்வைத்து
நீதமென்ற கவசமது நன்றாய்ச்செய்து
நிதானமுடன் புடம்போட்டு எடுத்துமைந்தா
போதமென்ற செம்புதனிற் பத்துக்கொன்று
புத்தியுடன் தான்கொடுத்துப் புதுமைபாரே. 640

பாரப்பா புதுமையென்ன சொல்லக்கேளு
பதிவான ராசியடா கன்னிகன்னி
நேரப்பா ஆறுவய தானகன்னி
நிட்சயமாய்த் தன்மனதில் நிலைநின்றாடும்
காரப்பா கருணையினாற் கன்னிமூலம்
கன்னியென்ற வன்னியடா சோதிசோதி
மேரப்பா மேருநடுச் சோதிகண்டால்
வேதாந்த முத்தனடா சித்துதானே. 641

தானென்ற சித்துதான் யோகமார்க்கம்
தனையறிந்த மூலமடா பிரமஞானம்
வானென்ற ஞானமடா கேசரியின்தீபம்
மவுனத்தீ யானதுவு மூலத்தீதான்
ஊனென்ற தீயதுதா னுந்திவுந்தி
ஓமுடிந்த ஆவியடா பிராணநாதம்
தேனென்ற நாதமடா சிலம்பினோசை
தீக்கடங்கா ஓசையைநீ செவியிற்கேளே. 642

செவியான ஆகாச ஓசைமைந்தா
தீர்க்கமென்ற மூலமதி னாவிதன்னால்
தவியாத ஆவியடா மேகமாச்சு
சங்கையுள்ள மேகமது ரவியினாவி
குவியாத ஆவியுடன் மேகஞ்சேர்ந்து
குமிர்தஒலி சத்தமுமாய் சகலமுமாச்சு
அவியாத மேகசலந் தன்னால்மைந்தா
அண்டசராசரங்களெல்லா மாண்மையாச்சே. 643

ஆச்சப்பா ஆண்மையென்ற விந்துநீரை
ஆரறிந்து கரையேறி நீஞ்சப்போறார்
நீச்சப்பா வெகுநீச்சு கரைகாண்பதில்லை
நிலையறிந்து நீஞ்சியந்த நிலையில்நின்றால்
பேச்சப்பா தானொடுங்கி மவுனமாகும்
பிலமான மவுனமடா ஞானபோதம்
மூச்சப்பா அகலாத போதந்தன்னை
முத்தியுடன் சுத்தமதாய் நித்தம்பாரே. 644

நித்தமுமே சுத்தமதாய்க் கண்டகாட்சி
நிசமாகப் பார்க்கையிலே சுத்தப்பாழாய்
சுத்தமுடன் முப்பாழாய் முடிந்துதய்யா
சொல்லிறந்த முப்பாழை யென்னசொல்வேன்
சுத்தமுள்ள ஆகாச வெளிதானாச்சு
சாகாத காலதுவும் வெளிதானாச்சு
வெத்தியுடன் வேகாக தலையுமாச்சு
வேகமுடன் போகாத புனல்தான்பாரே. 645

பாரப்பா சாகாத கால்தான்மைந்தா
பதிவான வாசியடா வாயுவாச்சு
நேரப்பா வேகாத தலையேதென்றால்
நிசமான ஆகாச வெளிதான்பாரு
காரப்பா போகாத புனல்தானப்பா
கனிவான ஆவியடா வன்னிவன்னி
ஆரப்பா அறிவார்கள் மூன்றினேர்மை
அரிதரிது காணவென்றால் ரெண்டைக்கேளே. 646

கேளப்பா ரெண்டான கருவேதென்றால்
கேள்வியென்ன மண்ணுடனே தண்ணீராச்சு
ஆளப்பா மண்ணீரும் விந்துவாச்சு
அடங்கிநின்ற முப்பாழே நாதமாச்சு
கோளப்பா யில்லாமல் மூன்றுரெண்டுங்
கூடியொன்றாய்ச் சேர்ந்ததினாற் பிண்டாச்சு
காலப்பா வலுவான பிண்டந்தானும்
கதித்தெழுந்த தேகபஞ்ச பூதமாச்சே. 647

ஆச்சப்பா பூதமென்ற பஞ்சபூதம்
அடங்காத பிர்மமுமாய் விஷ்ணுவாகி
காச்சப்பா ருத்திரனும் வாய்வுமாகி
கருணையுட னாகாச மஞ்சுமாகி
நீச்சப்பா உலகமுமா யெங்குமாகி
நிறைந்துநின்ற பொருளாகி நேசமாகி
மூச்சப்பா ஒதுங்கிவெகு கட்டுமாகி
முத்திபஞ்ச லோகமுமாய் சரக்குமாச்சே. 648

### பஞ்ச பூதச் சரக்கு விபரம்

சரக்காகி லோகபஞ்ச நவலோகமாகி
சாகரத்தி லெங்குமதாய் நின்றமார்க்கம்
திறக்கும்வகை சொல்லுகிறேன் மைந்தாகேளு
சிவசிவா பிருதிவிதான் அயமுமாச்சு
உறக்கமில்லாச் செம்பதுவுந் தண்ணீராச்சு
உண்மையென்ற தேய்வதுவுந் தங்கமாச்சு
பறக்குகின்ற நாகமது வாயுவாச்சு
பாஞ்சுநின்ற ரசமதுவு மாகாசமாச்சே. 649

ஆச்சப்பா சொன்னவகை அஞ்சுங்கூடி
அடங்கிஉருத் திரண்டதுவுங் குருவாய்ப்போச்சு
மூச்சப்பா ஒடுங்கியுருத் திரண்டவாசி
முத்திகொண்ட ரவிமதியிற் பாய்ந்துதானால்
பேச்சப்பா சொல்லுதற்கு நாவுமுண்டோ
பேருலகெல் லாம்நிறைந்த சோதியாச்சு
காச்சப்பா சோதியென்ற செந்தீதன்னில்
கசடான கருவிகளைச் சுத்திபண்ணே. 650

சுத்தமுள்ள பூதமடா பஞ்சபூதஞ்
சுருதியுள்ள பாஷாணக் கருவைக்கேளு
வெத்தியுள்ள பிருதிவிதான் தாரமாகும்
விசையான அப்பதுத்தன் வீரமாச்சு
பத்தமுள்ள தேய்வதுதான் கெவுரியாச்சு
பாலகனே பாஷாணம் வாயுவாச்சு
முத்தியுள்ள ஆகாசம் லிங்கமாச்சு
முதலான ஐந்துபஞ்ச பூதமாச்சே. 651

பூதமென்ற ஐந்தையுமே ஒன்றாய்க்கூட்டி
புத்தியுட னாதநீர் தன்னாலாட்டி
நீதமுடன் வழித்துருட்டி வட்டுபண்ணி
நீமகனே காயவைத்துப் புடத்தைப்போடு
பேதமின்ற ஒன்றாகக் கட்டிமைந்தா
பெலமான பற்பமதாய் நீறிநிற்கும்
சூதமுட னாகமதைக் கூட்டிநன்றாய்
சுகமான பற்பமதைக் கூடச்சேரே. 652

சேர்த்துமிகத் தானரைப்பாய் நாதநீரால்
திறமாக நெட்டடங்க அரைத்துக்கொண்டு
பார்த்திபனே செம்புவெள்ளி தகடுசெய்து
பதிவான அரைமருந்தை யதிலேபூசி
கார்த்துநன்றாய்ச் சற்குருவைத் தியானம்பண்ணி
கருணையுடன் புடம்போட்டு யெடுத்துப்பார்த்தால்
மாத்ததிக மானதொரு மங்கைமாது
மார்க்கமுட னெட்டுவய தாகும்பாரே. 653

பாரப்பா பதியறிந்து கெதியைக்காண
பத்தான யெட்டுரெண்டுஞ் சுத்தமாக
நேரப்பா நின்றுமனக் கனிவால்நீயும்
நிலைதவறா உருவாக உறுதிகொண்டால்
ஆரப்பா உனக்கீடு யாருமில்லை
அச்சரத்தை உச்சரித்த அருமையாலே
மேரப்பா கிரிநடுவி லாதிசோதி
விளங்குதடா விளக்கொளிபோ லறிவார்காணே. 654

### பாம்புத் தடை

காணவே யின்னமொரு மந்திரசித்தி
கண்காணச் சொல்லுகிறேன் கசிந்துகேளு
ஊணவே ஓம்கிலிசிங் அம்மென்றாக்கால்
ஓடுகிற அரவமது உடனேநிற்கும்
பேணவே சற்குருவைத் தியானம்பண்ணி
பெருமையுட னாயிரத்தெண்ணுருவேசெய்து
தோணவே நல்லறிவால் நின்றாயானால்
தொல்லுலகில் சித்துவிளை யாடலாமே. 655

ஆடவே அரவமது நன்றாயாட்ட
அப்பனே இன்னமொரு சூட்சங்கேளு
சூடவே அங்சிங் கிலிறீங்கென்ன
சேர்ந்துநின்ற அரவமது ஆடிநிற்கும்
நாடவே சுழினையிலே மனக்கண்வைத்து
நன்மையுட னாயிரத்தெட் டுருவேசெய்தால்
வாடவே வேண்டாங்காண் மனக்கண்ணாலே
மகத்தான மந்திரத்தை மகிழ்ந்துபாரே. 656

மகிழ்ந்துமன தறியார்க்கு மனமங்கேது
வாசிநிலை யறியார்க்கு யோகமேது
அகந்தெளிந்து அகமதனை யறியாதார்க்கு
அனுக்கிரக மோட்சநிலை யறிவதேது
செந்தெளிந்த மாய்கைநிலை யறியாதார்க்கு
சிவமேது சத்தியென்ற தீர்க்கமேது
முகந்தெளிந்து முகமறிந்து முகத்தின்கண்ணை
முக்கால்கொண் டென்கலா யூணிப்பாரே. 657

## பாம்பு வாய் கட்ட

ஊணிப்பா ரரவமது வாய்தான்கட்ட
உண்மையுள்ள மந்திரமது ஒன்றுகேளு
பேணிப்பார் நங்கிலிசீ ஓமென்றாக்கால்
பெரிதான நாகமது வாய்தான்கட்டும்
பூணிப்பார் தன்னகமே சாட்சியாகப்
புத்தியுட னாயிரத்தெட் டுறுவேசெய்தால்
ஆணிமாத் தந்தமதி னொளிபோல்மைந்தா
ஆதிதொடுத் தந்தமதின் சித்தியாமே. 658

சித்தியுள்ள நாகமதின் வித்தையப்பா
தெளிந்துகொண்டு மனதுறுதி யாகப்பாரு
புத்தியுடன் பார்த்ததினால் மைந்தாகேளு
பொல்லாத மிருகங்கட் கெல்லாந்தானாய்
பத்தியுட னின்றாடு மந்திரசித்து
பரமகுரு தன்னருளாற் பணிந்துபாரு
சத்தியமாய்ப் பார்த்ததினால் எல்லாமுண்டு
தவறாதே சத்தியமாய்த் தானேநில்லே. 659

நில்லென்ற நிலைதனிலே வாசிகொண்டு
நிசமான வாசுகியா மஷ்டநாகம்
கொல்லென்ற கூத்துவனார் லபியினாலே (டால்
கொடுமையென்ற விஷந்தீண்டித் தலைமேற்கொண்
சொல்லென்ற சொல்லதினால் மைந்தாமைந்தா
சுகமாகத் தீருதற்கு மந்திரங்கேளு
வில்லென்ற விசைபோலே விஷத்திற்பாயும்
விசையாக அங்கிலிசிங் நசிநசியென்னே. 660

யெண்ணியுரு அருபதிலே விஷந்தான்தீரும்
யென்மகனே உறுதிகொண்டு இருந்துபாரு
முன்னமே நஞ்சமுர்த மரனார்கொண்டார்
மோசமென்று பார்வதியா ளுடனேஅந்தச்
சென்னிதனைக் கையாலே தொட்டாளப்போ
சிவன்றனக்கு நஞ்சமுர்தந் தெளிந்துநல்ல
உன்னியந்த மனைதனிலே ஒடுங்கிநல்ல
உற்றவிஷந் தானிறங்கிச் சுத்தமாச்சே. 661

சுத்தமுடன் தானிருந்து நித்யகற்பம்
சுகமாகச் தான்முடித்துச் சுருதிபார்த்து
முத்தியுள்ள தீபமடா மோட்சதீபம்
முதலான தீபமதில் வாசிகொண்டு
பத்தியுடன் ரேசகபூ ரகமும்பண்ணி
பதிவான கும்பகமே தானாய்நின்றால்
சித்தமது தான்குளிர மோட்சதீபம்
சிவசிவா நாடுமுன்னே தெரிசிப்பாயே. 662

**புவனைச்சித்து**

தெரிசிக்க இன்னமொரு கருவைக்கேளு
சிவசிவா புவனைபதி னாறுவீட்டில்
தெரிசிக்க வேணுமென்னா லந்தவீட்டில்
செம்மையுடன் ஓம்கிலி சிறிறீங்கென்று
தெரிசிக்கப் பதினாறு வீட்டிலேதான்
சிந்தையுடன் கால்தலையாய் மாரிக்கொண்டு
தெரிசிக்க மானதமாய்ப் பூசைசெய்து
திருவேற நூற்றெட்டு உருவேசெய்யே. 663

உருவேத்திப் புவனையுட சக்கரத்தை
உண்மையுடன் மானிடர்க்குக் காட்டினாக்கால்
கருவொத்து நின்றுபல வியாதியெல்லாம்
கண்காணா தோடுமடா கருத்தாய்ப்பாரு
வருவித்த வஞ்சனைகள்ள பில்லிஏவல்
மகத்தான பிசாசுகளு மதிகெட்டோடும்
திருவுத்த குருவருளால் புவனைதானும்
தீர்க்கமுட னினைத்தபடி செய்வாள்பாரே. 664

பாரப்பா புவனையுட தீர்க்கங்கேளு
பதிவான புவனமெல்லாம் நிறைந்துநின்று
நேரப்பா நிறைந்தபரஞ் சோதியாகி
நிசமான பொருளாகி ஆத்மாவாகி
சாரப்பா ஆத்மாவுஞ் சத்திசிவமாகி
தன்மையுள்ள ஐம்பூத மாதாரமாகி
காரப்பா ஐம்பூத ஆதாரம்மொன்றாய்
கண்டுங்கா ணாமலெங்கும் பிர்மமாச்சே. 665

ஆச்சப்பா பிர்மமய மல்லால்வேறே
அப்பனே சொல்லுதற்கு நாவுமுண்டோ
பேச்சப்பா பேசினதும் பிர்மமாச்சு
பெருமைகொண்டு நின்றதுவும் பிர்மமாச்சு
மூச்சப்பா கொண்டுநின்ற அண்டபிண்டம்
முழுதுமடா பிர்மமல்லால் வேறேயில்லை
ஆச்சப்பா ஆனதினால் மைந்தாமைந்தா
ஆடினது மடங்கினதும் பிர்மங்காணே. 666

## ஓமம்

காணவே இன்னமொரு கருமானங்கேள்
கருணைவளர் புலத்தியனே கருணைகூர்ந்து
பேணவே ஓமகுண்டம் நன்றாய்ச்செய்து
பிலமான அக்கினியா லரசால்செய்து
பூணவே புவனையுட மந்திரந்தன்னால்
புத்தியுடன் எள்ப்பொரிகொண் டோமம்பண்ணி
தோணவே கிரமமதில் நின்றதோஷந்
சுத்தமுட நீக்குமடா நித்தம்பாரே. 667

பாரப்பா யின்னமொரு பாகங்கேளு
பத்தியுடன் கோதுமைகொண் டோமம்பண்ண
வீரப்பா கொண்டதொரு அபமிருத்து
மெஞ்ஞான பூரணத்தால் விலகும்பாரே
நேரப்பா அபமிருத்து விலகித்தானால்
நினைத்தபடி முடிக்கவண்ணம் நிசந்தான்பாரு
காரப்பா கருணைவளர் புவனைதன்னால்
கண்காண இன்னம்வெகு கடாட்சமாமே. 668

ஆமப்பா நெற்பொரியுந் தேனுங்கூட்டி
ஆயிரத்தெட் டோமமது அன்பாய்ச்செய்தால்
நாமப்பா சொல்லுகிறோ முன்னூருண்டு
நன்மையுடன் தானிருப்பாய் நயனம்பாரு
தாமப்பா நயனமென்ற தீபந்தன்னை
சதாகாலம் பூரணமாய்த் தானேகண்டால்
வாமப்பால் மந்திரகலை வாமபோதம்
வாமம்வளர் புவனையைநீ மகிழ்ந்துகாணே. 669

காணப்பா புவனையைநீ மைந்தாமைந்தா
கண்மூக்கு மத்தியிலே கருத்தாய்நீயும்
ஊணப்பா ஆவியென்ற வாசிதன்னா
லுறுதியுடன் காலறிந்து ஊணிப்பார்த்தால்
பூணப்பா மரகதம்போற்புவனைதானும்
பொற்கமல உச்சியிலே நிற்கச்செய்வாள்
பேணப்பா அவள்பதத்தைப் பூசைபண்ணி
பிரியமுட னனுதினமுஞ் சித்துப்பாரே. 670

சித்தான சித்துகளுக் குறுதியான
சிவசிவா புவனைதிரு மந்திரந்தன்னை
பத்தாசை வைத்துமன துறுதிகொண்டு
பாலிர சந்தன்னுடனே தேனுங்கூட்டி
சுத்தான மனம்நிறுத்தி யேகமாகி
சுருதியுட னாயிரமா குதிகள்செய்தால்
வத்தாத பாக்கியசந் தானபாக்கியம்
வளருமடா ஒன்றுபத்தாய் மனங்கண்டாயே. 671

கண்ணப்பா கண்ணதுதான் மனக்கண்ணப்பா
கண்ணறிந்து கண்பார்க்கக் கண்தான்வேணும்
உண்ணப்பா கண்ணான மனக்கண்தன்னை
உற்றுணர்ந்து பார்ப்பதற்கு உறுதிகேளு
விண்ணப்பா தானோக்கி அகாரவாசி
விரும்பிமனக் கனிவதனா லுறுதிசெய்தால்
முன்னப்பா நிறைந்ததிரு மனக்கண்தானும்
மூதண்டச் சோதிவரை முழிக்கும்பாரே. 672

பாரப்பா முழிக்கும்நிமை மூடுமுன்னே
பாலகனே ஒளியறிந்து வெளியிலேறு
நேரப்பா வெளியறிந்து ஒளியைப்பார்க்க
நின்ரூபஞ் சோதியுட சோதியாச்சு
மேரப்பா மேருகிரி சோதிதானும்
வெளியோடே ஒளிவெளியாய் வெளியுமாச்சு
ஆரப்பா வெளியறிந்து வெளியைச்சேர்ப்பார்
அரிதரிது கோடியிலே ஒருவன்றானே. 673

ஒருவனவ னுலகமெல்லாந் தானேதானாய்
ஓமுடிந்த பட்டணத்தி லுறுதிகொண்டு
பருவமுடன் பார்விசும்புந் தானேதானாய்
பருதிமதி சுழினையெனப் பருவங்கொண்டு
திருஉருவாய் நின்றசெய லார்தான்காண்பார்
சீவன்முத்தர் சிவயோகி சித்தன்காண்பான்
அருவுருவாய் நின்றபொரு ளொன்றேசூட்சம்
ஆதியென்று மனுதியொன்று மறிந்துகொள்ளே. 674

அறிந்துகொண்டு புவனையுட மந்திரந்தன்னால்
அப்பனே நெய்தனிலே அருகுதோய்த்து
தெரிந்தந்த ஓமகுண்டந் தன்னில்மைந்தா
தினம்நூறு ஓமமது தீர்க்கமாக
வருந்திநன்றாய் மண்டலமே செய்தாயாகில்
மகத்தான பிரமமய மாவாய்பாரு
இருந்துரெண்டு மண்டலமே ஓமஞ்செய்தால்
என்னசொல்வேன் முன்னூறு வயதாம்பாரே. 675

பாரப்பா பார்தனிலே யிருக்குமட்டும்
பத்திகொண்டு தினந்தோறும் ஓமஞ்செய்தால்
நேரப்பா பருதிமதி யுள்ளமட்டும்
நீமகனே பூரணமாய் வாழ்வாயப்பா
காரப்பா நித்தியகர்ம அனுஷ்டானங்கள்
கருணையுடன் செய்துகொண்டு கனிவாய்மைந்தா
தேரப்பா தினம்நூறு ஓமஞ்செய்து
சிவசிவா சிவயோகத் திறத்தைகாணே. 676

### பாவங்கள் விலக்க

காணவே யின்னமொரு சூட்சங்கேளு
கருணையுட னுலகத்தோ டிருக்கும்போது
பூணவே கண்ணாரக் கண்டபாவம்
புத்தியுடன் மனதாரச் செய்தபாவம்
பேணவே காதாரக் கேட்டபாவம்
பெண்வகைகள் கோவதைகள் செய்தபாவம்
ஊணவே பலவுயிரைக் கொன்றபாவம்
ஒருகோடி பாவமெல்லா மொழியக்கேளே. 677

ஒழியாத பாவமெல்லா மொழியமைந்தா
உனக்குறுதி சொல்லுகிறே னுண்மையாக
வழியாக ஓமகுண்டம் நன்றாய்ச்செய்து
மார்க்கமுடன் மேல்புரத்திற் கும்பம்வைத்து
சுழிவாக ஆலரசு சமுத்துதன்னால்
சுத்தமுட னக்கினியை வளர்த்துமைந்தா
தெளிவாகச் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
சிவசிவா நவதானியங்கொண் டோமஞ்செய்யே. 678

செய்யடா தினம்நூறு ஓமஞ்செய்தால்
தீராத பாவமெல்லாந் தீருந்தீரும்
மெய்யடா பிரமையொடு சகலரோகம்
விட்டுவிடும் யெக்கியஓ மங்கள்செய்தால்
மய்யமென்ற புருவநடு உச்சிமீதில்
மகத்தான கற்பூர தீபந்தன்னால்
அய்யனே உனதுடைய சமூகங்கண்டால்
அனுதினமுஞ் செல்வபதி யாவான்பாரே. 679

பாரப்பா யின்னமொரு மந்திரசூட்சம்
பத்தியுள்ள புலத்தியனே சொல்லக்கேளு
காரப்பா கருணைவிழி மனக்கண்ணாலே
காலறிந்து யோகமதால் அங்லங்கென்று
நேரப்பா நிலையறிந்து நிலையில்நின்று
நீமகனே நூற்றெட்டு உருவேசெய்தால்
வீரப்பா கொண்டுயிரைக் கொண்டபாவம்
வெகுகோடி பாவமெல்லாம் விலகுந்தானே. 680

தானாகத் தானிருந்து புருவமேவி
சகலநிரா மயமான சோதிதன்னை
வானான கேசரியிற் கண்டுகொண்டு
மகத்தான பூரணமா யோகஞ்செய்தால்
ஊனான ஆதார பீடமைந்தா
உத்தகலை அமுர்தரச தேகமாகும்
தேனான அமுர்தரசத் தேகமாகும்
தீர்க்கமுள்ள பஞ்சகர்த்தாள் திறமாம்பாரே. 681

திறமாகத் தானவனாய்த் தன்னைக்கார்க்க
தெகிட்டாத அமுர்தரச கற்பங்கேளு
உறமான காரமுடன் சாரஞ்சேர்த்து
உற்றகலை ரவிநாத முப்புசேர்த்து
பரமான பூரணமுஞ் சரியாய்க்கூட்டி
பாலகனே கரைத்திருந்து ரவியில்வைத்து
நிறமாக ரவிதனிலே நன்றாய்க்காய்ந்தால்
நிசமான மெழுகாகும் வசமாய்ப்பாரே. 682

வசமாக நீர்வத்தி நன்றாய்க்காய்ந்தால்
மார்க்கமுடன் முன்போலே நன்றாய்ச்செய்து
நிசமான மெழுகுடனே பாகம்பண்ணி
நேர்மையுடன் ரவிதனிலே நவநாள்போட்டு
பிசகாமற் தசநாள்கொண் டெடுத்துப்பாரு
பிலமான கற்பமடா அமுர்தபோதம்
திசமான தீட்சையுட போதந்தன்னை
சிந்தையுட னந்திசந்தி கொண்டுதேரே. 683

தேருவதாற் தேகமதிற் நின்றநோய்கள்
சீக்கிரத்தி லேதெளிந்து தெளிவுண்டாகும்
கூறுகிற மந்திரமுஞ் சித்தியாகும்
குவிந்துமன தொன்றாக அறிவிற்சேரும்
நேறுகிற அறிவான அறிவானந்தம்
நின்றிலங்குங் கற்பூர தீபம்போலாம்
மாறும்வித மறிந்துசர மாறிக்கொண்டால்
மந்திர பஞ்சாட்சரத்தின் சோதிதானே. 684

சோதிமய மாவதற்கு இன்னமொன்று
சுளுவிலே சொல்லுகிறேன் சுகமாய்க்கேளு
ஆதியாள் தன்னுடனே முப்பூசுண்ணம்
அறிந்துகரு வொன்றாக்கி யரைத்துநன்றாய்
நீதியுள்ள தாரமதுக் கங்கிபூட்டி
நேர்மையுடன் காயவைத்து ஆடைசாத்தி
வீதியுடன் புடம்போட வுருகிப்போகும்
விபரமுடன் தானெடுத்துக் குளிரவையே. 685

வைத்துநன்றாய்க் குளிர்ந்தபின்பு கவசம்நீக்கி
மார்க்கமுடன் தாரமதை யெடுத்துப்பாரு
மெய்த்ததொரு தாரமது உருகிக்கட்டி
வேதாந்த செந்தூரம் போலேமைந்தா
கைத்துநின்ற தாரசெந் தூரம்வாங்கி
கருணையுடன் வெள்ளிசெம்பு யிடைக்கிடையேசேர்த்து
நைத்துமிகத் தானுருக்கித் தங்கம்போலாம்
நாதாந்தந் தங்காதி குருவைப்போற்றே. 686

போற்றிநன்றாய்ச் சற்குருவைத் தியானம்பண்ணி
புத்தியுடன் வெள்ளிதனிற் பத்துக்கொன்று
சேர்த்துமிகத் தானுருக்கிப் பார்க்கும்போது
சிவசிவா கயிலாசந் தங்கமாச்சு
பார்த்திபனே தங்காதி மாதுத்தாயை
பார்த்துமன மகிழாமல் வாசிகொண்டு
கார்த்துஅந்தக் கருணைவிழி தன்னால்மைந்தா
கற்பூர தீபமதைக் கனிந்துபாரே. 687

## நாகக் கட்டு

கனிந்துநின்ற நாகமதைக் கட்டக்கேளு
காரசாரத்தினுட செயநீர் வாங்கி
பணிந்துகொண்டு துருசுநவச் சாரங்கூட்டி
பத்தியுடன் செயநீரில் கரைத்துநன்றாய்
அணிந்துகொள்ள நாகமதை உருக்கிச்சாய்த்தால்
அடங்காத கண்ணடங்கி அழுந்திக்கட்டும்
துணிந்துமிகக் கட்டினதோர் நாகந்தன்னில்
சுத்தமுள்ள தங்கமதில் சரியாயச்சேரே. 688

சரியாகச் சேர்த்துமிகக் குகையிலிட்டு
சங்கையுட னுருக்கிடவே மணியாய்நிற்கும்
குறியான நாகமணி தன்னைவாங்கி
குணமாக வெள்ளிசெம்பி லீய்ந்தாயானால்
பரியான தங்கமடா மங்காத்தங்கம்
பாலகனே சுத்தமுடன் கண்டாயானால்
நெறியான வாசியடா தன்னுள்ளேதான்
நேர்மையுடன் னின்றுசிவ யோகமாமே. 689

ஆமப்பா சிவயோகஞ் செய்துகொண்டு
அப்பனே யின்னமொரு பாகங்கேளு
காமப்பா லானதொரு செயநீர்வாங்கி
கருவான துருசுநவச் சாரங்காரம்
தாமப்பா கல்வத்தி லிட்டுக்கொண்டு
சங்கையுடன் மையதுபோல் நன்றாயாட்டி
ஓமப்பா நாகமதிற் கவசம்போட்டு
உறுதியுடன் புடம்போடக் கட்டும்பாரே. 690

கட்டிநின்ற நாகமது சுருக்குரொம்பக்
கைமுறையாய்ச் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
திட்டமுடன் மாதுரதி தங்கநாதம்
செயமான நாகமது கூடச்சேர்த்து
இட்டமுடன் தானுருக்கிப் பார்க்கும்போது
ஏகாந்த மானகுரு மணிபோலாகும்
சட்டமுட னந்தமணி யெடுத்துமைந்தா
சார்வான வெள்ளிபத்தி லொன்றுதாக்கே. 691

தாக்கிநன்றாய்க் கன்துலங்க உருக்கிப்பாரு
சங்கையுள்ள வெள்ளியடா தங்கமாச்சு
பாக்கியமாய் நின்றதங்க மார்தான்காண்பார்
பத்தியுடன் கோடியிலே ஒருவன்காண்பான்
வாக்குமன மொன்றாகிக் கண்டகாட்சி
மகத்தான சோதியடா யென்னசொல்வேன்
தீர்க்கமுள்ள சோதியிலே மனக்கண்வைத்து
தெளிந்துசிவ யோகமதைத் திறமாய்க்காணே. 692

திறமான வாசியிலே உறமாய்நின்றால்
தீர்க்கமுள்ள கேசரியாம் புருவமீதில்
பரமான தீபவொளி கண்ணிற்காணும்
பத்திகொண்டு சுத்தமுடன் சோதிகண்டால்
நிறமான சோதியைப்போற் சோதியாவாய்
நித்தியமுஞ் சத்தியமாய் நினைவாய்ப்பாரு
உறமாகப் பார்த்ததினால் மைந்தாமைந்தா
உன்ரூபஞ் சோதிசிவ ரூபமாச்சே. 693

ஆச்சப்பா சிவரூப மரூபமாகும்
ஆதியந்த மிகநிறைந்த சோதியாகும்
மூச்சப்பா நிறைந்தவெளி சோதியாலே
மோட்சமென்ற சூட்சமதிற் காட்சிகாணும்
பேச்சப்பா மவுனமென்ற காட்சிகண்டால்
பிலமாகு மாதார மூலவன்னி
நீச்சப்பா மூலவன்னி யதிககாந்தி
நிசமான காந்தியடா செந்தீதானே. 694

செந்தீயென்ற உந்தியிலே மைந்தாகேளு
சிவசிவா கெங்கைசிவ கெங்கையுண்டு
சொந்தமுட னந்தநிலை யறிந்துகொண்டு
சுத்தமுள்ள கெங்கைதனை சுகமாய்நீயும்
அந்திசந்தி கொண்டதினா லய்யாகேளு
ஆதார மானசிவ மூலாதாரம்
எந்தவித மென்றறிந்து சொல்லப்போறேன்
எகநிரா மயமான மூலந்தானே. 695

தானென்ற ஆதார மூலம்பார்க்க
 சாதகத்தைச் சொல்லுகிறே னன்றாய்க்கேளு
கோனென்ற குருவருளா லகாரதிட்சை
 கொண்டபின்பு உகாரமடா சத்திதீட்சை
வானென்ற மகாரமடா மவுனதீட்சை
 மார்க்கமுட னுருவறிந்து தீட்சைபெற்றால்
தேனென்ற அமுர்தரச பானத்தாலே
 திருவான மூலமடா தோணும்பாரே. 696

தோணுமடா ஆதார மூலாதாரஞ்
 சுத்தமுள்ள கண்ணறிந்து பார்க்கும்போது
காணுமடா கண்ணொளியின் சூட்சத்தாலே
 கண்டதென்ன ஆதியந்த மெல்லாந்தன்னுள்
உண்ணுவது உந்தியென்ற செந்தீதன்னை
 உள்ளுணர்ந்து ஊதிமனக் கண்ணால்நீயும்
பூணுவதால் சராசரங்க ளெல்லாம்தன்னுள்
 புத்தியுடன் காணுமடா நித்தம்பாரே. 697

பாரப்பா நித்தமுமே சோதிகாண
 பக்குவமா யின்னமொரு கருவைக்கேளு
காரப்பா அரைபொடியும் ராகிகூட்டி
 கல்வமதில் பழச்சாற்றால் நன்றாய்யாட்டி
சேரப்பா மருந்துவகை சொல்லக்கேளு
 திருவான தாரமுடன் லிங்கம்வீரம்
தேரப்பா கெவுரியுடன் வெள்ளைகூட்டி
 திறமாகப் பழச்சாற்றால் நன்றாயாட்டே. 698

ஆட்டிநன்றாய் மைப்போலே வழித்துருட்டி
 அப்பனே சட்டுநடு நன்றாய்வைத்து
தாட்டிகமாய்த் தாம்பூரக் கிண்ணிமூடி
 சங்கையுடன் கொளிமணலை மேலேயிட்டு
பூட்டிநன்றா யடுப்பேத்தித் தியானம்பண்ணி
 புத்தியுடன் மணல்கருகும் பருவந்தன்னில்
தேட்டுடனே சற்குருவைத் தியானம்பண்ணி
 செம்மையுடன் தானிறக்கி யாரவையே. 699

ஆரவைத்து அவிமருந்தை யெடுத்துக்கொண்டு
அந்திடைக்கிச் செம்புருக்கி யதிலேதாக்கு
சேரவைத்துத் தானுருக்கிப் பார்க்கும்போது
சிவசிவா செம்பதிலே காரமேறி
பேருபெற்ற செம்புலிங்கஞ் சோதியாகும்
பிலமான சோதிதனை மைந்தாகேளு
சாரவைத்த வெள்ளியிலே நாலுக்கொன்று
தங்கமயச் செப்புதனி லொன்றுதாக்கே. 700

தாக்கிநன்றா யுருக்கியதைப் பார்க்கும்போது
தன்மையுள்ள பொன்னொளியை யென்னசொல்வேன்
பாக்கியமாய்க் கண்டுநிதந் தெரிசித்தாக்கால்
பத்திமுத்தி சித்தமடா சுத்தமாகும்
வாக்குமன தொன்றான சுத்தங்கண்டால்
வந்துதடா சிவயோக வாழ்வுமைந்தா
நோக்கிமன வாசியினால் புருவத்தேகி
நுண்மையுடன் சிவயோக தீபம்பாரே. 701

**கணபதி மந்திரம்**

பாரப்பா சிவயோகம் பூரணமேயாகும்
பத்திகொண்டு பூரண்மே கெதியென்றெண்ணி
நேரப்பா தானிருந்து அட்டாங்கயோகம்
நேர்மையுடன் பார்ப்பதற்குக் கருவைக்கேளு
காரப்பா கருணைவளர் கணபதியின் தியானம்
கருணையுள்ள வட்டமதில் ஓங்காரஞ்சாத்தி
சேரப்பா ஓங்காரந் தன்னிலேதான்
ஸ்ரீயென்று கணபதியின் பீசஞ்சாத்தே. 702

சாத்தியதோர் சக்கரத்தை முன்னேவைத்து
சகலஉப சாரமதாய்ப் பூசைபண்ணி
போத்திநன்றாய்ப் பூரணத்தில் மனதைநாட்டி
புத்தியுடன் செபிக்கிறதோர் மந்திரங்கேள
பார்த்திபனே ஓம்நமோகுருகிலியும் ஸ்ரீகுருகணபதி
சுவாகாவென்று
புத்தியுடன் பதினாறு உறுவேசெய்தால்
நேத்திரத்தின் பேரொளிபோல் மூலநாயன்
நிச்சயமா யுனதுவசம் வசியமாமே. 703

ஆமப்பா கணபதியை வசியம்பண்ணி
அதன்பிறகு அஷ்டாங்க யோகம்பார்த்தால்
தாமப்பா தன்வசமா யஷ்டகர்மம்
சச்சிதா னந்தபூ ரணத்தினாலே
ஓமப்பா அறுபத்து நாலுசித்தும்
உண்மையுடன் தானவனாய்த் தானேசெய்வாய்
வாமப்பா பூரணத்தின் மகிமையாலே
வரிசையுட னட்டாங்க வரிசைகேளே. 704

### வசியம் எட்டுக்கும் மந்திரம்

கேளடா வசியமென்ற யெட்டுக்குந்தான்
கிருபையுள்ள மந்திரமிது சொல்லக்கேளு (வென்று
வாளடா ஓம்பிறீங்அங் அங்டங்ஹ்ரீயும்கிலியும் சுவாகா
வளமையுடன் செபிக்கிறதோர் வரிசைகேளு
காலடா முக்கோணம் நடுவில்விந்து
கருவாக லங்கெனவே சந்திரபீஷம்
ஆளடா தானெழுதிப் பூசைபண்ணி
அன்புடனே மந்திரத்தை உருவேசெய்யே. 705

செய்யடா தினம்நூறு உருவேசெய்தால்
செம்மையுடன் வசியமெட்டுஞ் சித்தியாகும்
மெய்யடா வசியமது சித்தியானால்
மேன்மைபெற நினைத்ததெல்லாஞ் சித்தியாகும்
அய்யனே புலத்தியனே உனக்காய்ச்சொன்னேன்
அருளான பூரணத்தை யடக்கம்பண்ணு
கையடா அடக்கமது மெய்யாய்ச்சொன்ன
கருணைவளர் வசியமதைக் கனிவாய்ப்பாரே. 706

### மோகனம் எட்டுக்கும் மந்திரம்

பாரப்பா வசியமென்ற யெட்டுஞ்சொன்னேன்
பத்திகொண்டு மோகனத்தைப் பகரக்கேளு
நேரப்பா மோகனந்தா னெட்டும்நன்றாய்
நேர்மையுடன் நின்றாட மந்திரங்கேளு
காரப்பா ஓம்கிலிசங் அங்றீங்ஹ்ரீசிவ சுவாகாவென்று
கண்ணாரச் செபிக்கிறதோர் வகையைக்கேளு
சாரப்பா நாற்கோணம் நடுவில்விந்து
தானெழுதி றீங்கென்று சாத்திடாயே. 707

சாத்தியதோர் சக்கரத்தை முன்னேவைத்து
 தன்மையுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
போத்தியிந்த மந்திரத்தை தினம்நூறப்பா
 புத்தியுடன் தான்செபித்து நின்றாயானால்
பார்த்திபனே மோகந்தா னெட்டும்நன்றாய்
 பத்தியுட னுன்வசமாய்ப் பதிவதாகும்
கார்த்துநன்றாய்க் கருணைபெறச் சித்திபெற்றால்
 கண்கண்ட தெல்லாமோ கனமாம்பாரே. 708

பாரடா மோகனத்திற் பதிவாய்நின்று
 பத்தியுடன் தான்செபித்து சுத்தமானால்
நேரடா சகலசெந்து மிருகமெல்லாம்
 நேர்மையுட னுன்சமுகங் கண்டபோது
வீரடா தானொடுங்கி மோகமாகும்
 வேதாந்த பூரணமே தான்தானானால்
ஆரடா உனக்குநிக ரொருவருண்டோ
 அப்பனே மோகனத்தை யறிந்துதேரே. 709

## தம்பனம் எட்டுக்கும் மந்திரம்

அறிந்துகொண்டு மோகனத்தை நன்றாய்ப்பார்த்து
 அதன்பிறகு தம்பனத்தை யருளக்கேளு.
வருந்திமன துரிமையினால் வாசிகொண்டு
 மகத்தான கேசரியில் மனக்கண்சாத்தி (வென்று
தெரிந்துஓம் ஐயுங்கிலியும்ஸ்ரீயும் றீயும்சுககசுகசுவாகா
 திறமாக உருச்செபிக்க செயலைக்கேளு
விரிந்துபஞ்ச கோணமதில் நடுவேவிந்து
 விந்துநடு ஸ்ரீயும் நன்றாய்ச்சாத்தே. 710

நன்றாகக் கேசரியில் மனதைவைத்து
 நன்மையுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
குன்றாமல் மந்திரத்தைத் தினம்நூறப்பா
 குவியான குருவேறக் குணத்தைக்கேளு
விண்டதொரு எட்டுவகைத் தம்பனந்தான்
 விபரமுட னின்றுவிளை யாடும்பாரு
மண்டலத்திற் சென்றுவிளை யாடுதற்கு
 மகத்தான வித்தையடா மகிழ்ந்துபாரே. 711

பாரப்பா மனங்குவிந்து பதியில்நின்றால்
பத்தியுடன் சகலசித்து மாடலாகும்
சாரப்பா தன்மனமே சாக்ஷியாக
சங்கையுட னேமறிஷ்டை தவறாமல்தான்
காரப்பா பூரணமே கெதியென்றெண்ணி
கண்துலங்க விண்துலங்கக் காலையூணி
தேரப்பா ஆதாரம் நன்றாய்ப்பார்த்து
திக்குவிசை யந்தனிலே திறமாய்க்காணே. 712

### உச்சாடனம் எட்டுக்கும் மந்திரம்

காணவே தம்பனத்தைச் சொன்னேன்மைந்தா
கண்காண உச்சாடனத்தைக் கருதிக்கேளு
பூணவே உச்சாடனந்தா னெட்டுங்கேள்
பூரணமாய் ஓமசங்வுங்கிலியும் தாக்குதாக்கு தூக்கு
தூக்குடங்டங்சுவாகாவென்று
தோணவே செபிக்கிறதோர் வகையைக்கேளு
துருவமுள்ள அறுகோணம் நடுவேவிந்து
பேணவே விந்தெழுதி விந்துக்குள்ளே
பிலமாக டங்கென்று பிலமாய்நாட்டே. 713

நாட்டமுடன் சக்கரத்தை முன்னேவைத்து
நன்மையுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
தேட்டமுள்ள மந்திரத்தைத் தினம்நூறப்பா
சிந்தைமனங் கோணாம லுருவேசெய்தால்
வாட்டமென்ன உச்சாடனந்தான் சித்தியாகும்
மகத்தான புருவமதில் மனதைநாட்டி
பூட்டறிந்து வாசியினாற் திறந்துமைந்தா
பொன்னுலகில் நின்றுவிளையாடுவாயே. 714

ஆடுவதும் பாடுவதும் வாசியாலே
அடங்கிவிளை யாடுவதும் வாசியாலே
கூடிமனங் குவிந்துதிரு வாசியேறி
குருவான கேசரமே கெதியென்றெண்ணி
நாடியந்தப் பூரணத்தைப் பூசைபண்ணி
நாட்டமுடன் தீபமதை நன்றாய்ப்பார்த்து
தேடுவது அட்டாங்கந் தேடவேணும்
திருவிருந்த பட்டணத்தை தினமும்நோக்கே. 715

### ஆக்கிருஷணம் எட்டுக்கும் மந்திரம்

நோக்கமுடன் உச்சாடனத்தைச் சொன்னேன்மைந்தா
நுண்மையுடன் ஆக்கிருஷ்ணத்தி னுண்மைகேளு
பார்க்கமனக் கண்ணாலே நோக்கமாகி
பதிவாக ஓம்கிலியும்சவ்வும் றீயும்ஐயும்நமோபகவ
தேவிரிவிடங்டங்சுவாகாவென்று
தீர்க்கமுட னுருவேறக் கருவைக்கேளு
சிவசிவா நவகோணந் தீர்க்கம்பண்ணி
மார்க்கமுடன் நவகோண நடுவில்விந்து
மகத்தான விந்துநடு ஓமென்றூணே. 716

ஊணிமணங் கொண்டுநவ கோணந்தன்னை
உண்மையுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
பேணியந்த மந்திரத்தைத் தினம்நூறப்பா
பிரியமுடன் தினம்நூறு உருவேசெய்தால்
காணுமந்த ஆக்கிருஷ்ணந்தான் சித்தியாகும்
கருணையுட னினைத்ததெல்லாங் காணுங்காணும்
வேணுமிந்தஆக் கிருஷ்ணந்தான் உலகத்தோர்க்கு
வேண்டிமிகச் சொன்னதிந்த விபரம்பாரே. 717

பாரப்பா விபரமுட னாறாதாரம்
பதிவான புருவமடா உச்சிமீதில்
நேரப்பா வாசியினா லங்கேசென்று
நிசமான சோதியைநீ நன்றாய்ப்பாரு
காரப்பா கண்குளிரப் பார்த்தாயானால்
காலனென்ற எமதூதன் காணாதோடும்
சாரப்பா தன்னகமே கோயிலாகச்
சங்கையுடன் தினந்தோறும் பூசைபண்ணே. 718

### வித்துவேஷணம்

பூசையென்ன மானதமாய்ப் பூசைபண்ணி
புத்தியுடன் ஆக்கிருஷ்ணத்தைப் போதமாக
நேசமுடன் தானிருந்து பார்க்கும்போது
நிசமாக நின்றுவிளை யாடுமப்பா
பாசமுடன் வித்துவே ஷணத்தைக்கேளு
பதிவான மந்திரமிது சுத்தவித்தை
வாசமுள்ள வித்தையடா நேசமான (வதேசுவாகாவென்னே.
மந்திரமிது ஓம்ஸ்ரீயும்றீயும்கிலியும் சர்வயிந்திராணிபக

எண்ணமுடன் மந்திரத்தை செபிக்குமார்க்கம்
இன்பமுடன் விபூதியிலே முக்கோணமிட்டு
கண்ணிறைந்த முக்கோண நடுவேவிந்து
கருணைவளர் விந்துநடு ஓங்காரஞ்சாத்தி
முன்னிறைந்த ஓங்கார நடுவிலேதான்
முத்தியுடன் சுத்தமதாய் சிங்கென்றிட்டு
சன்னதியை நோக்கிமனத் தன்மையாலே
சங்கையுடன் மானதமாய்ப் பூசைசெய்யே. 720

செய்யடா மானதமாய்ப் பூசைபண்ண
சிந்தைமன தொன்றாகச் சிவனைநோக்கி
மெய்யடா மந்திரமிது தினம்நூறப்பா
விரும்பிமன மொன்றாக உருவேசெய்தால்
அய்யனே வித்துவே ஷணந்தானெட்டும்
அரகரா தன்வசமா யடங்கியாடும்
மய்யமென்ற சுழினையிலே அடங்கியாட
வரிசையிட னினைத்தபடி வாய்க்குந்தானே. 721

தானேதான் தானாக வாய்த்ததென்று
தலைகாலாய் விழுகாமல் தன்னைப்பாரு
வீணேதான் திரியாதே தன்னைப்பார்த்து
மெஞ்ஞான பூரணமே கெதியென்றெண்ணி
ஊணேநீ வாசிதனைப் புருவத்தேத்தி
உள்ளெழுந்த சோதியைநீ உற்றுப்பாரு
பூணேநீ பொறகமலச் சோதிகண்டால்
புத்தியுடன் அஷ்டாங்கம் வளரும்பாரே. 722

## பேதனம்

பாரப்பா வித்துவே ஷணத்தைச்சொன்னேன்
பத்தியுடன் பேதனத்தைப் பகரக்கேளு
மாரப்பா பேதனந்தா னத்தவித்தை (நசிசுவாகாவென்று
மக்களேஓம்றீயுஞ்சவ்வும் ஹ்ரீயும்கிலியு அங்அங்நசி
நேரப்பா நேர்மையுடன் செபிக்கக்கேளு
நிசமான யெண்கோணம் நன்றாய்க்கீறி
காரப்பா கோணம்நடு விந்துபோட்டு
கமல[illegible]டு டங்கெனவே கனிவாய்ப்போடே. 723

போட்டெடுத்துச் சக்கரத்தை முன்னேவைத்து
புத்தியுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
நாட்டமுடன் மந்திரத்தைத் தினம்நூறப்பா
நன்மையுட னுருச்செபித்து நயனங்கண்டு
வாட்டமில்லா வாசியிலே நின்றாயானால்
மகத்தான பேதனந்தான் மார்க்கமாக
காட்டும்முன்னே பேதலிக்கு மந்திரசித்து
கைகண்டவித்தையடா கனிந்துபாரே. 724

கனிந்துமிகக் கண்ணறிந்து கமலக்கண்ணை
கருணைவளர் புருவநடு உச்சிமீதில்
துணிந்துகொண்டு வாசியினா லங்கேசென்றால்
சோதிமய மானசிவ ஞானதீபம்
பணிந்தந்தத் தீபமதைத் தினமும்நோக்க
பாதாதி கேசமுதற் சோதியாகும்
அணிந்துகொண்ட தேகமது சோதியானால்
அண்டர்பதந் தன்னில்விளை யாடலாமே. 725

## மாரணம்

ஆமப்பா பேதனத்தை நன்றாய்ச்சொன்னேன்
அரகரா மாரணத்தி னருமைகேளு
தாமப்பா சொல்லுகிறே மந்திரசித்து (சுவாகாவென்று
தனதாக ஓம்அம்றீங்றீங்சிம்றீங் கிலிறீங்பிறீங்பிறீங் பிறீங்
ஓமப்பா ஒருமனதாய்ச் செபிக்கக்கேளு
உறுதியுடன் சூலமிட்டு அடியிலேதான்
நாமப்பா சொல்லுகிறோங் கம்மென்றேதான்
நாட்டமுடன் தானெழுதி நயனம்பாரே. 726

பாரப்பா நயனமென்ற சூலந்தன்னை
பத்தியுடன் மானதமாய் பூசைபண்ணி
காரப்பா மந்திரத்தைத் தினம்நூறாக
கண்ணார உருச்செபித்து கருணையானால்
நேரப்பா மாரணந்தா னிமிஷத்துள்ளே
நினைத்தபடி நின்றுவிளை யாடும்பாரே
தேரப்பா மனந்தேறி யறிவில்நின்று
சிவசிவா மாரணத்தைத் தீர்க்கம்பண்ணே. 727

தீர்க்கமுடன் மாரணந்தான் சித்தியானால் (பார்த்து
தெளிந்துகொண்டு தன்னுயிர்போல் செகத்தைப்
மார்க்கமுடன் சிவயோக வாழ்வில்நின்று
மைந்தனே பூரணத்தை தினமும்நோக்கி
ஏர்க்கையுடன் தானிருக்க வேண்டுமானால்
இடும்பாக மாரணத்தைச் செய்ய வேண்டாம்
ஆர்க்கும்வெகு கொடுமைகளைச் செய்தபேரை
அப்போதே மாரணிக்க அந்தந்தானே. 728

அந்தநிலை தானறிந்து அந்தஞ்சென்று
ஆதிசிவ சோதியிலே அருள்கண்வைத்து
சொந்தமென்று அந்தமதிற் சொக்கினாக்கால்
சொல்லவொண்ணா அதிசயங்கள் மெத்தவுண்டு
பந்தமுடன் தானறிந்து தானேதானாய்
பார்த்தனடா அதிசயங்க ளென்னசொல்வேன்
வந்தவிதம் போனவிதம் ரெண்டுமல்லால்
மற்றதெல்லாம் விழிமயக்க மானவாறே 729

வாறான விழிமயக்க மென்னசொல்வேன்
மகத்தான பரவெளியின் மாய்கைமாய்கை
நேரான மாய்கையது வெளிதானாச்சு
நினைப்பதுவு மறப்பதுவும் வெளிதானாச்சு
பேரான அண்டபிண்டம் வெளிதானாச்சு
பேசுகிற மந்திரமும் வெளிதானாச்சு
ஆறான ஆதாரம் வெளிதானாச்சு
அடங்கிநின்ற நாதவிந்து வெளிதான்பாரே. 730

பாரப்பா பரவெளியே பரசொரூபம்
பத்தியுட னவ்வெளியிற் கண்டதெல்லாம்
நேரப்பா நிலையாத மாய்கைமாய்கை
நின்றுகொண்டு ஆண்டதெல்லா மாய்கையாச்சு
தேரப்பா மாய்கையென்ற மயக்கங்கண்டு
சின்மயமே தன்மயமாய்த் தெளிந்துபார்த்தால்
ஆரப்பா யென்பதற்கு யாருமில்லை
அடங்கிநின்ற நாதமதின் அசைவுதானே. 731

அசைவான வாசியைநீ அழுத்திமைந்தா
அருள்பெருகும் புருவநடுச் சுழினைமேவி
பிசகாமற் தானிருந்து அஷ்டாங்கயோகம்
பிரியமுடன் மவுனமதாய் நன்றாய்ப்பாரு
நிசமாகப் பார்த்ததினா லெல்லாஞ்சித்தி
நேசமுட நிலையறிந்து கலையில்நின்று
வசமாகக் கலையறிந்து நிலையில்நின்றால்
மந்திரத்தா லட்டசித்து வாய்க்குந்தானே. 732

### புவனைச் சக்கரம்

தானான புவனையுட சித்துகேளு
சார்பான புலத்தியமா ரிஷியேஅய்யா
நானான நானான்கு பதினாற்வீட்டில்
நன்மையுடன் ஓம்ரீம் அங்உங்கென்று
ஊனான உடலுயிர்போல் லெக்கம்நூறு
உண்மையுடன் பதினாறு வீட்டில்மைந்தா
கோணான குருவருளால் நன்றாய்மாறி
குருவான கணபதிக்குப் பூசைபண்ணே. 733

பண்ணப்பா கணபதிக்கு பூசைபண்ணி
பத்தியுடன் மந்திரத்தை உருவேசெய்து
நண்ணப்பா எந்திரத்தில் நூலணிந்து
நன்மையுடன் மானிடர்க்குக் கட்டினாக்கால்
விண்ணப்பா தான்துலக்கிச் சவுபாக்கியங்கள்
மென்மேலும் வளருமடா விஞ்சைமூலம்
கண்ணப்பா தானறிந்து தன்னைப்பார்க்க
கைகண்ட வித்தையடா கண்ணைநோக்கே. 734

நோக்குவது கண்ணறிந்து விண்ணைநோக்கி
நுண்மையுள்ள புவனையைநீ பூசைபண்ணி
வாக்குமன மொன்றாகி மனக்கண்கொண்டு
மகத்தான பூரணத்தை வணங்கிநல்ல
நாக்குநுனி யமுர்தமதை நாவால்வாங்கி
நற்கமல பீடமதைச் சுத்திபண்ணி
மூக்குநுனி காலறிந்து தீபம்பார்க்க
முத்திதரும் புவனைபதங் காணலாமே. 735

காணவே புவனைபதி னாறுவீட்டில்
கருணைவளர் அட்சரத்தைக் கருவாய்ப்போட்டு
பூணவே தொண்ணூறு லெக்கந்தன்னை
புத்தியுடன் தானடைத்துப் பூசைபண்ணி
தோணவே மந்திரத்தை யுருச்செபித்து
சுத்தமுடன் மானிடர்க்குக் கட்டினாக்கால்
பேணவே நின்றபல நோய்களெல்லாம்
பிலங்குறைந்து போகுமடா பின்முன்பாரே. 736

பின்னறிந்து முன்னறிந்து நடுவில்நின்று
பெலமான மவுனமென்ற பீடமீதில்
கண்ணறிந்து நின்றுதவஞ் செய்வதற்கு
கற்பமென்ற நிருவிகற்ப மார்தான்காண்பார்
முன்னறிந்து முன்னிலையாய் விண்ணைக்கண்டு
முதலான முப்பாழுக் கப்பாற்சென்று
விண்ணறிந்து மண்ணறிந்து நடுவிற்கண்ட
வேதாந்த பரமவெளி சோதிகாணே. 737

சோதியென்ற புவனைபதி னாறுவீட்டில்
சுத்தமுடன் அட்சரத்தைத் துலங்கப்பண்ணி
நீதியுடன் எண்பதுந்தா னதிலேமாறி
நிசமான எந்திரத்தை முன்னேவைத்து
ஆதியெனு மானதமாய்பு பூசைபண்ணி
அப்பனே மானிடர்க்குக் கட்டினாக்கால்
பேதியென்ற சூனியமும் பில்லிதோசம்
பிலமான பயித்தியமுந் தீரும்பாரே. 738

பாரப்பா புவனாயி பதம்பெற்றோர்க்குப்
பார்தனிலே சகலசவு பாக்கியம்பெற்று
நேரப்பா தானிருந்து நீடூழிகாலம்
நேர்மையுடன் பூரணமாய் வாழ்வாரய்யா
மேரப்பா மேருகிரி தீபம்போலே
மேதினியிற் தானவனாய் விளங்குவான்பார்
காரப்பா கமலமல ரமுதங்கொண்டு
கருத்துவைத்துப் பூரணத்திற் கால்கொண்டூானே. 739

ஊனுமது புவனைபதி னாறுவீட்டில்
உண்மையென்ற மந்திரத்தை மாறிக்கொண்டு
பேணுவது எழுபதுந்தா னதிலடைத்து
பிலமாக மானதமாய்ப் பூசைபண்ணி
காணுவது யென்னவென்றால் மானிடர்க்குக்
கருணையுட னிந்திரத்தைக் கட்டினாக்கால்
தோணுகின்ற சகலமுமே வசியமாகும்
சுத்தமுள்ள எந்திரத்தின் சுருக்குதானே. 740

சுருக்கான வித்தையடா யாருங்காணார்
சுருதியுள்ள புவனாயி சக்கரத்தை
திருக்கருத்துக் கருணையினாற் காணவேணும்
செபதபத்தில் மனதுறுதி யாகவேணும்
உருக்கமுட னூலெடுத்துப் பார்க்கவேணும்
உண்மையென்ற மவுனரசங் கொள்ளவேணும்
கருத்தறிந்து கருக்குருவாய்க் கண்டாலுந்தான்
கருணைவளர் நிஷ்டையிலே கண்ணைப்பாரே. 741

கண்ணான பூரணமே யென்பார்மாண்பர்
கருணைவளர் பூரணத்தைக் காணமாட்டார்
ஒண்ணான பூரத்தைக் கண்டாலுந்தான்
உறுதியுட னதில்மனதை ஒடுக்கமாட்டார்
முன்னான கண்ணதுதா னாதவிந்து
முனையறிந்து ஒன்றாகி நின்றமார்க்கம்
பண்ணான பூரணமாய் நின்றுதையா
பார்க்கவென்றா லென்னசொல்வேன் மவுனமாமே.742

ஆமப்பா மவுனமென்ற புவனைவீட்டில்
அப்பனே அட்சரத்தை யதிலேநாட்டி
நாமப்பா அறுபதென்ற லெக்கந்தன்னை
நன்மையுடன் தானடைத்து நயனமேவி
தாமப்பா தன்னிலையை நன்றாய்ப்பார்த்துக்
தன்மையுடன் மானதமாய் பூசைபண்ணி
வாமப்பால் பூரணத்தி னன்மையாலே
மானிலத்தில் மானிடர்க்குக் கட்டிப்பாரே. 743

கட்டிமிகப் பார்க்கையிலே மைந்தாமைந்தா
கருணையுடன் சகலசவு பாக்கியமெல்லாம்
திட்டமுடன் தானவனாய்ப் பெற்றுவாழ்வான்
சிவசிவா சிவஞான யோகியாவான்
சட்டமுள்ள புவனையுட தீர்க்கத்தாலே
சகலஉயிர் பயிர்களெல்லாம் வசியமாகும்
இட்டமுடன் சற்குருவே கெதியென்றெண்ணி
இருந்துமனக் கண்ணதனால் விண்ணைப்பாரே. 744

விண்ணிறைந்த சோதியடா கமலமாது
வேதாந்த சின்மயமாய் நின்றமாது
உண்ணிவிளை யாடுகின்ற வாசிமாது
உற்றகலைக் கியானசிவ யோகமது
வண்ணியென நின்றுவிளை யாடுமாது
வாலைவய தானசிறு மாதுதன்னை
கண்ணிமையாற் கண்டுபதம் பணிந்துகொண்டால்
கண்டதெல்லாம் சோதிமய மாகும்பாரே. 745

சோதிமய மானசிவ புவனைதானும்
சுத்தமுடன் தானிருக்கும் பதியிலேதான்
நீதியுடன் மந்திரத்தை யந்திரத்தி லேமாற்றி
நிலையான ஐம்பதென்ற லெக்கந்தன்னை
வீதியுடன் தானடைத்து முன்னேவைத்து
விபரமுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
ஆதியென்ற பூரணத்தை மனதிற்கொண்டு
அப்பனே மானிடர்க்குக் கட்டிப்பாரே. 746

பாரப்பா யெந்திரத்தைச் சிரசிற்கட்டி
பத்தியுடன் சற்குருவைப் பணிந்துகொண்டால்
நேரப்பா மனதுகந்து நினைத்ததெல்லாம்
நினைத்தபடி காரியங்கள் சித்தியாகும்
சாரப்பா பெண்களுக்குக் கட்டினாக்கால்
சங்கையுள்ள நோய்களெல்லாந் தானேதீர்ந்து
வீரப்பா கொண்டவிந்து தானேதங்கி
வேதாந்த பூரணமாய்க் கெற்பமாமே. 747

ஆமப்பா ஐம்பதென்ற அட்சரந்தான்
அரகரா ஆதார யிதழ்களாச்சு
ஓமப்பா உண்மையுள்ள ஒன்றேதென்றால்
உத்தமனே அறிவான சோதியாச்சு
தாமப்பா தன்னருளும் பொருளுமொன்றாய்
சார்ந்ததினா லன்பத்தோ ரட்சரமுமாச்சு
நாமப்பா சொன்னஐம்பத் தொன்றினாலே
நாலான காரியமும் சித்தியாமே. 748

சித்தியுள்ள புவனாயி மந்திரத்தை
தீர்க்கமுள்ள பதினாறு வீட்டிலேதான்
பத்தியுட நாற்பதென்ற லெக்கத்தோடே
பக்குவமா யரைதோரு மாறிநன்றாய்
புத்தியுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
புனிதமுடன் சிகைதனிலே கட்டினாக்கால்
சுத்தமுடன் காசனோவு நெஞ்சடைப்பு
சோர்வான அபமிருத்துத் துலைந்துபோமே. 749

துலைந்துபோம் சக்கரத்தைக் கண்டபோதே
சுகமாகுந் தேகவச்சிர காயமாகும்
கலைந்துநின்ற வாசியது கண்டத்தேகி
கண்மூக்கு மத்தியிலே கருணைதங்கும்
விளைந்துமதி குறைந்துகதிர் வளர்ந்துநிற்கும்
வேதநிரா மயமான சோதிகாணும்
அலைந்துமதி போகாமற் புவனைதன்னை
அன்புவைத்து அனுதினமும் பூசைபண்ணே. 750

பண்ணப்பா பூசைநெறி தவறாமல்தான்
பரமகயி லாசமதிற் பதிவாய்நின்று
நண்ணப்பா ரேசகபூ ரகமும்பண்ணி
நாட்டமுடன் கும்பகத்தில் நயனமேவி
கண்ணப்பா கண்ணுமனக் கண்ணாலந்தக்
காலறிந்து வாசியினால் யோகம்பார்த்து
விண்ணப்பா தானாக நின்றாயானால்
வினைகளற்றுச் சுகமாக விளங்குவாயே. 751

விளங்கிமனங் குவிந்துஅந்தச் சுழியில்நின்று
வேதாந்தப் புவனையுட வீட்டிலேதான்
நலங்குவிந்து முப்பதென்ற லக்கத்தோடே
நாதாந்த மந்திரத்தை மாறிமைந்தா
இலங்குமணி மண்டபத்தில் மனக்கண்வைத்து
இன்பமுடன் மானதமாய்ப் பூசைபண்ணி
தலங்குவிந்து சிகைதனிலே கட்டினாக்கால்
தன்மையுட னதின்குணத்தைச் சாற்றக்கேளே. 752

சாற்றக்கேள் தலைவலியும் பீனிசங்கள்
சண்டாளக் கபாலயிடி தானேபோகும்
போற்றக்கேள் கண்ணோவு தந்தவாய்வு
போகுமடா சிரசிலுள்ள வியாதியெல்லாம்
மாற்றக்கேள் புவனையினால் மாற்றவேணும்
மகத்தான புவனையடா மந்திரரூபி
பார்த்தாக்கா லவனுடைய மந்திரசித்து
பத்துகின்ற அக்கினிபோற் பாயும்பாரே. 753

பாரப்பா அக்கினியே தெய்வந்தெய்வம்
பதிவான அக்கினிதா னவிந்துதானால்
நேரப்பா மண்ணுடனே தண்ணீர்வாய்வு
நிலைமறந்து ஓடுமடா வெளியிலேதான்
காரப்பா நிலைமறந்து போகாமல்தான்
கனிவாக அக்கினியைக் கால்கொண்டூதி
தேரப்பா அக்கினியே சோதியாகச்
சிந்தைகொண்டு தினந்தினமுந் தெளிந்துகாணே. 754

தெளிவான கண்ணறிந்து தெளிந்துகொண்டு
தெளிவான அமுர்தரசங் கொண்டாயானால்
நெளியாமல் வாசியது நேரேநின்று
நெத்தியென்ற மத்தியிலே நேரேபாயும்
சுழியாமற் சுழியதிலே பாய்ந்துதானால்
சுருதிமுடி வானதொரு உச்சிமிதில்
ஒளிவான பிரகாசந் தானேதோற்றும்
உத்தமனே பத்தியுட னுண்ணிப்பாரே. 755

உண்ணிவிளை யாடுறவக் கிரகந்தன்னில்
உத்தமனே அனுக்கிரகம் பத்தாம்வீடு
விண்ணிறைந்த வீடுபத்தாம் வீட்டுக்குள்ளே
விளங்குகின்ற சோதியைநா னென்னசொல்வேன்
கண்ணிறைந்த சோதியது யெங்குந்தானாய்
காணுதடா மனக்கண்ணால் நன்றாய்ப்பாரு
சென்னிமையைத் தானோக்கிப் பார்க்கவென்றால்
சிவசிவா கற்பமது ஒன்றுகேளே. 756

## மிளகு கற்பம்

கேளடா கற்பமொன்று சொல்வேன்மைந்தா
கிருபையுள்ள மாதுரதி யமுர்தந்தன்னை
கேளடா வாங்கியொரு கரகத்திட்டு
கெணிதமுடன் பருமிளகாய் யெடுத்துக்கொண்டு
கேளடா அமுர்தரசத் தேனில்நன்றாய்க்
கெட்டியுடன் சட்டமதா யூறவைத்து
கேளடா நீரறவே யூறிற்றானால்
கேள்வியென்ன அந்திசந்தி ஐந்துகொள்ளே. 757

கொள்ளையிலே கபமகலும் வாசியேறும்
குருவான பதிதனிலே தீபங்காணும்
சுள்ளையிலே யகப்பட்ட பாண்டம்போலே
சோர்வான தத்துவங்கள் சுத்தமாகும்
பிள்ளையிலே உங்களைப்போல் பிள்ளையுண்டோ
பிலமான அமுர்தரசங் கொண்டதாலே
உள்ளெழுந்த மந்திரத்தின் சித்தியாலே
உத்தமனே சக்கரம்நின் றாடும்பாரே. 758

பாரென்ற சொன்னமொழி பெற்றுக்கொண்டேன்
பரமகுரு யெக்கியமா முனியேஅய்யா
நேரென்ற மந்திரங்கள் செபிப்பதற்கு
நிலையான சக்கரந்தா னொன்றுசொல்லும்
சீரென்ற வாசியடா திறமுஞ்சொல்லும்
திறமாகப் பூரணத்தின் செயலுஞ்சொல்லும்
கூரென்று சொன்னதைநீ கூறக்கேளு
குணமுடைய கண்மணியின் மன்னாகேளே. 759

### ஏகச் சக்கரம்

மன்னர்குலத் தரசுபதி யாகவந்த
மகத்தான புலத்தியமா ரிஷியேகேளு
கண்ணிறைந்த மந்திரங்க ளனந்தமுண்டு
கருவான சக்கரங்க ளனந்தமுண்டு
முன்னிறைந்த சக்கரங்கள் சகலத்துக்கும்
முதலான சக்கரந்தா னேதென்றாக்கால்
விண்ணிறைந்த சோதியடா விந்துவட்டம்
மேலாக முக்கோணந் தீர்க்கம்பண்ணே. 760

தீர்க்கமுள்ள முக்கோண நடுவில்மைந்தா
சிவசிவா ஓங்காரக் கம்பம்நாட்டி
மார்க்கமுள்ள கம்பநடுச் சிறீங்காரமிட்டு
மக்களே மனதுகந்த மந்திரந்தன்னை
ஏர்க்கையுடன் தானிருந்து செபித்தால்மைந்தா
என்னசொல்வேன் மந்திரங்க ளெல்லாஞ்சித்தி
ஆர்க்குமிதை உரையாதே தனதாய்ப்பாரு
அட்டசித்துங் கைவசமா யாடலாமே. 761

ஆமப்பா விந்ததுவுஞ் செடமுமாச்சு
அதிலமர்ந்த முக்கோண நடுவுமாச்சு
ஓமப்பா ஓங்கார மறிவுமாச்சு
உத்தமனே சிறீஞ்காரந் தீபமாச்ச
வாமப்பால் பூரணமே மந்திரமாச்சு
மகாமந்திர சொரூபமதே யோகமாச்சு
தாமப்பா தானவனே வெளியுமாச்சு
சதாசிவமுந் தானாச்சு தன்னைப்பாரே. 762

தன்னைத்தான் தானறிந்து தன்னைக்காண
சாதகத்தைச் சொல்லுகிறேன் தனதாய்க்கேளு
விண்ணைத்தா னோக்கிமன தறிவாலந்த
வேதாந்த அகாரமுட னுகாரங்கூட்டி
உண்ணத்தான் ரவிநாதங் கூடச்சேர்த்து
உரிசையுள்ள மாதுரதி தேனுங்கூட்டி
கண்ணைத்தான் தானறிந்து ரவியில்வைக்கக்
கருணையுள்ள மெழுகாகுங் கருவாய்ப்பாரே. 763

கருவான மெழுகெடுத்துப் பதனம்பண்ணி
கண்துலங்கச் சற்குருவைத் தியானம்பண்ணி
உருவான செயலறிந்து மைந்தாநீயும்
உதையமதிற் பணவிடைதா னுள்ளேகொண்டால்
திருவான உருவாரந் தன்னிலேதான்
தீர்க்கமுள்ள சோதியடா ஞானதீபம்
குருவான பதிதனிலே தோணும்பாரு
கூர்மையுடன் கண்டதைநீ தானென்றெண்ணே. 764

எண்ணமுடன் கண்ணறிந்து விண்ணைநோக்கி
எங்குமடா தன்மயமா யங்கேகண்டேன்
வண்ணமுடன் கண்டதெல்லாங் கண்ணேயாச்சு
வாழ்ந்ததுவுந் தாழ்ந்ததுவுங் கண்ணேயாச்சு
சொன்னதொரு சாஸ்திரமுங் கண்ணேயாச்சு
சுகமான சீவநிலை கண்ணேயாச்சு
மண்ணதுவும் விண்ணதுவுங் கண்ணேயாச்சு
மக்களே கண்மறைந்தா லெல்லாம்போச்சே. 765

## உப்புக் கட்டு

போச்சென்ற விடுகாதே இன்னமொன்று
புத்தியுடன் கரியுப்புக் கட்டுக்கேளு
மூச்சென்ற சாரத்தா லுப்புக்கட்டும்
முனையான சீனத்தா லுப்புக்கட்டும்
பேச்சென்ற வெடியுப்பா லுப்புக்கட்டும்
பேசாதே காரத்தா லுப்புக்கட்டும்
காச்சென்ற சூடத்தா லுப்புக்கட்டும்
கண்டருக்குங் கட்டுமடா உப்புதானே. 766

தானென்ற உப்புதனைக் கட்டிக்கொண்டு
சங்கையுட னதின்விபரம் சாற்றக்கேளு
ஊனென்ற உப்புடனே லிங்கஞ்சேர்த்து
உத்தமனே நாலிலென்று காரஞ்சேர்த்து
தேனென்ற நாதநீர் தன்னாலாட்டி
தீர்க்கமுட னுருட்டியதை வட்டுப்பண்ணி
கோனென்ற குருவருளால் புடத்தைப்போடு
குருவான லிங்கமது கட்டும்பாரே. 767

பாரப்பா கட்டிநின்ற லிங்கந்தன்னை
    பத்தியுடன் வெள்ளிசெம்பு பத்துக்கொன்று
நேரப்பா தான்கொடுத்து உருக்கிப்பாரு
    நிசமான பொன்னொளியை யென்னசொல்வேன்
காரப்பா கண்ணொளிபோ லொளியைக்கண்டால்
    கண்காட்சி ரெம்பவடா காணலாகும்
தேரப்பா கொண்டதொரு காட்சியாலே
    சிவசிவா சிவயோகந் திறக்குங்காணே. 768

திறக்குமடா வாசியது அண்டத்தேகி
    திருவான கேசரியாம் புருவமத்தி
உறக்குமடா வாசிகொண்டு ஊதிப்பாரு
    உள்ளழுந்த ஊதையிலே சோதிகாணும்
பெருக்கமுள்ள சோதியைநீ கண்டபோது
    பின்னேது முன்னேது யெங்குந்தானாம்
நிறக்கவெங்குந் தானாகி நின்றதாலே
    நின்ரூப பிரமமடா நீதான்பாரே. 769

## ரசமணி

பாரப்பா யின்னமொரு குளிகைகேளு
    பதிவான வாலைரச மார்தான்காண்பார்
காரப்பா வாலைரசக் குளிகைகேளு
    கருவாகக் கட்டினதோ ருப்புவாங்கி
நேரப்பா துருசதுவுங் கூடச்சேர்த்து
    நினைவாக வாலைரசம் ரெட்டிரெட்டி
சாரப்பா சம்பழத்தின் சாற்றாலாட்டி
    தண்ணீரை விட்டுநன்றாய்க் கழுவிப்பாரே. 770

கழுவிமிகப் பார்க்கையிலே மைந்தாகேளு
    கைலாச விந்துரசங் கட்டிப்போகும்
நழுவாமற் கட்டிநின்ற ரசத்தில்மைந்தா
    நாதாந்தத் தந்தாதி சோதிசேர்த்து
பழுதில்லாக் கமலரசந் தன்னாலாட்டி
    பார்க்கையிலே யிருகருவு மொன்றாய்ச்சேர்ந்து
தொழுதுமனங் குவிந்தாப்போற் கெட்டியாகும்
    சோதிமணி போலவுமே மணிதான்செய்யே. 771

செய்யடா மனோன்மணிபோல் மனிதான்செய்து
　　தீர்க்கமுடன் சம்பழத்தி னுள்ளேவைத்து
பய்யடா மருநாள்தா னெடுத்துப்பாரு
　　பத்தியுடன் மணியதுவுங் கெட்டியாகும்
மெய்யடா அம்மணியைப் பதனம்பண்ணி
　　வேதாந்தச் சிவயோகத் திருக்கும்போது
கய்யடா தவறாமல் மணியைவாங்கி
　　கருணையுடன் சற்குருவைத் தியானம்பண்ணே. 772

பண்ணப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
　　பக்குவமா யம்மணியை வாயிற்போட்டு
நண்ணப்பா ரேஷகபூ ரகமும்பண்ணி
　　நாட்டமுடன் கும்பகத்தில் நின்றாயானல்
விண்ணப்பா தானோக்கி யந்தவிண்ணில்
　　மெய்யான தீபமடா கண்ணிற்காணும்
முண்ணப்பா காணுமந்தக் கண்ணின்தீபம்
　　முத்தியுள்ள தீபமதைத் தினமும்நோக்கே. 773

நோக்கியந்த வாசியதைக் தினமும்நோக்கி
　　நுண்மையுள்ள அம்மணியின் ரசத்தைக்கொள்ள
வாக்குமன தொன்றாகித் தானேதானாய்
　　வளமையுள்ள சிவயோக வாழ்கையுண்டாம்
பாக்கியமாய் நின்றசிவ வாழ்க்கைகண்டால்
　　பரமகுரு ஞானசிவ யோகியாவாய்
ஆர்க்குமரி தானசிவ யோகியானால்
　　அண்டபதி ரண்டமெல்லாம் ஆள்வாய்பாரே. 774

## வசீகர மணி

பாரப்பா வசீகரமாங் குளிகையொன்று
　　பத்தியுள்ள புலத்தியனே நன்றாய்க்கேளு
காரப்பா வாலைரசந் தன்னைவாங்கி
　　கருவான ரவிமதியுங் கூடச்சேர்த்து
நேரப்பா கமலரசந் தன்னாலாட்டி
　　நேர்மையுடன் நவநீதம்போற் பாகம்பண்ணி
தேரப்பா கருஞானி அண்டத்திட்டு
　　திட்டமுடன் மண்சீலை கவசம்பண்ணே. 775

பண்ணப்பா கவசமது நன்றாய்ச்செய்து
பாலகனே புடம்போடக் கருவைக்கேளு
நண்ணப்பா நிதானமாய்ப் புடத்தைப்போடு
நலமான கவசமது கருகிற்றானால்
கண்ணப்பா தவறாமல் நன்றாய்ப்பார்த்து
கருகுபதந் தனையறிந்து யெடுத்துக்கொண்டு
முன்னப்பா சற்குருவைத் தியானம்பண்ணி
முத்தியுள்ள கவசமதை யெடுத்துப்பாரே. 776

எடுத்துமிகப் பார்க்கையிலே அண்டத்துள்ளே
என்னசொல்வேன் வசீகரத்தின் குளிகைமார்க்கம்
அடுத்தந்தக் குளிகைதனைப் பதனம்பண்ணி
ஆதியென்ற பூரணத்தில் மனதைவைத்து
தொடுத்துநின்ற வாசியிலே மலர்க்கண்சாத்தி
சுத்தமுள்ள மணியெடுத்துத் தியானம்பண்ணி
நடுத்தரமாய் நாவடக்கஞ் செய்துகொண்டு
நாட்டமுடன் தானிருக்க நன்மைகேளே. 777

நன்மையென்ன உன்சமூகங் கண்டோரெல்லாம்
நயந்துமிக உனதுபதம் பணிவாரையா
வண்மையுள்ள மிருகாதி வசியமாகும்
மகத்தான பூதகெணம் வசியமாகும்
தன்மையுள்ள தாபரமும் வசியமாகும்
சராசரங்கள் முழுதுமடா வசியமாகும்
உண்மையுள்ள தேவதைகள் வசியமாகும்
உத்தமனே முச்சுடரி னுட்சந்தானே. 778

உச்சமென்ன உச்சமதில் மவுனம்வைத்து
உறுதியுள்ள மந்திரங்கள் செபித்தாயானால்
நிச்சயமாய் மந்திரங்கள் சித்தியாகும்
நேர்மையுட னஷ்டகர்மஞ் சித்தியாகும்
பச்சமுள்ள கற்பமெல்லாஞ் சித்தியாகும்
பதிவான வாசியடா சித்தியாகும்
மிச்சமுள்ள தேவதைகள் சித்தியாகும்
வேதமென்ற சாஸ்திரமுஞ் சித்தியாகும். 779

ஆகுமப்பா சகலமுமே சித்தியாகும்
ஆதியென்ற சோதியிலே அன்புவைத்தால்
போமப்பா சகலகர்மம் பாவமெல்லாம்
புத்தியுள்ள சித்தமதாய்த் தன்னைப்பார்த்தால்
வாமப்பா பூரணமுந் தான்தானாகும்
மதியிரவி யானதுவுந் தான்தானாகும்
தாமப்பா சகலமுமே தான்தானாகும்
சகலவுயிர் பிராணநிலை தான்தானாகும். 780

### அஞ்சனம்

காணவே யின்னமொரு கருமானங்கேள்
கருவான மையுறுதி மெய்யானவித்தை
நாணவே சொல்லுகிறேன் நங்கைகண்ட
நன்மையடா நல்மலரி லுண்மைதன்னை
தோணவே உண்மையென்ற சோதிதன்னை
சுந்தரியால் தன்னிடமே உதிரம்வாங்கி
பூணவே பத்தியுள்ள உதிரந்தன்னில்
புத்தியுடன் கருக்குருவிப் பித்துச்சேரே. 781

பித்துடனே மந்திரகலை சவாதுசேர்த்து
பிரணவத்தைத் தியானித்துச் சிமிழில்வைத்து
புத்தியுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
பூரணமாய் மையெடுத்துத் திலதம்போட்டு
சுத்தமுடன் ரேசகபூ ரகமும்பண்ணி
சுருதியுடன் கும்பகத்தில் நின்றாயானால்
சித்தமுட னாதார மூலமெல்லாம்
சிவசிவா விளக்கொளிபோல் தெரிசிப்பாயே. 782

தெரிசிக்க இன்னமொரு கருவைக்கேளு
சிவசிவா கரந்தனிலே நெய்யைத்தேய்த்து
தெரிசிக்க மையெடுத்து உள்ளங்கையில்
தீர்க்கமுடன் பணவிடைதான் போட்டுப்போட்டுத்
தெரிசிக்கக் கண்ணிமையாய்ப் பார்க்கும்போது
செம்மையுடன் பாதாளந் துலைதானோடும்
தெரிசிக்கப் பாதாளந் தன்னிலேதான்
செம்மையுடன் வெகுநிதிகள் காணலாமே. 783

ஆமப்பா வெகுநிதிகள் கண்டாலென்ன
அனுசரித்துப் பாராதே அடங்கிநில்லு
தாமப்பா அடங்குவது யேதென்றாக்கால்
சராசரத்துக் கொவ்வாமற் தரையிற்போச்சு
போமப்பா தரையுண்டு போனதாலே
பொருந்திமனம் வைத்ததனை யெடுத்தாயானால்
ஓமப்பா வெகுபாவஞ் சூழ்ந்துகொள்ளும்
உண்மையென்ற பூரணத்தைத் தேடிப்பாரே. 784

**கருவு மை**

பாரப்பா யின்னமொரு மையைக்கேளு
பருதிமலர் பூவாத மூன்றாந்திங்கள்
காரப்பா அந்தநிலை தன்னைக்கண்டு
கருவான முப்பூவைக் கன்னிக்கீய்ந்தால்
வீரப்பா கொண்டுஅந்தப் பிஞ்சுதானும்
வெதும்பிநின்ற வேகமதாற் கக்கும்பாரு
நேரப்பா கண்டவுட னெடுத்துமைந்தா
நேர்மையுடன் கருவறிந்து கருக்கிடாயே. 785

கருக்கிநின்ற கருவதனைக் கல்வத்திட்டு
கருசலென்ற உரிசையுட தயிலத்தாலே
பெருக்கமுட னரைக்கையிலே சிமிட்டுப்பித்து
பிலமான வேங்கையுடன் கழுகின்பித்து
உருக்கமுடன் கூட்டிநன்றா யரைக்கும்போது
உறுதியுள்ள சவாதுநிகர் கூடச்சேர்த்து
திருக்கறவே ஆட்டியொரு சிமிழில்வைத்து
சிவாயகுரு தேசிகனைத் தியானம்பண்ணே. 786

பண்ணப்பா குருபரனைத் தியானம்பண்ணி
பத்தியுடன் நெற்றிதனில் திலதம்போட்டு
உண்ணப்பா மனக்கண்ணால் மண்விண்பார்க்க
உத்தமனே அண்டரண்ட பதங்கள்தோணும்
முன்னப்பா முன்தோணும் பின்னுந்தோணும்
முத்தியுட னாதாரம் நன்றாய்த்தோணும்
விண்ணப்பா நயனவெளி சூட்சத்தாலே
வேணபடி கண்டுகெதி காணலாமே. 787

### காணிநெய்

காணவே யின்னமொரு சூட்சங்கேளு
　　கருவான காணியடா பொன்னாங்காணி
தோணவே கொடுவந்து சாருவாங்கிச்
　　சுத்தமுடன் பசுவின்பால் சரியாய்ச்சேர்த்து
பூணவே காய்ச்சியுறைக் குத்திவைத்து
　　புத்தியுடன் மறுநாள்தான் தயிர்சிலுப்பி
ஊணவே சிலுப்பிவெண்ணை தனையெடுத்து
　　உத்தமனே தனுருக்கி நெய்யைவாங்கே. 788

வாங்கியந்த நெய்யதனைப் பதனம்பண்ணி
　　வரிசையுடன் விரலதனால் தொட்டுக்கொண்டு
பாங்குடனே கண்ணதனிற் தடவிமைந்தா
　　பத்தியுடன் தான்பார்க்கத் துலைதானோடும்
தாங்கியந்த நெய்யதனைத் தலையிற்தேய்த்து
　　தலைமுழுகி யாகாசம் பார்த்தாயானால்
சாங்கமாய்ப் பகல்காலம் நட்சேத்திரங்கள்
　　தடையறவே தோணுமடா தன்னைப்பாரே. 789

### பூரண நெய்

பாரப்பா யின்னமொரு அதிகசூட்சம்
　　பதிவான புலத்தியனே சொல்லக்கேளு
காரப்பா கமலைப்பால் படிதான்கொண்டு
　　கருணையுடன் வாங்கியது காய்ச்சும்போது
நேரப்பா நிலையறிந்து நிலையிலந்த
　　நிலையான பூரணத்தை நிசமாய்வாங்கி
சாரப்பா பால்தனிலே சேர்த்துமைந்தா
　　சங்கையுடன் காய்ச்சியுறைக் குத்துவாயே. 790

உறைக்குத்தி வைத்ததொரு தயிரைவாங்கி
　　உத்தமனே தயிர்கடைந்த வெண்ணைதன்னை
நிறைக்குறியா யுருக்கியந்த நெய்யைத்தானும்
　　நீமகனே குப்பிதனிற் பதனம்பண்ணி
அறைக்குகின்ற பஞ்சதனைப்திரித்துமைந்தா
　　அன்புடனே சற்குருவைத் தியானம்பண்ணி
துறைக்குருவாய் நின்றபூ ரணத்திற்நெய்யிற்
　　தோய்த்து நன்றாய்த் தீபமதிலேற்றூவாயே. 791

ஏத்திநன்றாய் தீபமதைப் பார்க்கும்போது
என்னசொல்வே னந்தவொளி தன்னிலேதான்
பார்த்திபனே மனந்தனிலே நினைத்ததெய்வம்
பத்தியுடன் காணுமடா சுத்தமாக
காத்துமனக் கனிவதனால் நின்றுபாரு
கலங்காமற் தேவதைகள் கண்ணிற்காணும்
நேத்திரத்திற் தேவசபை நிசமாய்க்காணும்
நின்றிலங்கும் பூரணத்தி நேர்மைதானே. 792

## கேசரி நெய்

நேர்மையுட னின்னமொரு பாகங்கேளு
நிசமான கேசரியில் பால்தன்னோடே
கூர்மையுடன் கலசப்பால் கமலைப்பாலும்
குணமாக மூன்றுவகைப் பாலுமொன்றாய்
கார்மையுள்ள பாண்டமதி லிட்டுமைந்தா
கருணையுள்ள நாதமுடன் பூரணமுஞ்சேர்த்து
தீர்மையுட னன்றாக அடுப்பில்வைத்து
செம்மையுடன் காய்ச்சியுற யிட்டுப்பாரே. 793

பாரப்பா உறையிட்டு வைத்துப்பார்க்க
பத்தியுடன் தானுறைந்து தயிராய்நிற்கும்.
நேரப்பா தயிரான தயிரைமைந்தா
நிலையறிந்து சிலுப்பியதின் ரசத்தைவாங்கி
காரப்பா கலசமென்ற குகையில்வைத்து
கருவறிந்து உருக்கிடநெய் யுருகிப்போகும்
சேரப்பா உருகிநின்ற நெய்யைமைந்தா
செம்மையுடன் பீங்கானில் பதனம்பண்ணே. 794

பண்ணியதோர் நெய்யதின்பே ரென்னவென்றால்
பரைஞான கேசரியின் தயிலமென்பார்
நண்ணியதோர் தயிலமதில் மைந்தாகேளு
நாலான சீலையைநீ திரியாய்ச்செய்து
உண்ணியதோர் திரியதனைத் தயிலத்தூட்டி
உத்தமனே விளக்கொளியிற் தீபமேற்றி
புண்ணியனே சற்குருவைத் தியானம்பண்ணி
புத்தியுடன் ராவழியில் நடந்துபாரே. 795

நடந்துநிலை தனையறிந்து நடந்துபார்க்க
நாதாந்தச் சோதியுட கிருபையிலே
துடந்துவரும் பூதகண மேவல்கேட்குஞ்
சுகமாகத் தேவதைகள் வசனஞ்சொல்வார்
அடர்ந்ததொரு தேவசபை யங்கேகாணும்
ஆகாசம் பூமிவரை அருகேதோற்றும்
படர்ந்துவருந் தேவகண நடனங்காணும்
பரைஞான கேசரியின் வாசந்தானே. 796

## அஞ்சனம்

வாசமுள்ள கேசரியின் மகிமையாலே
மைந்தனே யின்னமொரு மார்க்கங்கேளு
நேசமுள்ள கன்னியுட குடநீர்வாங்கி
நின்றநிறை கமலையுட பாலுஞ்சேர்த்து
பாசமுள்ள பூரணமும் பட்சிப்பித்தும்
பத்தியுடன் தான்கரைத்துப் பதமாய்நீயும்
தோசமென்று நினையாம லடுப்பில்வைத்து
சுத்தமுடன் காய்ச்சியுறை யிட்டுக்கேளே. 797

கேளப்பா உறையிட்ட தயிரைநன்றாய்
கிருபையுடன் தான்கடைந்து சத்துவாங்கி
கேளப்பா அயமான பாத்திரத்தில்
கெணிதமுடன் தானுருக்கித் தெளிவைமைந்தா
கேளப்பா தெளிவறிந்து தெளிவுதன்னை
கெட்டியுள்ள பீங்கானிற் திட்டம்பண்ணி
கேளப்பா சிவந்தபட்டுத் திரியிலூட்டி
கேள்வியென்ன விளக்கொளிபோல் தீபமேற்றே. 798

ஏற்றியதோர் தீபமதை யெதிரேவைத்து
என்மகனே விளக்கொளியை நன்றாய்ப்பார்த்தால்
பார்த்திபனே விளக்கொளியின் பிரகாசத்தில்
பரமகயி லாசவரை நன்றாய்த்தோணும்
நேர்த்தியுடன் கோவில்களும் ரதங்கள்சேனை
நிலையான நிலையதனில் நிசமாய்க்காணும்
தோற்றியதோர் அதிசயங்கற் வெகுவாய்க்காணும்
சுகமாகப் பூரணமாய் நின்றுபாரே. 799

பாரப்பா நின்றுமிக நன்றாய்ப்பார்க்க
பத்தியுடன் தெளிவான நெய்யைமைந்தா
சேரப்பா கிண்ணியென்ற பீங்கான்தன்னில்
செம்மையுடன் விட்டுநன்றாய் நிலத்தில்வைத்து
காரப்பா விளக்கொளிவு நெய்யில்பாயநிலத்தில்வைத்து
கால்நிறுத்தி மேலாகத் தீபம்வைத்து
நேரப்பா தானிருந்து நெய்யில்சோதி
நிசமான சோதியைநீ நிசமாய்ப்பாரே. 800

நிலையறிந்து நெய்யில்நின்ற சோதிதன்னை
நிமையடா துறுதியுட னின்றுபார்த்தால்
துலையாத பூமிபா தாளமட்டும்
தோணுமடா அருகிருந்து பார்க்கப்போமோ
கலையான வாசியினால் நின்றுபார்த்தால்
காணுகிற அதிசயங்கள் சற்றேகேளு
சிலையான சிலைகளுடன் கனகரெட்னம்
சிவசிவா சமாதுகளுஞ் செம்மையாமே. 801

செம்மையுள்ள சமாதுகளுஞ் சிவ்தலங்கள்
சிகரமுள்ள கோபுரமு மடபதிகள்
உண்மையுட னுகாந்தமதில் மணல்மேடிட்டு
ஒற்றதரை யாய்நின்ற உண்மைதன்னை
நன்மையுள்ள பூரணத்தி னொளிதன்னாலே
நாட்டமுள்ள பூமியைநீ திறந்துபார்க்க
தன்மையுடன் தனையறிந்து யோகவான்கள்
தரைமறந்த வதிசயத்தைத் தான்காண்பாரே. 802

காணவே தெளிவான நெய்யைமைந்தா
கண்ணிமையில் தான்பூசிக் கால்மேற்கொண்டு
தோணவே பகல்காலம் விண்ணைப்பார்க்கச்
சோதியென்ற நட்சேத்திரந் தோணும்பாரு
பூணவே மனக்கண்ணால் நன்றாய்ப்பார்க்க
புவனமென்ற பூலோக வாழ்க்கைமைந்தா
பேணவே தன்வசமாய்க் காணலாகும்
பிலமான பூரணத்தைப் பேணிக்காணே. 803

### காய கற்பத் தைலம்

காணவே யின்னமொரு கருவைக்கேளு
கருவான தேகவச்சிர காயமாகப்
பூணவே சொல்லுகிறேன் சிவனார்வேம்பு
புத்தியுடன் தலைசுருளி குளிமீட்டானும்
ஊணவே மூன்றுகரு ஒன்றாய்க்கூட்டி
உறுதியுள்ள பாண்டமதில் நன்றாய்ச்சேர்த்து
தோணவே குழித்தயிலம் நன்றாய்வாங்கி
சுகமாகப் பீங்கானிற் பதனம்பண்ணே. 804

பண்ணப்பா தயிலமதைப் பதனம்பண்ணி
பாலகனே அந்திசந்தி கொள்ளும்போது
பொன்னப்பா போலவுமே தேகமாகும்
பூரணமாய் வாசியது புருவத்தேகி
கண்ணப்பா தான்துலங்கி விண்ணிலேதான்
கற்புர தேகமடா விண்ணிற்காணும்
உண்ணப்பா கற்புர தீபத்தாலே
உண்மையுள்ள மந்திரங்கள் சித்தியாமே. 805

### அஞ்சனம்

சித்தியுள்ள அஞ்சனந்தா னொன்றுகேளு
திறமான தேவாங்கு காமரூபி
பத்தியுள்ள கருக்குருவி மூன்றுமொன்றாய்
பாலகனே கருவறிந்து கருக்கிக்கொள்ளு
சுத்தமுள்ள முட்டோட்டி லிட்டுக்கொண்டு
சூதுகப டில்லாமல் வருக்கும்போது
பத்தியுடல் தானுருகி மையாய்நிற்கும்
மார்க்கமுடன் கல்வமதில் வைத்துக்காணே. 806

காணவே பேரண்டத் தயிலம்விட்டு
கடைந்தெடுக்கும் போதிலிருக் கண்ணிற்காணும்
ஊணவே ஓம்கிலிரங்ரங் கென்றேதான்
உத்தமனே தான்செபித்து வழித்துக்கொண்டு
பேணவே மதகரியின் கொம்பில்வைத்து
பிலமான சிமிழதனைப் பதனம்பண்ணி
பூணவே குருபதியில் மனதைவைத்து
புத்தியுடன் ரேசகபூ ரகமும்பண்ணே. 807

பண்ணியந்தக் கும்பகத்தில் மனக்கண்சாத்தி
பாலகனே மையெடுத்துத் திலதம்போட்டு
கண்ணிறைந்த காட்சியிலே நின்றால்மைந்தா
காசினியி லுனதுருவைக் காணமாட்டார்
புண்ணியனே மனதுகந்த யிடத்தில்நின்று
போதமுடன் ஞானநெறி தன்னைப்பாரு
தன்னருளைத் தனதாகப் பார்த்துப்பின்பு
சங்கையுடன் திலதமதை யெடுத்துப்பாரே. 808

எடுத்துநிலை தனையறிந்து பார்க்கும்போது
என்னசொல்வேன் சொரூபநிலை கண்ணிற்காணும்
தொடுத்துஅந்த நிலையதனைக் கண்டபோது
சோதியென்ற மாத்தமதைப் பதனம்பண்ணி
நடுத்தரமாய் நின்றுசிவ யோகஞ்செய்து
நாடறிந்து சென்றுவலந் தானேவந்து
அடுத்தமனை தனையறிந்து வாழ்ந்துகொண்டால்
ஆதிசிவ சோதியென அறிவார்காணே. 809

அறிவாலே காணுவது என்னவென்றால்
ஆதியந்த மானகே சரியின்மூலம்
குறியான மூலமதில் மனதைவைத்து
கூர்மையுடன் காண்பதுவே காட்சியாகும்
நெறியான காட்சியிலே நின்றாயானால்
நீடூழி காலமடா நிலைக்குஞ்சித்து
விரிவான பரவெளியே மோட்சமாகும்
வேதாந்த மோட்சமடா ஞானத்தீயே. 810

தீயான அக்கினியே ஞானக்கண்ணு
திருவான முக்கோணஞ் சேர்ந்தவீடு
மாயான மாயமென்ற வீட்டிலேதான்
மார்க்கமுடன் காலறிந்து வணங்கிக்கொண்டு
காயான காயறிந்து கனியைத்தின்று
கமலமென்ற அமுர்தரச பானமுண்டு
தாயான வீடதிலே ஒடுக்கமானால்
தன்மயமும் விண்மயமு மந்தமாச்சே. 811

### ஆதியந்தம்

அந்தமென்ற தேகமது விந்தேஅந்தம்
　　ஆதியென்ற நாதமதே சோதிமூலம்
சொந்தமென்ற மூலஅனல் வாசியாச்சு
　　சொரூபமென்ற ஞானமதே சோதியாச்சு
பந்தமென்ற சோதியடா வெளியுமாச்சு
　　பரமவெளி யானதுவுஞ் சாட்சியாச்சு
எந்தவித மானாலுஞ் சாட்சியாக
　　இருக்கிறதே சிவயோக வியல்புதானே. 812

### புத்தி

தானேதான் சத்தியமா யிருக்கவேணும்
　　சகலவுயிர் தன்னுயிர்போ லெண்ணவேணும்
கோனேதான் தானவனாய்க் குறிகண்ணாட்டி
　　குவிந்தெழுந்த வாசியிலே குணமாய்நின்று
வானேதான் அண்டமதே கெதியென்றெண்ணி
　　மகத்தான பூரணத்தில் வளர்ந்துகொண்டு
ஊனேதா னுண்மையெனக் கொண்டால்மைந்தா
　　உன்னுடம்பு விளக்கொளிபோ லுண்மைகாணே. 813
உண்மையெனக் கண்டதெல்லாம் வெளிதான்மைந்தா
　　உற்றகலைக் கியானமெல்லாம் வெளிதான்மைந்தா
தன்மையென்ற சராச்ரமும் வெளிதான்மைந்தா
　　சங்கையில்லா மந்திரமும் வெளிதான்மைந்தா
வெண்மையென்ற விந்ததுவும் வெளிதான்மைந்தா
　　வேதாந்த நாதமதும் வெளிதான்மைந்தா
சின்மயமாய் நின்றதெல்லாம் வெளிதான்மைந்தா
　　தெளிந்துநின்று அழிந்ததுவும் வெளிதான்பாரே. 814

### அமுர்தரச கற்பம்

பாரப்பா வெளியறிந்து வெளியிலேற
　　பதிவான கற்பமொன்று சொல்லக்கேளு
நேரப்பா வெளியேறி வந்தசூட்சம்
　　நீடுலகில் மானிடரே காணப்போறார்
பேரப்பா பெற்றதொரு தவப்பேராலே
　　பிலமான சத்திசிவ பூசைபண்ணி
காரப்பா கருணையினாற் கமலமேவி
　　கமலரச பூரணத்தைக் கனிவாய்வாங்கே. 815

வாங்கியந்தப் பூரணத்தில் மைந்தாகேளு
மகத்தான ரவினாதம் பூதஞ்சேர்த்து
பாங்குபெற ரவியினிடம் நவநாள்வைத்து
பதிவான சருகுடனே பூரத்தண்டம்
தாங்கியொரு பாண்டமதி லிட்டுமைந்தா
தன்மையுடன் குழித்தையிலந் தானேவாங்கி
தீங்கில்லா அமுர்தரச வெண்ணைதன்னில்
திருவான தயிலமதைக் கூடச்சேரே. 816

சேர்த்துமிக வுறவுசெய்து பீங்காந்தன்னில்
செம்மையுடன் பதனமதாய் வைத்துக்கொண்டு
பார்த்திபனே சற்குருவைத் தியானம்பண்ணி
பணவிடைதா னமுர்தரசஞ் கொண்டாயானால்
தேத்தியதோர் தேகமது தளராதய்யா
சிவசிவா வாசியது கழறாதய்யா
பூத்தமலர் வாசனைபோல் வாசிதானும்
புருவமய்ய மானவெளி காணும்பாரே. 817

காணவே அமுர்தரசக் கற்பந்தன்னை
கருணையுடன் மண்டலமே கொண்டாயானால்
பூணவே மனந்தனிலே நினைந்த்காட்சி
புத்தியுடன் காணுமடா சுத்தமாக
தோணவே வாசியது கெவுனத்தேகும்
சோதியென்ற சோதியிலே சுகமாய்நிற்கும்
பேணவே பூரணத்தி னன்மையாலே
பேரொளியா லண்டபதங் காணலாமே. 818

ஆமப்பா அண்டபத முச்சிவட்டம்
அருளான வட்டமடா விந்துமேரு
தாமப்பா விந்துவென்ற மேரிலேதான்
தன்மையுடன் ஓங்காரக் கம்பம்நாட்டி
வாமப்பா நிறைந்ததொரு ரீங்காரத்தில்
மார்க்கமுடன் கருக்குருவா யுருவேயேற
சோமப்பால் தானொழுகு மந்தப்பாலை
சுத்தமுட னித்தியமுங் கொண்டுபாரே. 819

கொண்டுநிதம் நின்றுகெதி பார்க்கும்போது
　　கூர்மையுடன் மூலமதி லனலோமீறி
அண்டர்பதங் கொண்டுதொழு முக்கோணத்தில்
　　அந்தஅனல் சோதியென அடங்கிநின்று
எண்டிசைக்கு முதலான புருவத்தந்தம்
　　ஏகாந்த அந்தமென்ற சோதிதன்னில்
கண்டுநிலை தனையறிந்து ஒடுங்கித்தய்யா
　　கற்புர தீபமென்ற சோதிதானே. 820

சோதியென்ற முச்சுடரின் சூட்சந்தன்னை
　　சொல்லுகிறேன் கண்மணியே நன்றாய்க்கேளு
ஆதியென்ற மூலமடா ரவியாஞ்சோதி
　　அருள்பெருகு முச்சியடா மதியாஞ்சோதி
நீதியென்ற முக்கோண மார்தான் காண்பார்
　　நிலையான அக்கினியாஞ் சோதியந்தம்
வீதியென்ற அந்தமடா சொந்தமாக
　　மெஞ்ஞான கேசரியில் விரும்பிநில்லே. 821

விரும்பிநிலை தனையறிந்து யோகஞ்செய்ய
　　வேதமென்ற நீதமடா வாதத்தந்தம்
விரும்பியந்த வாதமென்ற அந்தமார்க்கம்
　　வேதாந்த அண்டமடா கெவுரிலிங்கம்
விரும்பிநின்ற கெந்தியுடன் அரிதாரந்தான்
　　மேலான மிருதரா சிங்கிதானும்
விரும்பிமனங் கொண்டரசம் நாகமேழும்
　　வேண்டிமனக் களிவதனால் விரும்பிவாங்கே. 822

வாங்கிமிகக் கல்வமதி லிட்டுமைந்தா
　　மகத்தான நாதநீர் தன்னாலாட்டி
ஓங்கிமிகத் தானரைத்து ரவியில்வைத்து
　　உத்தமனே காய்ந்தபின்பு பொடித்துக்கொண்டு
பாங்குடனே காசியென்ற குப்பிக்கேத்தி
　　பத்தியுடன் மண்சீலை வலுவாய்ச்செய்து
தாங்கிநன்றாய் பாண்டமரைச் சாம்பலிட்டு
　　சங்கையுடன் குப்பிநடு வைத்துக்காரே. 823

வைத்தகுப்பி மூக்களவு சாம்பல்கொட்டி
மாக்கமுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
கைக்குள்வச மாகவென்று தீயைமூட்டி
கருணையுட னெரிக்கையிலே பதத்தைக்கேளு
மெய்க்குளது அனலேறி ஆவிகண்டால்
விரும்பிமிகப் பாண்டமதை யிறக்கிவைத்து
தய்த்தஅனல் மாறியபின் குப்பிவாங்கி
சங்கையுடன் கவசமதை யெடுத்துப்பாரே. 824

எடுத்துமிகப் பார்க்கையிலே சரக்கேழுந்தான்
என்னசொல்வேன் உருகியது கட்டிப்போகும்
நடுத்தரமாய்க் கட்டிநின்ற பாடாணத்தை
நாதாந்த தங்கமதில் நாலுக்கொன்று
தொடுத்துமிக வாய்நீறா லரைத்துப்பூசி
சுகமாக ஓட்டில்வைத்துப் புடத்தைப்போடு
கடுத்துமிக அனலேறிப் புடத்தைப்போட்டால்
கனகரதி யானதங்கங் குருவாங்காணே. 825

காணவே கனகமென்று குருவைவாங்கி
கருணையுடன் வெள்ளிதனிலே பத்துக்கொன்று
பேணவே தா்ன்கொடுத்து உருக்கிப்பாரு
பிலமான வெள்ளியடா தங்கமாகும்
தோணவே கண்கண்ட தங்கந்தன்னை
சோதிமய மானசிவ சூட்சமென்று
பூணவே மனதடக்கஞ் செய்துகொண்டு
புத்தியுடன் சிவயோகம் பூண்டுபாரே. 826

பாரப்பா மனம்பூண்டு சிவயோகத்தில்
பத்திமனங் கொண்டுதவஞ் செய்தாயாகில்
வீரப்பா கொண்டசெடஞ் சித்தியாகும்
விசையான வாசியது அசையாதய்யா
நேரப்பா வாசியது நிலையில்நின்று
நிலையான புருவநடு உச்சிமீதில்
மேரப்பா மேருகிரி தீபம்போலே
மெஞ்ஞான கேசரியில் விளங்குங்காணே. 827

காணப்பா கமலமென்ற கண்ணினாலே
காலறிந்து மேலான கருணைக்கண்ணை
பேணப்பா மனதுறுதி யாலேகண்டு
பிசகாம லனுக்கிரக வீட்டிலேதான்
பூணப்பா பூண்டுமனங் கொண்டுநின்றால்
பூரணமாய் நவக்கிரகஞ் சித்தியாகும்
வீணப்பா கிரகமென்று நின்றாயானால்
விண்ணிடியால் கிரகமது வீழ்ந்துபோமே. 828

வீழ்ந்துநிலை போகாமல் மனதுகெண்டு
வேதாந்த அகாரமதைப் பூசைபண்ணி
வாழ்ந்துகொண்டு உகாரமதைத் தியானஞ்செய்து
வகாரமென்ற பூரணத்தை மருவிப்பார்த்தால்
சூழ்ந்துநின்ற பாசவினை துலைந்துபோகும்
சுத்தமுடன் தேகமது சோதியாகும்
தாழ்ந்துநின்ற வாசியடா தலைமேற்கொண்டு
தளறாது தேகமது தகறாதென்னே. 829

எண்ணப்பா தேகமது தளறாதென்ன
எட்டிரெண்டு மொன்றான இன்பத்தாலே
கண்ணப்பா கலங்காது மனக்கண்கண்டால்
கசிந்துமனக் கண்ணறிந்து கால்கொண்டுாணி
விண்ணப்பா வூடுருவி அண்டந்தாண்டி
வேதாந்த அண்டமதி னமுர்தங்கொண்டால்
மண்ணப்பா பொன்னாகு மென்னாளுந்தான்
மகத்தான அண்டபத வடிவில்நில்லே. 830

## எமன் விலக

நில்லடா அண்டபத நிலையைக்கண்டு
நிலையறிந்து பூரணத்தை நிதமுமைந்தா
கொள்ளடா பசியாற உண்டாயானால்
கொடுமையுள்ள கூத்துவனார் குடிலம்நீங்கும்
உள்ளடா குடிலமது நீங்கித்தானால்
உலகமதில் நீயுமொரு முனிதானப்பா
கல்லடா கோட்டையது தகராதய்யா
காலறிந்து கொண்டதினாற் கருணையாச்சே. 831

ஆச்சப்பா கருணைவளர் ஆறாதாரம்
அகண்டபரி பூரணமா மேலாதாரம்
மூச்சப்பா நின்றிலங்கு மாதாரத்தில்
முழங்கிநின்ற நாதமடா வாசிமூலம்
பேச்சப்பா அடங்கிநின்ற வாசிமூலம்
பேரண்டத் துள்மூல மார்தான்காண்பார்
நீச்சப்பா நிலையறிந்து காணப்போகா
நிலையறிந்து கொண்டவனே நிசவான்காணே. 832

**சோதி காண**

காணடா நிசமான வசனங்காணக்
கருணையுடன் மூலமதில் ஓம்றீங்கென்று
பூணடா நடுவான முக்கோணத்தில்
புத்தியுடன் பூரணமாய் மனக்கண்ணாட்டி
ஊணடா சுழியறிந்து கால்மேற்கொண்டால்
உத்தமனே நிசமான சோதிகாணும்
பேணடா சோதியைநீ அந்திசந்தி
பேணிமனங் கொண்டுகரையேறுயேறே. 833

ஏறுவது வாசியினா லேறவேணும்
ஏகாந்த அமுர்தரசங் கொள்ளவேணும்
தேறுவது மனதறிவால் தேறவேணும்
திறமாக வாசிசிவ யோகம்வேணும்
நேறுவது சிவயோகத் திருந்துகொண்டு
நெற்றியென்ற மத்தியிலே நினைவைவைத்து
சேறுவது அந்தரமே கெதியென்றெண்ணித்
தீர்க்கமுடன் சோதியைநீ திறமாய்ப்பாரே. 834

**கற்பம்**

திறமாக நிற்பதற்குக் கற்பமொன்று
தீர்க்கமுடன் சொல்லுகிறேன் திறமாய்க்கேளு
உறமான காயமடா பெருங்காயந்தான்
உத்தமனே உலகமதி லார்தான்காண்பார்
பரமான காயமடா சோமனாதி
பத்தியுட னாதியென்ற காயம்வாங்கி
அரமான கரமதனாற் பாகம்பண்ணி
அதுக்குநிகர் காரமுடன் பூரஞ்சேரே. 835

சேரப்பா மூன்றுகரு வொன்றாய்ச்சேர்த்து
திறமான பாண்டமதி லிட்டுமூடி
காரப்பா சமாதியிலே வைத்துமைந்தா
கருணையுடன் மண்டலஞ் சென்றெடுத்துப்பாரு
வீரப்பா கொண்டதுவும் நீருவற்றி
விசையான மெழுகதுபோல் நிற்கும்பாரு
தேரப்பா மனதறிவால் மெழுகெடுத்து
சிவசிவா கல்வமதில் நன்றாயாட்டே. 836

ஆட்டிநன்றாய்ப் பின்னுமந்தப் பாண்டத்திட்டு
அப்பனே கற்பூரப் பொடிமேற்றூவிப்
பூட்டியந்த வாய்மூடிச் சமாதுவைத்து
புண்ணியனே ஆதியந்தத் தயிலம்வாங்கி
சூட்டியந்தத் தயிலமதை மெழுகிற்சேர்த்து
சுத்தமென்ற பிங்கான்றன் பரணிக்குள்ளே
தாட்டிகமாய்த் தானடைத்துப் பதனம்பண்ணிச்
சற்குருவைப் பூரணமாய்த் தியானஞ்செய்யே. 837

செய்யடா பூரணமே தெய்வமென்று
தீர்க்கமுடன் நித்தியமுந் தியானம்பண்ணி
மெய்யடா தவறால் மெய்யாய்நின்று
மெஞ்ஞான பூரணமே கியத்தைமைந்தா
கையடா தவறாமல் மைந்தாநீயும்
கருணையுடன் பணவிடைதான் கையில்வாங்கி
மைய்டா மூலநந்திக் கறிவித்தேதான்
மார்க்கமுட னந்திசந்தி கொண்டுதேறே. 838

தேறுவதுக் கேதுவான மார்க்கங்கொண்டு
திடசித்த மானதுவே யோகமார்க்கம்
நேறுவது சிவயோக மார்க்கத்தேகி
நிலையான பூரணத்தைக் கொள்ளும்போது
ஏறுவதுக் கேதுவான வாசிதானும்
இருதயமே குடியாக யிருந்துவாழும்
சேருவது இடமறிந்து சேர்ந்தகொண்டால்
சிவசிவா தேகமது திறக்கும்பாரே. 839

திறப்பதென்ன தேகமடா மாயவாழ்வு
தீர்க்கமில்லா வாழ்வதுவைச் சிலதுபேர்கள்
பார்ப்பதற்கு வேதாந்த நூலைப்பார்த்து
பாவிகள்தா னறுசுவையோ டன்னங்கொண்டு
மறப்புடனே உறக்கமதால் மாண்டுபோனார்
மாண்டகுறி யறியாத மக்கள்கேளு
சிறப்புடனே கல்நகண்டால் கல்லைமாட்டு
சிவசிவா மற்றதெல்லாம் திறமாகாதே. 840

திறமான வீடதுதான் சாயும்போது
சிவசிவா அதற்குமொரு முட்டுக்கால்தான்
உறமாகத் தான்கொடுத்து நிறுத்தும்போது
உத்தமனே அந்தமனை திறமாம்பாரு
அறமான வாக்கியமடா முன்னோர்சொன்ன
அப்பனே யினத்தோடே யினஞ்சேருமென்று
பறமான வாக்கியமடா வேதவாக்கியம்
பகுத்தறிவாற் சொல்லுவது பதிவாய்க்காணே. 841

காணவே மண்ணுடனே மண்ணுசேரும்
கசிவான தண்ணியுடன் தண்ணீர்சேரும்
பேணவே தீயுடனே தீதான்சேரும்
பிலமான வாயுவிலே வாய்வுசேரும்
ஊணவே ஆகாசமித் தனைக்குஞ்சாட்சி
உத்தமனே மனதறிவால் கண்டுகொண்டு
தோணவே நின்றதினால் மைந்தாகேளு
சுகமாகுஞ் சுகமாகுஞ் சுகத்தைப்பாரே. 842

பாரப்பா லோகாதி லோகமெல்லாம்
பதிவான பரமசுக மறியாமல்தான்
வீரப்பா கொண்டதொரு பயிரைமைந்தா
வேசைமக னாசைகொண்டு தின்றுதின்று
நேரப்பா நின்றவழி யறியாமல்தான்
நிலைமறந்து போகுதடா உலகுவாழ்வு
ஆரப்பா அறிவார்கள் உலகவாழ்க்கை
அறிவாளி கோடியிலே ஒருவன்றானே. 843

ஒருவனவன் உலகமெல்லாந் தானாய்நின்று
உத்தமர்க்கு உற்றதுணை யாவானப்பா
சிறுவனவன் செகசாலந் திறமாய்ச்செய்வான்
சிற்றின்பம் பேரின்பம் ரெண்டுங்காண்பான்
குருவசன மறவாம லருளைக்காண்பான்
குணமாகும் வேதைமுறை யதிகஞ்செய்வான்
பருவமுடன் சகலசரா சரங்களெல்லாம்
பத்தியுடன் தன்னுயிர்போல் பார்ப்பான்பாரே. 844

## அயக்களங்கு செந்தூரம்

பாரப்பா பரமகுரு செந்தூரந்தான்
பாலகனே சொல்லுகிறேன் பதிவாய்க்கேளு
நேரப்பா அயமுடனே பூரஞ்சேர்த்து
நிசமான வெள்ளிதங்க மொன்றாய்க்கூட்டி
சேரப்பா குகைதனிலே யடைத்துமைந்தா
திருவான காரமிட்டு உருக்கும்போது
காரப்பா உருக்குமுகந் தன்னைப்பார்த்து
கருணையுடன் தாளெடுத்துக் குளிரவையே. 845

வைத்ததொரு அயக்களங்கைக் கல்வத்திட்டு
மார்க்கமுட னதற்குநிகர் கெந்திவீரம்
மெய்த்ததொரு தாரமுடன் கெவுரிலிங்கம்
விபரமுடன் தான்கூட்டிப் பொடித்துமைந்தா
கைத்ததொரு காசியென்ற குப்பிக்கேத்தி
தன்மையுடன் சீலைமண்ணுந் தயவாய்ச்செய்து
உத்ததொரு பாண்டமதைச் சாம்பலிட்டு
உண்மையுடன் குப்பிதனை நடுவில்வைய்யே. 846

வையப்பா குப்பிதனை நடுவேவைத்து
மார்க்கமுடன் மேலுமந்தச் சாம்பலிட்டு
கையப்பா தவறாம லுடுப்பிலேற்றி
கருணையுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
மெய்யப்பா சருகுகம்பு விரகாலந்த
மேன்மைபெற யிருசாமந் தீயைமூட்டி
பொய்யப்பா போகாமற் பதத்தைப்பாரு
புத்தியுட னாவிகண்ட லிறக்கிப்போடே. 847

இறக்கிமிகக் குப்பிதனை யெடுத்துப்பாரு
இன்பமுட னுருகியொரு வட்டாய்நிற்கும்
திறக்கஅந்த வட்டதனை யெடுத்துமைந்தா
தீர்க்கமுட னாகரசம் நாலிலொன்று
திறக்கஅந்தச் சரக்குடனே கெந்திகூட்டி
நேமமுடன் கல்வமதில் பொடித்துமைந்தா
உறக்கவொரு குப்பிதனி லடைத்துக்கொண்டு
உத்தமனே முன்போலே மண்தான்செய்யே. 848

செய்யடா மண்சீலை சிறக்கச்செய்து
செம்மையுடன் சிவாயகுரு பதமேபோற்றி
மெய்யடா முன்போலே பாண்டத்திட்டு
மேன்மைபெற அடுப்பேற்றித் தீயைமூட்டி
கையடா பதறாமல் நாலுசாமம்
கமலங்கா டாக்கினியா யெரித்துப்பார்க்க
பொய்யடா போகாது மைந்தாகேளு
பூரணமாய்ச் சமைந்துசெந் தூரமாச்சே. 849

ஆச்சப்பா செந்தூர மென்னசொல்வேன்
அரகரா ஆதியந்த அருமையாலே
மூச்சப்பா தானொடுங்கி அருணன்போலே
முடிந்திருந்த செந்தூரம் பதனம்பண்ணி
பாச்சப்பா தேகமதில் செந்தூரத்தை
பத்திகொண்டு பணவிடைதா னித்தங்கொண்டால்
போச்சப்பா பொல்லாத நோய்களெல்லாம்
பொன்னிறப்போற் தேகமது புனிதமாமே. 850

புனிதமுள்ள செந்தூரந் தன்னைமைந்தா
போதமய மானகுரு தன்னைப்போற்றி
அனிதமுள்ள செம்பினிலே நூற்றுக்கொன்று
அப்பனே தான்கொடுத்து உருக்கிப்பார்க்க
கெணிதமுள்ள தங்கமடா யென்னசொல்வேன்
கேள்வியென்ன பதினாறு வயதேயாகும்
மணிகரண நாதமடா மங்காத்தங்கம்
மகத்தான தங்கமதை மகிழ்ந்துபோற்றே. 851

போற்றிமனங் கொண்டுநின்ற செந்தூரத்தை
புத்தியுடன் வெள்ளியிலே நூற்றுக்கொன்று
பார்த்திபனே தான்கொடுத்து உருக்கிப்பாரு
பசுமையுள்ள தங்கமடா அதிகக்காந்தி
கார்த்துமனக் கண்ணாலே காந்திதன்னை
கண்குளிரப் பார்த்துமனங் கனிந்துகொண்டால்
நேத்திரத்திற் பேரொளிபோல் சிவயோகத்தில்
நின்றநிலை தவறாது அண்டத்தேறே. 852

அண்டமதைக் கண்டுகரை யேறுதற்கு
அகாரமுட னுகாரமதை யறிந்துகொண்டு
கண்டபடி கண்குளிரக் கொண்டாயானால்
கருவான வாசியடா உருவிற்தங்கும்
மண்டலங்கள் மூன்றுமொன்றாய் நின்றஅண்டம்
வகையுடனே கண்டுகரை யேறலாகும்
விண்டபடி அண்டமதி லேறிக்கொண்டு
மெஞ்ஞான பூரணத்தில் விரும்புயுண்ணே. 853

உண்ணுவது வாசியினா லுண்ணவேணும்
உறங்குவது பூரணத்தி லுறங்கவேணும்
எண்ணுவது சடாட்சரத்தை எண்ணவேணும்
ஏகாந்த மானசிவ யோகம்வேணும்
விண்ணுலகந் தன்மயமாய்க் காணவேணும்
வேதாந்த சாஸ்திரத்தைப் பார்க்கவேணும்
கண்ணிமன மொன்றாக நிற்கவேணும்
கற்பூர தீபமதைக் கலந்துகொள்ளே. 854

கொள்ளடா அகாரமொடு உகாரம்ரெண்டும்
கொண்டுகரை யேறினபின் மகாரந்தன்னை
நில்லடா பூரணமே கெதியென்றெண்ணி
நிசமான மவுனமென்ற பீடந்தன்னில்
செல்லடா மூலமென்ற வாசியாலே
சென்றுசிவ யோகமதில் தீர்க்கமானால்
உள்ளடா விளக்கொளிபோல் சோதியாச்சு
உற்றகலைக் கியானமென்ற தீபந்தானே. 855

தானென்ற உலகமெல்லாந் தான்தானாகி
தன்மயமாய் நின்றதொரு தீபந்தன்னை
வானென்ற அண்டமதில் நின்றுகாண
வகையுனக்குத் தெரியாட்டா லென்னசெய்வோம்
ஊனென்ற காயமதை உறுதியாக
உண்மையுடன் கண்டுகொண்டு நின்றாயானால்
கோனென்ற குருபதியின் தீபந்தானும்
கொழுந்துவிட்டு யெரியுதடா கூர்ந்துபாரே. 856

பாரப்பா மனக்கண்ணால் கூர்ந்துபார்க்க
பத்தியுனக் கில்லையடா பகரக்கேளு
நேரப்பா நின்றநிலை கண்டுஅந்த
நிலையறிந்து வாசியைநீ நிறுத்திக்கொண்டு
வீரப்பா தானொடுங்கக் கனலையூத
வெகுசுருக்காய் முத்தீயு மொன்றாய்நின்று
ஊரப்பா ஒருநொடியில் முத்தீபாய்ந்து
ஓமுடியும் போதுமுடி யடியைப்பாரே. 857

பாரடா அடிநடுவு முடியொன்றாக
பத்திகொண்டு ஊடுருவிப் பார்க்கும்போது
நேரடா கண்டதொரு வெளியுமாச்சு
நிசமான பூரணமும் வெளியுமாச்சு
சாரடா வாசிநிலை வெளியுமாச்சு
சத்தமென்ற நாதவிந்து வெளியுமாச்சு
மேரடா அண்டரண்டம் வெளியுமாச்சு
வேதாந்த தீபநிலை வெளிதான்காணே. 858

காணவே கண்கண்ட வெளியினுள்ளே
காட்சியென்ற சூட்சமொன்று கருதக்கேளு
பூணவே மலைப்புடவு வனங்கள்தன்னில்
பொருந்திமனங் கொண்டுதவஞ்செய்யும்போது
பேணவே வியாக்கிரம ரிஷிதானப்பா
பெரிதான வியாக்கிரமந் தன்னிலேறி
தோணவே விளையாடி வரும்போதய்யா
சுகமாகக் கண்டுமிக அடுத்தேன்பாரே. 859

### வியாக் கிரம ரிஷி

அடுத்துமிக இருவருஞ்சென் றிருக்கும்போது
அருள்பெருகும் வியாக்கிரம ரிஷியைப்பார்த்து
கடுத்ததொரு மிருகமதை யடக்கிநீரும்
கருணையுட னேரிவந்த கதைதானென்ன
விடுத்துமிகச் சொல்லுமென்று கேட்டபோது
வியாக்கிரமர் மனமகிழ்ந்து விண்ணைநோக்கி
தொடுத்தகும்பந் தனிற்பிறந்த அகத்தியாகேள்
சொல்லுகிறேன் மந்திரத்தின் சூட்சந்தானே. 860

### மிருகம் வாய் கட்ட

தானென்ற சூட்சமதைச் சொல்லக்கேளு
தன்மையுடன் ஓம்றீங் அம்மேன்றேதான்
வானென்ற கேசரியில் மனதைவைத்து
மார்க்கமுடன் தானினைத்து முன்னேயூது
ஊனென்ற வல்மிருகம் அலகுகட்டி
உத்தமனே உனதிடமா யொடுங்கிநிற்கும்
கோனென்ற குருவருளால் கம்சிம்மென்று
குதித்துமிகத் தானேறி யிருந்துகாணே. 861

இருந்துமனங் கொண்டுவிளை யாடிமைந்தா
இறங்கிமிக ரும்சீயென் றதட்டிச்சொல்லு
முறிந்துமிகத் தானோடிப் போகுமைந்தா
முத்தியுடன் தன்பதியிற் தானேசென்று
அருந்தவமாய்த் தவசிருந்து தவமேகொண்டால்
அடங்காத சித்துவெகு உறுதியாகும்
தெரிந்துகொள்ளு அகத்தியமா முனியேயென்று
சீக்கிரத்தில் வியாக்கிரமற் சென்றார்காணே. 862

காணவே புலத்தியமா ரிஷியேஅய்யா
கருணையுட னீயுமந்தப் படியேபார்த்து
பேணவே ஆனந்த விளையாட்டாடி
பெரிதான புத்தியினாற் தன்னைக்கண்டு
தோணவே வாசியென்ற சர்ப்பமேறி
சுத்தமுட னட்டதிசை சுத்திப்பின்பு
பூணவே மனதுகந்து யிடத்திற்சென்று
புத்தியுட னாதார மூலம்பாரே. 863

பாரப்பா ஆதார மூலமான
    பத்தியுள்ள மந்திரமிது வெளியிடாதே
காரப்பா மூலமென்ற யிடத்திலேதான்
    கண்ணான கண்ணுமனக் கண்ணுங்கொண்டு
நேரப்பா நின்றயிடந் தன்னைப்பார்த்து
    நிலையறிந்து வாசியைநீ நிறுத்தினாக்கால்
மேரப்பா மேருகிரி அண்டந்தன்னில்
    வேதாந்தச் சோதிவெகு விலாசங்காணே. 864

காணப்பா விலாசமென்ற கருணைதன்னை
    கண்குளிரச் சொல்லுகிறேன் கண்தான்மைந்தா
பூணப்பா கண்ணுமனக் கண்ணுங்கொண்டு
    பூமிமுத லாகாசம் நன்றாய்ப்பாரு
தோணப்பா கண்ணடங்கா விண்ணைப்பார்க்க
    தொல்லுலகம் மேலுலகம் நன்றாய்த்தோணும்
பேணப்பா கண்மறைந்தால் விலாசம்போச்சு
    பெரிதான பூரணத்தி லிருந்துபாரே. 865

## நாகரச வேதை

பாரப்பா யிருந்துமிக யோகஞ்செய்ய
    பரிவான நாகரச வேதைகேளு
வீரப்பா வெடியுப்புச் சுண்ணநீரில்
    வேகமர நாகமதை யுருக்கிச்சாய்க்க
சீரப்பா ஐந்துதர முருக்கிச்சாய்த்தால்
    சிவசிவா சீறடங்கிக் கட்டும்பாரு
காரப்பா கண்ணடங்கிக் கட்டிநின்ற
    கருவான நாகமதை உருக்கிக்காணே. 866

காணவே ரசமதனைப் பழச்சாற்றுள்ளே
    கருணையுடன் விட்டுநன்றாய் யடுப்பிலேற்றி
பேணவே தீயெரித்து வற்றினாக்கால்
    பேசாத மௌனரசங் கட்டிப்போகும்
தோணவே நாகமுடன் ரசத்தைச்சேர்த்து .
    சுத்தமுடன் தானுருக்கி யெடுத்துக்கொண்டு
ஊணவே அயமுடனே பூரஞ்சேர்த்து
    உறுதியுடன் குகையிலிட்டு உருக்கிக்கேளே. 867

கேளப்பா அயமுருகும் போதிலேதான்
கிருபையுள்ள நாகரசங் கூடச்சேர்த்து
வாளப்பா நாகரசங் கூடச்சேர்த்து
வரிசையுட னுருகையிலே தங்கஞ்சேரு
ஆளப்பா தங்கமுட னெல்லாங்கூட்டி
அப்பனே வீரடங்கி உருகிநல்ல
காலப்பா கொண்டுகலை யேறிநல்ல
கருவான களங்கமதைக் கண்ணால்காணே. 868

கண்ணான களங்கமதை யெடுத்துமைந்தா
கருவான வெள்ளிசெம்பு பத்துக்கொள்று
ஒன்னான களங்கமதை யொன்றுகூட்டி
உத்தமனே ஒருமனதா யுருக்கிப்பாரு
பொன்னான பொன்வயதை என்னசொல்வேன்
புத்தியுட னெட்டுரெண்டும் பத்தாய்நிற்கும்
விண்ணான தசதீட்சை பெற்றதாயை
விரும்பியவள் பாதமதைப் பூசைபண்ணே. 869

பண்ணப்பா பூசைமுறை யார்தான்காண்பார்
பாரிலே பலசாதிப் பயல்கள்கூடி
கண்ணப்பா கண்ணொளியைக் கண்டோர்போல
கள்ளரக்கு மீனிறைச்சி கதிக்கவைத்து
உண்ணப்பா உண்டுசதை பெருக்கவேதான்
உடையாளி வந்தாப்போற் கண்ணைமூடி
எண்ணமப்பா பலநினைவை யெண்ணியெண்ணி
இருந்தியிடந் தெரியாமல் மயங்குவானே. 870

மயங்குவான் மனநிலையை யறியாமறதான்
மாண்டிறந்த கள்ளிறைச்சி மயக்கத்தாலே
தியங்குவான் தெருத்தோறும் நாய்போல்மைந்தா
திறமறியாப் பாவிகள்தான் மெத்தவுண்டு
நயங்குவிந்து அவர்களிடம் பேசவேண்டாம்
நாதாந்த பூரணத்தை நயந்துகொண்டு
இயங்குகின்ற வாசியிலே மனதைவைத்து
இருசுடரு மொன்றான இடத்தைப்பாரே. 871

பாரப்பா மனங்குவிந்த இடத்தைநன்றாய்
பத்திகொண்டு பூரணமாய்ப் பார்க்கும்போது
நேரப்பா நின்றநிலை தன்னிலேதான்
நின்றிலங்கும் அறிவான தீபந்தீபம்
காரப்பா கமலவிழிக் கண்ணால்பார்க்க
கருவுனக்கு யில்லையடா காலைப்பாரு
தேரப்பா காலறிந்து நிலையிற்நின்றால்
செடத்தோட பூரணத்திற் சேரலாமே. 872

## கருநெல்லி வெண்சாரை

சேரப்பா பூரணத்திற் சேர்ந்துகொள்ளத்
திறமுனக்குச் சொல்லுகிறேன் செம்மையாக
மேரப்பா சதுரகிரி யடிவாரத்தில்
வேதரிடி மடபதிக்கு மேலதாக
சாரப்பா அங்கேயொரு குகைதானுண்டு
சங்கையுடன் அங்குகையில் தானேசென்றால்
பேரப்பா பெற்றகரு நெல்லியுண்டு
பிலமான சயிலமென்ற சுனைதான்காணே. 873

காணவே கொண்டுமன மங்கேசென்று
கருநெல்லிப் பழமருந்திச் சுனைநீர்கொண்டால்
பேணவே வாசியது பிலமாய்நிற்கும்
பிறளாமற் தேகவச்சிர காயமாகும்
ஊணவே தேகவச்சிர காயமானால்
உண்மையுடன் ரவிமதியு மொன்றாய்நின்று
பூணவே சுழினையென்ற கமலமீதில்
புத்தியுடன் பூரணமாய் வாழலாமே. 874

## வங்கரசக்குரு

வாழ்வதற்கு யின்னமொரு கருவைக்கேளு
மார்க்கமுடன் வங்கரச மொன்றாய்ச்சேர்த்து
ஆழ்வதற்கு அந்தநிரை சாரங்காரம்
அப்பனே நால்சரக்குங் கல்வத்திட்டு
மாழ்வதற்குப் பழச்சாற்றல் மைபோலாட்டி
மார்க்கமுடன் நாகமதிற் கங்கிபூட்டி
சூழ்வதற்கு மண்சீலை வலுவாய்ச்செய்து
சுகமாக நிதானமாய்ப் புடத்தைப்போடே. 875

போடப்பா நிறையறிந்து புடத்தைப்போட்டால்
    போட்டபுட மாறினபின் னெடுத்துப்பாரு
சூடப்பா தானேறி நாகங்கட்டி
    சுத்தமுடன் கண்ணடங்கி நிற்கும்பாரு
தேடப்பா வெள்ளிசெம்பு தங்கமூன்றும்
    செம்மையுடன் குகையில்நின்று உருகும்போது
நாடப்பா கட்டிநின்ற நாகந்தன்னை
    நன்மையுடன் னந்தியிடை சேர்த்துக்காணே. 876

சேர்த்துநன்றாய்க்காரமிட்டு உருக்கிப்பார்க்க
    திருவான நால்பதமு மொன்றாய்க்கூடி
ஆத்துமத்துக் குயிரான குருவாய்நிற்கும்
    அப்பனே நாதகுரு தன்னைவாங்கி
மாத்ததிக மாவதற்கு வெள்ளிசெம்பு
    மக்களே ரெண்டுமொன்றாய்ப் பத்துக்கொன்று
கார்த்துநன்றாய் நாககுரு வொன்றுபோட்டால்
    கண்ணான சோதிவெகு தங்கமாமே. 877

தங்கமென்ற மாதுஅப ரஞ்சித்தாயைச்
    சங்கையுடன் பொற்கமலந் தன்னில்வைத்து
அங்கமுடன் மான்தமாய்ப் பூசைசெய்து
    அவள்பதமே கெதியெனவே அருட்கண்மேவி
எங்குநிரா மயமான சோதியென்று
    இன்பமுடன் சிவயோகத் திருந்தாயானால்
மங்காது வாசியது யெங்குந்தானாய்
    மகத்தான கேசரியில் வாழலாமே. 878

ஆமப்பா கேசரியே ஆதிபீடம்
    அடங்காத வாசிநிறைந் திருக்கும்பீடம்
வாமப்பால் பூரணமாய் நின்றபீடம்
    மகாமந்திர மானதொரு மவுனபீடந்
தாமப்பா தானவனாய் நின்றபீடம்
    சச்சுதா னந்தமய மானபீடம்
சோமப்பால் வெளியொளியாய் நின்றபீடம்
    சுத்தமய மானசிவ பீடந்தானே. 879

பீடமென்ற மந்திரமாம் பீடந்தன்னில்
பிரணவமாய் நின்றதொரு தீபந்தானும்
மாடமென்ற மேருகிரி தீபம்போலே
வரிசையுடன் காணுதடா மவுனஞானம்
கூடமென்ற ஆதாரந் தன்னிலேதான்
குவிந்துமனங் கோணாமல் நின்றுபாரு
ஆடமென்ற சக்கரங்க ளாறுமொன்றாய்
அசையாம லாடுதடா அங்கேபாரே. 880

அங்கேபா ரென்றமொழி யெங்கேயென்றால்
அடிமுடிக்கம் நடுவான ஆதாரத்தில்
எங்குநிரா மயமான சோதிமூலம்
ஏகாந்த மூலமடா முக்கோணத்தில்
சங்கையில்லாச் சோதிவெகு சூட்சந்தன்னை
தன்மயமாய் நின்றதிரு நயனத்தாலே
மங்களமாய் நின்றகுறி தன்னைப்பார்க்க
மகாமந்திர பூரணத்தின் வரிசைதானே. 881

## துருசுச் சுண்ணம்

வரிசையுடன் னின்னமொரு வேதைமார்க்கம்
வகையுடனே சொல்லுகிறேன் வணங்கிக்கேளு
உரிசையென்ற லவணமடா உப்பதொன்று
உருகிநின்ற வங்கரசந் துருசுவீரம்
கரிசலென்ற உப்புடனே ஒன்றாய்க்கூட்டி
கல்வமதில் காம்சலம் விட்டுஆட்டி
புரிஷமுட னுருட்டியதை வட்டுப்பண்ணி
புத்தியுடன் ரவிதனிலே காயப்போடே. 882

போடப்பா ரவிதனிலே நன்றாய்க்காய்ந்தால்
புனிதமுட னோடில்வைத்து மண்ணுஞ்செய்து
சூடப்பா பிலப்பதற்குப் புடத்தைபோடு
சுண்டிமிகக் கட்டியது சுண்ணமாகும்
நாடப்பா சுண்ணமதை வைத்துக்கொண்டு
நன்மையுடன் வாய்நீரா லரைத்துக்கொண்டு
தேடப்பா பச்சையென்ற துருசுதன்னை
திறமான கட்டியொன்று வாங்கிக்கேளே. 883

கேளப்பா வாங்கினதோர் துருசுமேலே
கேள்வியென்ன சுண்ணமதைக் கவசம்பண்ணி
சூளப்பா அதின்மேலே மண்ணுஞ்செய்து
சுத்தமுடன் சற்குருவைத் தியானம்பண்ணி
ஆளப்பா நிதானமதாய்ப் புடத்தைப்போட்டு
ஆதிகுரு பூரணமென் றடிபணிந்து
வாளப்பா புடமாறி யெடுத்துப்பாரு
வாக்கடங்காக் காரமடா சுண்ணந்தானே. 884

சுண்ணமென்ற கவசத்தோ டெடுத்துநல்ல
துப்புறவா யோட்டில்வைத்து நீரைக்குத்து
நன்னயமாய்க் கவசமது பொங்கிநீறி
நாதாந்த துருசுவெகு காரமாகும்
என்னசொல்வேன் காரமென்றால் வாய்தான்வேகும்
என்மகனே பாடாண முழுதும்நீறும்
மண்ணுமுதல் விண்ணுவரை நன்றாய்நீறும்
மகத்தான துருசுசுண்ண வேகந்தானே. 885

வேகமென்ற துருசுசுண்ணந் தன்னைவாங்கி
வேதாந்த ரசமதிலே பத்துக்கொன்று
பாகமென்ற சுண்ணமதை மேலேபோட்டு
பத்தியுடன் தண்ணீரைக் குத்திப்பாரு
ஆகமென்ற சுண்ணமதின் வேகத்தாலே
அடங்காத ரசமதுவுங் கட்டிநீறும்
ஏகமென்ற அமுர்தரச சுண்ணந்தன்னை
இன்பமுட னதற்கிரட்டி ரசத்தைக் கூட்டே. 886

## ரசமணி

கூட்டிரெண்டு மொன்றாக அமுர்தம்விட்டு
கூர்மையுடன் மத்திக்கும் போதிலேதான்
ஆட்டிநின்ற ரசமதுவு மடங்கிமைந்தா
அருமையுள்ள மெழுகதுபோ லிருகிநிற்கும்
சூட்டியந்த ரசமெழுகைக் கையில்வாங்கி
சுத்தமுட னுருட்டியொரு மணிபோற்செய்து
தாட்டியமா யம்மணியை மைந்தாகேளு
சம்பழத்தி னுள்ளமுத்தித் தன்னைப்பாரே. 887

தன்னைத்தா னறிந்துமனக் கண்ணால்பார்க்க
சம்பழத்தி னுள்ளிருந்த மணிதானப்பா
விண்ணைத்தா னொக்கும்வெளி சோதிபோலே
வேதாந்த ரசமணிதா னிருகிப்போகும்
உண்ணத்தா மனமிருகு மணியையப்பா
உண்மையுடன் சிவயோகத் திருக்கும்போது
கண்ணைத்தா னோக்கிமனக் கனிவால்மைந்தா
கருணையுட னாவடக்கஞ் செய்துகொள்ளே. 888

கொள்ளப்பா நாவடக்கஞ் செய்துகொண்டு
குருவான பதிநோக்கி யிருந்தால்மைந்தா
மெள்ளப்பா சடத்தோட வாசிதூக்கி
வேகமென்ற லகிரிவெகு போதையாகும்
சொல்லப்பா தவறாத போதையாகும்
சொக்கிமனந் தளராத அறிவானத்தம்
நல்லொப்பாய் நின்றஅரி வானந்தத்தில்
நன்மையுட னினைத்தபடி நாடலாமே. 889

நாடெல்லாஞ் சென்றுவலம் வந்தாலென்ன
நாதாந்த ரசமணிதா னில்லாவிட்டால்
வீடெல்லாந் தளன்றுகுரு காணாதப்பா
வேதாந்த வாசியது நிலைநில்லாது
சூடெல்லா மங்கியந்தச் சுழியிற்சென்று
சுழன்றுமன மலைவாகித் தூங்கலாகி
காடெல்லாஞ் செத்தசவம் போற்திரிந்து
கண்மணியைக் காணாமல் அலைவான்பாரே. 890

பாரப்பா மனமலைந்து போகாமற்றான்
பதிவான துருசுரசச் சுண்ணத்தாலே
சாரப்பா யேமரசஞ் சுண்ணமாச்சு
சதாகோடி வேதைமுகங் காணலாச்சு
காரப்பா வேதைமுகங் கண்டதாலே
காரணமாய்ச் சித்துரெம்ப ஆடலாகும்
சீரப்பா சகலசித்துந் தானேயாடிச் -
சிவஞான பூரணத்திற் தெளிவாய்நில்லே. 891

தெளிவான தெளிவதுதான் மைந்தாகேளு
 தெளிவான கண்ணுமனக் கண்ணேயாகும்
நெளியாமல் கண்ணுமனக் கண்ணினாலே
 நேர்ந்தபடி தான்திரிந்து நிலையிற்பத்தும்
அளியாத நிலையில்மனம் பத்தும்போது
 ஆனந்த அதிசயங்கள் மெத்தவுண்டு
வழியான துறையறிந்து நடந்துகொண்டால்
 வந்தவழி மார்க்கமது மாயவாழ்வே. 892

மாயமென்ற வாழ்கையடா உலகவாழ்க்கை
 மகாமாய்கை யென்றகுறி யறியாமல்தான்
காயமென்ற கருவறியாக் கர்மிகள்தான்
 காசினியிற் தபோதனர்கள் வாக்கியந்தன்னை
நேயமுடன் தாயகமாய்ப் பாடம்பண்ணி
 நிலையறியாப் பாவிகள்தான் கூடிக்கொண்டு
தாயகமாய் நல்லோரைப் பெரியோரைத்தான்
 தர்க்கமிட்டு உக்கியவன் தலைகாணாரே. 893

தலைகாணாப் பாவிகள்தான் தலைகாலாகத்
 தன்னிலையைத் தானறியாச் சவங்கமாடு
நிலைகாணாப் பதருகள்தான் மெத்தஉண்டு
 நேசமில்லா மூடருட னிணங்க வேண்டாம்
கலையான மந்திரக்கலை வாசியாச்சு
 கமலரச பூரணமே ஆத்மாவாச்சு
அலையாமல் மந்திரகலை வாசியேறி
 ஆத்மாவாம் பூரணத்தி லமுழ்ந்திக்காணே. 894

அளுந்திமனங் கொண்டுறுதி பூண்டுநித்தம்
 அருள்பெருகும் வாலைபத மன்பாய்ப்போற்றி
நெளிந்துமனம் போகாமல் நிதானங்கண்டு
 நிலையறிந்து கலையறிந்து நேமமாக
வளிந்தொழுகும் அமுர்தரச பானந்தன்னை
 வகையறிந்து வழிதுறையாய்ப் பூசைபண்ணி
தெளிந்துகொண்டு மனத்தெளிவாய்த் தெளிந்தாயாகும்
 தெளிவான மாவெழுத்து மகாரந்தானே. 895

மகரமென்ற மவுனமடா விந்துவாச்சு
மகத்தான விந்துநிலை யறிந்துகொண்டு
சிகாரமென்ற வன்னியடா செந்தீயப்பா
சிவசிவா செந்தீயை விந்திற்சேர்த்து
வகாரமென்ற வாசிதனைச் செந்தீப்பற்ற
மார்க்கமுடன் தானூத மகிழ்ந்துபொங்கி
நகாரமென்ற பிருதிவியில் மடிந்துபோச்சு
நடுவாகி வன்னிரெண்டு மேலுமாச்சே. 896

ஆச்சப்பா மென்மேலும் வாலையாகி
அமர்ந்துநிலை தனையறிந்த நாதவிந்து
மூச்சப்பா முடிவான சத்தமாகி
மூவுலகுந் தானறிந்த அமுர்தமாகி
நீச்சப்பா நிலையாத அமுர்தகெங்கை
நிலையறிந்து கரையேறி நிலையைப்பற்றி
பேச்சப்பா சுத்தவெள்ளங் கரைகொள்ளாது
பேச்சடக்குஞ் சூட்சமதை பேணிப்பாரே. 897

பாரப்பா பேணிமனங் கோணாமற்றான்
பாய்ந்துநின்ற கெங்கையடா அமுர்ததாரை
நேரப்பா வழிந்தொழுகும் அப்போதய்யா
நின்றநிலை பேறாமற் கொண்டாயானால்
ஊரப்பா ஆறாறுயெல்கை யொன்று
உத்தமனே அந்தயெல்கை முப்பாழப்பா
பேரப்பா முப்பாழுக் கப்பால்நின்று
பெரும்பாழாய் நின்றதுவும் வெரும்பாழாச்சே. 898

ஆச்சப்பா வெரும்பாழா யமர்ந்தபேச்சு
அகாரமுட னுகாரம்ரெண்டும் அறியாதாலே
பேச்சப்பா மூலவன்னி வாசிகொண்டு
போனவிடந் தெரியாமற் புருவத்தேகி
காச்சப்பா ஆதார முத்தியாலே
கனலெழும்ப ஊதிவிடு வாசியாலே
மூச்சப்பா பேச்சாகி வந்தசத்தம்
முனையறிந்த புருவநடு உச்சம்பாரே.. 899

பாரப்பா உச்சமென்ற உச்சிதானும்
பதிவான அடிநடுவு முடியுமாச்சு
நேரப்பா அடியதுவும் வாய்வதாச்சு
நிசமான நடுவதுவும் தீயும்மாச்சு
மேரப்பா ஆகாசந் தண்ணீராச்சு
மேல்கீழுந் தானாச்சு வேதமாச்சு
காரப்பா வேதமென்ற நாதாந்தத்தை
கருத்துவைத்துக் கண்ணதனால் நன்றாய்க்காணே. 900

நன்றாகக் காண்பதிது நாதாந்தத்தீ
நாலான பூரணமே வேதாந்தத்தீ
ஒன்றான காந்திமதி காந்தியான
உண்மையென்ற சிந்தாந்தி யுந்தியாச்சு
கண்டதொரு உந்தியிலே செந்தீப்பற்றி
கர்மவினை தானொளிந்து கண்முன்னாகி
அண்டகே சரிமாது நின்றசூட்சம்
அகண்டபரி பூரணமா யாதியாச்சே. 901

### வெடியுப்பு செயநீர் கட்டும்வகை

ஆதியென்ற லவணமடா யார்தான்காண்பார்
அப்பனே வளித்துருட்டி வட்டுப்பண்ணி
சோதியென்ற நீலமாங் கம்பியுப்பு
சுத்தமென்ற அமுர்தரச மானஉப்பு
நீதியென்ற அமுர்தரச உப்புவாங்கி
நிசமான நாகரச மொன்றுசேர்த்து
சாதியென்ற சீனமுடன் பூரங்கூட்டி
சங்கையுடன் பழச்சாற்றில் நன்றாயாட்டே. 902

ஆட்டுவாய் கல்வமதில் மைபோலாட்டி
அப்பனே வளித்துருட்டி வட்டுப்பண்ணி
நாட்டுவாய் ரவிமுகத்தில் நன்றாய்க்காய்ந்தால்
நன்மையுடன் மண்சீலை வலுவாய்ச்செய்து
பூட்டுவாய் நிதானமதாய்ப் புடத்தைப்போட்டால்
புண்ணியனே வெந்ததுவுஞ் சுண்ணமாச்சு
தாட்டிகமாய்ச் சுண்ணமதை வாங்கிமைந்தா
சங்கையுடன் நாலிலொன்று சாரஞ்சேரே. 903

சேர்த்துமிகப் பீங்கானில் வைத்துநல்ல
சிவசிவா பணியில்வைக்க செயநீரச்சே
போர்த்தியந்தச் செயநீரை வாங்கிமைந்தா
புண்ணியனே வீரமதைப் பொடித்துத்தூவ
பார்த்திபனே நீரதுவுஞ் சிவந்துபோகும்
பக்குவமாய் அந்நீரைப் பதனம்பண்ணி
கார்த்துநன்றாய்ச் சரக்குகளிற் சுருக்குப்போட்டால்
கனகமது போலதுவுங் கட்டும்பாரே. 904

## மெழுகு வகைச் செயநீர்

பாரப்பா கட்டும்வகை செயநீர்சொன்னேன்
பதிவான மெழுகுவகைச் செயநீர்கேளு
காரப்பா கம்பியுப்பு துருசுகூடன்
கருவான துத்தமுடன் அன்னபேதி
நேரப்பா சரக்குவகை அஞ்சுங்கூட்டி
நிசமான கல்வமதில் பழச்சார்விட்டு
தேரப்பா மையதுபோல் நன்றயாட்டி
திறமாக உருட்டியதை வட்டுப்பண்ணே. 905

பண்ணப்பா ரவியதனை வட்டுப்பண்ணி
பத்தியுடன் புடம்போட்டு எடுத்துப்பார்க்க
விண்ணப்பா நிறைந்ததோரு சுண்ணமாச்சு
வேதாந்தச் சுண்ணமதைப் பதனம்பண்ணி
முன்னப்பா நிறைந்தசுண்ணத் திடைதான்சாரம்
முத்தியுடன் கூட்டிநன்றாய்ப் பொடித்துக்கொண்டு
உண்ணப்பா பீங்கானி லிட்டுமைந்தா
உறுதியுடன் பனியில்வைக்க செயநீராச்சே. 906

ஆச்சப்பா செயநீரை வாங்கிமைந்தா
அறுபத்து நாலுவகைச் சரக்குக்கெல்லாம்
மூச்சப்பா தானடங்கச் சுருக்குப்போட்டால்
முத்தியுள்ள பாடாண மெழுகாய்நிற்கும்
நீச்சப்பா சரக்குவகை மெழுகேயானால்
நிமிடமென்ற வேதையடா கண்கொள்ளாது
பேச்சப்பா அடங்கிநின்ற தலத்தைப்பாரு
பெலமாகப் பூரணத்தைக் கண்டுகொள்ளே. 907

## பூரணச் செயநீர்

கண்டுகொள்ளப் பூரணத்தின் செயநீர்கேளு
கம்பியுடன் சூடனது சரியாய்ச்சேர்த்து
கொண்டுமிக அதுக்குநிகர் துருசுசேர்த்து
கூர்மையுட னதுக்குநிகர் சாரஞ்சேர்த்து
விண்டபடி கொண்டதனைப் பொடித்துமைந்தா
விபரமுட னின்னமொரு கருவைக்கேளு
அண்டரச பூரணமுங் கொடியுங்கூட்டி
அப்பனே பீங்கானி லமர்த்திக்கொள்ளே. 908

அமர்த்திவைத்த கருவதற்கு அடிமேலப்பா
அன்புடனே சரக்குவகைப் பொடியைத்தூவி
சுமர்த்திநன்றாய்ப் பொடிதூவிச் சீலைசெய்து
சுத்தமுடன் சமாதுதனில் வைத்துப்பாரு
சமர்த்துடனே மண்டலஞ்சென் றெடுத்தாயானால்
சங்கையுள்ள கருவுடனே சரக்கெல்லாந்தான்
குமர்த்திமிகச் தான்கரைந்து தண்ணீராச்சு
குருவான பூரணநீ ரிதுதான்பாரே. 909

பாரப்பா பூரணநீர் தன்னையப்பா
பத்தியுடன் குப்பிதனில் பதனம்பண்ணி
நேரப்பா பாஷாணங் காரசாரம்
நிசமான பூரணநீர் கண்டபோது
வீரப்பா கொண்டதொரு பாடாணமெல்லாம்
விபரமுடன் கட்டியது திட்டமாகும்
தேரப்பா சொல்லுகிறேன் காரசாரம்
திருவான பூரணத்தால் மெழுகுமாச்சே. 910

ஆச்சப்பா கட்டுவகைச் சரக்கெல்லாந்தான்
அப்பனே வேதையிடப் பத்துமாத்தாம்
காச்சப்பா மெழுகுவகைச் சரக்கெல்லாந்தான்
கருணையுடன் வேதையிடப் பதினாறாகும்
நீச்சப்பா நிலையறிந்து வேதைபார்க்க
நிலையான பூரணத்தைக் காணவேணும்
மூச்சப்பா முன்னிலையாய் நிறுத்தவேணும்
முத்திகொண்ட சிவஞான யோகம்பாரே. 911

பாரப்பா யோகியென்றால் பூசைவேணும்
பதிவான சிவமுடனே தியானம்வேணும்
நேரப்பா வாசிசிவ யோகம்வேணும்
நேர்மையுடன் பூரணத்தில் நிற்கவேணும்
சாரப்பா அமுர்தரச முண்ணவேணும்
சங்கையுடன் அகண்டவெளி காணுங்காணும்
காரப்பா குருபதத்திற் கருணைவைத்து
கண்ணுமனக் கண்ணதனால் கனிந்துபாரே. 912

போற்றுவது பூரணத்தால் வழலைச்சுண்ணம்
புத்தியுடன் கண்டறிந்தால் உப்புக்கட்டும்
தேற்றியதோ ருப்பைவிட்டா லொன்றுமில்லை
திருவான பொன்னுருக்கு உப்பேயாதி
பார்த்திபனே ஆதியென்ற வழலைவாங்கி
பத்தியுடன் சுத்தமதாய்ப் பாகம்பண்ணி
நேத்தியுடன் சரக்குவகை யறிந்துகொண்டு
நிலையான நிலைநிறுத்திக் கட்டுவயே. 913

கட்டுவாய் நிலையறிந்து வாசியான
கருவான உப்படங்கக் கட்டினாக்கால்
திட்டமுடன் சரக்குகளை யதட்டிக்கட்டும்
தேகமதுக் காதாரக் கற்பமாகும்
இட்டமுடன் நவலோக இருளைநீக்கும்
ஏகாந்தச் சோதியுட இன்பங்காட்டும்
சட்டமுடன் சாயுட்ச பதவியான
சதுரகிரி யடிவார முடியுமாச்சே. 914

ஆச்சப்பா முடிபூர மடிதான்காரம்
ஆதியந்த மானதொரு அருளைக்கேளு
நீச்சப்பா நிலையாத சாரஞ்சாரம்
நின்றநிலை தவறாத வீரம்வீரம்
காச்சப்பா யிதுநாலும் பூரணத்துக்காதி
கைமுறையாய்க் கண்டறிந்தோ னவனேவாதி
மூச்சப்பா நிலையறிந்து பூரணத்தைக்கண்டால்
முத்தியுள்ள ரசவாதி யென்றும்பேரே. 915

### பெரியோர் மகிமை

பேரப்பா ஆதிரச வாதியென்று
 பேர்பெரிய பேரெடுக்க வருமோசும்மா
வீரப்பா கொண்டதொரு மனம்நிறுத்தி
 வேதாந்த சற்குருவைத் தேடிக்கொண்டு
நேரப்பா நின்றுபதம் பணிந்துகொண்டால்
 நிசமான பிள்ளையென்று நிலையைக்காட்டி
பாரப்பா யென்றுரச வமுர்தமீய்ந்து
 பசைந்தமண்ணுந் தண்ணீருங் காட்டுவாரே. 916

காட்டிநிமை மூடுமுன்னே வாதந்தங்கும்
 கருவான வாசியினால் நயனங்காணும்
நாட்டிநின்ற நயனமதால் சோதிகாணும்
 நாதாந்த பூரணத்தின் விலாசந்தோணும்
பூட்டிநின்ற பூரணத்தின் விலாசத்தாலே
 போதமய மானசிவ யோகங்காணும்
சூட்டிநின்ற சிவ்யோக தீபத்தாலே
 சூட்சமென்ற தேகமது சோதியாச்சே. 917

சோதிமய மானசிவ சூட்சங்கண்டால்
 சுயஞ்சோதி யானசிவ சூட்சத்தாலே
ஆதிரச வாதியென்ற பேருமாச்சு
 ஆனந்த மானசிவ யோகியாச்சு
சாதியென்ற சராசரமுந் தான்தானாச்சு
 சகலகலை பூரணமுந் தன்னுள்ளாச்சு
ஓதியதோர் மந்திரகலை பீடமாச்சு
 ஓம்நமசி வாயமென்ற குருவுமாச்சே. 918

### பாசாண்டி குணம்

ஆச்சப்பா பொற்குருவைக் கண்டோர்க்கெல்லாம்
 அமுர்தரச வாதியென்றே பேருமாச்சு
பேச்சப்பா பேசரிய வம்பர்தானும்
 பேருலகில் ரசவாதஞ் செய்வேனென்று
காச்சப்பா வென்றுகடைச் சரக்கைவாங்கி
 கட்டுமுறை திட்டமென்று கரியில்வைத்து
மூச்சப்பா தானடக்கி ஊதிப்பார்ப்பான்
 மூலவன்றி அக்கினியாற் புகைந்துபோமே. 919

போமப்பா புகைந்துவெகு புகையாய்போகும்
 போனவித மென்னவென்று புலம்பிவாடி
தாமப்பா தனையறியாப் பேயர்கூடி
 சாத்திரத்தை பொய்யென்பான் சவங்கல்மாடு
காமப்பால் கானற்பால் அறியாமற்றான்
 கடிதான பாஷாணப் புகையிற்சென்று
ஓமப்பா வென்றதொரு நயனங்கெட்டு
 ஊதுகின்ற பாசாண்டி தன்னைத்தள்ளே. 920

தள்ளுவது ஆரையென்றால் மைந்தாகேளு
 சத்திசிவ மறியாரைத் தள்ளவேணும்
கள்ளுடனே மீனிறைச்சி யபினரக்கு
 கதிகெட்ட எண்ணெயொடு புளிதாம்பூலம்
மல்லுடனே கோபமொடு உறக்கஞ்சோம்பு
 மருதாரந் தனைவிரும்பல் வஞ்சனைகள்கொடுமை
எள்ளளவு மனந்தனிலே நினையாமற்றான்
 ஏகாந்த பூரணத்தி லிருக்கநன்றே. 921

நன்றாகத் தானிருந்து நன்மையாக
 நல்லவழி துறைதனிலே நாட்டமானால்
அண்டர்தொழும் ரசவாதி யவனேயாகும்
 ஆதிசிவ யோகியென்ற ரூபமாச்சு
சென்றாடுங் கெவுனியென்ற மவுனியாகும்
 செகராச ராசகிரி முடியுமாகும்
உண்டரசந் தனையறிந்து கண்டுகொண்ட
 உரிசையென்ற ரசவாதம் உரிசைதானே. 922

உரிசையுள்ள உப்பறிந்தால் வாதமாச்சு
 உத்தமனே மனமடங்க ஞானமாச்சு
வரிசையுள்ள ரசமெடுத்தால் கெவுனமாச்சு
 மார்க்கமுடன் கெற்பமுண்டாற் சாவுபோச்சு
சரிதைவழி நடவாட்டா லறிவுபோச்சு
 தன்னுணர்வு யில்லாட்டால் யோகம்போச்சு
திருவுருவாய் நின்றதொரு தேசிதன்னை
 தினந்தோறும் பாராட்டால் திரையுண்டாச்சே. 923

### மூலாதாரம்

திறைந்துநின்ற தேகமல்லாம் வெளியுமாச்சு
  தீர்க்கமுள்ள சீவனெல்லாம் வெளியுமாச்சு
உறைந்துநின்ற வாசியெல்லாம் வெளியுமாச்சு
  உற்றகலைக் கியானமெல்லாம் வெளியுமாச்ச
மறைந்துநின்ற மாய்கையெல்லாம் வெளியுமாச்சு
  மகத்தான போதமெல்லாம் வெளியுமாச்சு
நிறைந்துநின்ற தீபமெல்லாப் வெளியுமாச்சு
  நீநானு மென்றதெல்லாம் வெளியுமாச்சு. 924

### பிர்மா விஷ்ணு

வெளியான பரமவெளி தன்னைப்பார்க்க
  வேதாந்த ஆதியென்ற பூமிதன்மேல்
நெளியாமற் தானிருந்து மனதுகூர்ந்து
  நேர்மையுடன் மால்பதியில் நின்றால்மைந்தா
துலையாத ஆகாசம் பூமிமட்டும்
  சொலித்துநின்ற சிவமயமாய்த் தோற்றும்பாரு
மலையாமல் தானிருந்து பார்த்தாயானால்
  மாயமென்ற மாயமெல்லாங் காணலாமே. 925

### ருத்திரன்

காணப்பா ருத்திரனார் மலையில்மைந்தா
  கால்வாசி வாசியென்ற காலையூணி
பூணவே மனமுருக நின்றுபார்த்தால்
  பூமிமுத லாகாச வரைக்குமைந்தா
தோணவே அக்கினியாச் சொலித்துநிற்கும்
  சொலித்துநின்ற அக்கினியிற் சுகமாய்நின்றால்
பேணவே சகலசித்துந் தானேயாடப்
  பிலமான சோதிமய மாகுந்தானே. 926

மயமான சோதிமயந் தானேகண்டால்
  மார்க்கமுடன் அஷ்டசித்து மாடலாகும்
செயமான அஷ்டசித்து மகிமைபெற்று
  சிவசிவா மயேஸ்பரனார் மனையில்மைந்தா
நயமான வாசிதிரு வாசிநாட்டி
  நகாரமுதல் வகாரவரை நன்றாய்ப்பார்த்தால்
சுயமான வாய்வுபிர சண்டமாகச்
  சூழ்ந்த அண்டந் தெரியாமற் சுழற்றும்பாரே. 927

பாரப்பா சுழன்றுநின்ற வாய்வுதன்னில்
பத்தியுடன் நின்றுமனங் கொண்டாயானால்
நேரப்பா நின்றதொரு வாசியாலே
நிலையான சிவயோகம் நிசமாமைந்தா
மேரப்பா மேருகிரி வசியமாகும்
வேதாந்தஞ் சித்தாந்தம் வசியமாகும்
காரப்பா சகலமுமே வசியமாகும்
கடாட்சமுள்ள மயேஷ்பரத்தின் கருணைதானே. 928

கருணையுள்ள மயேஸ்பரத்தி லிருந்துகொண்டு
கடாட்சமுள்ள மனோன்மணியாள் மனையில்சென்று
உருமையுட னின்றுமன தறிவால்பார்த்து
உத்தமனே என்னசொல்வேன் ஒளியின்கண்ணு
அருமையுடன் கண்டதெல்லாம் வெளியுமாச்சு
அண்டசரா சரங்களெல்லாம் வெளியுமாச்சு
வருமையென்ற வருமையெல்லாம் வெளியுமாச்சு (சே.
மகிழ்ந்துகொண்ட மகிழ்ச்சியெல்லாம் வெளிதானாச்

வெளியான விழிமயக்கந் தீர்ந்துதானால்
வெளியறிந்த சட்டமடா திட்டமாகும்
நெளியாமல் திட்டமதின் படியேநின்றால்
நினைத்தப்டி முடிக்கும்வகை யறியலாகும்
அளியாத பேரின்ப வீடேவாய்க்கும்
அவ்வீட்டி லானந்த அமுர்தங்காணும்
தெளிவான ஆனந்த அமுர்தங்கொண்டு
தெளிந்துதெளி வானஉள்ளத் தெளிவில்நில்லே. 930

## உப்பு தீட்சை கட்டு

நில்லப்பா தெளிவறிந்து தெளிவில்மைந்தா
நிசமான உப்பறிந்து யெடுத்துக்கொண்டு
கல்லப்பா தான்கரையத் தெளிவிற்போட்டு
கட்டுமுறை திட்டமதாய்க் காய்ச்சுகாய்ச்சு
மெல்லப்பா யிப்படியே பத்துமுறைகாய்ச்சு
வேதாந்த உப்பதுவுங் கட்டிப்போகும்
உள்ளப்பா உள்ளன்பாய்க் கட்டுமுப்பை
உருக்கும்வகை யுருக்குமுட னுருக்கக்கேளு. 931

உருக்கமுடன் கட்டுமுப்பை யுருக்கக்கேளு
உத்தமனே அதுக்குநிகர் வீரம்பூரம்
பெருக்கமுடன் கட்டுதற்குக் காரங்கூட்டி
பேசாமற் குகையிலிட்டு உருக்கிப்பாரு
திருக்கறவே உருகியது தெளிவாய்நிற்கும்
தெளிந்தமனங் குளிர்ந்தவுடன் மணிபோலாகும்
சுருக்கமுள்ள மணியெடுத்து மைந்தாகேளு
சுகசீவ மானதங்கக் களையைப்பாரே. 932

பாரப்பா களைபொருந்துந் தங்கம்வாங்கி
பக்குவமாய்க் குகையிலிட்டு உருகும்போது
நேரப்பா அதுக்குநிகர் மைந்தாகேளு
நிசமாக உப்புருகு மணியைப்போட்டு
வீரப்பா கொண்டதுவு மொன்றாய்ச்சேர்ந்து
வேதாந்தத் தங்கமது குருவாய்ப்போச்சு
காரப்பா தங்காதிக் குருவைமைந்தா
கார்த்துநின்று அதினுடைய களையைக்காணே. 933

காணப்பா களைபொருந்துங் களையைக்காண
கருவிபரஞ் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
பேணப்பா வெள்ளியிலே பத்துக்கொன்று
பிலமான தங்காதி குருவைச்சேர்த்து
பூணப்பா பொரிகாரந் தன்னால்மைந்தா
புத்தியுடன் சித்தமதா லுருக்கிப்பார்த்தால்
வீணப்பா போகாது வெள்ளிதானும்
வேதாந்த தங்கமயச் சோதியாச்சே. 934

ஆச்சப்பா சோதியென்ற தங்கம்வாங்கி
அப்பனே செம்பிலிட்டுப் பத்துக்கொன்று
காச்சப்பா குகையிலிட்டு உருக்கிப்பாரு
களிம்பான செம்பதுவுங் கருணையாகும்
மூச்சப்பா தானடங்கிக் கருணையான
முத்தியுள்ள தங்கமடா பத்துமாத்தாம்
நீச்சப்பா நிலையான பத்தைப்பார்த்து
நிலையான எட்டுரெண்டுங் கண்டுதேரே. 935

கண்டுகொண்ட யெட்டுரெண்டு மொன்றாய்நின்ற
கருணைவளர் பூரணத்தைக் கனிவாய்மைந்தா
கொண்டுமிக நின்றதினால் வாதஞ்சித்தி
குருவான ஞானமுடன் யோகஞ்சித்தி
அண்டர்பதங் காணுதற்குக் குளிகைசித்தி
ஆனந்த போதமுள்ள அமுர்தஞ்சித்தி
மண்டலங்கள் மூன்றுமொன்றாய் நிறைந்துநின்ற
மகத்தான சோதிபூ ரணஞ்சித்தாமே. 936

சித்தான சித்துகளும் பூரணத்தினாட்டு
திறவான வாசியதும் பூரணத்தினாட்டு
முத்தான சிவயோகம் பூரணத்தினாட்டு
மோகமென்ற ஆசையெல்லாம் பூரணத்தினாட்டு
வித்தான சராசரமும் பூரணத்தினாட்டு
விளைவதுவு மளிவதுவும் பூரணத்தினாட்டு
சுத்தான சுழியதுவும் பூரணத்தினாட்டு
சோதிமய மானதெல்லாம் பூரணத்தினாட்டே. 937

ஆட்டமென்ற சக்கரந்தான் விந்துவட்டம்
அடங்கிநின்ற நாதமடா ரவியானந்தம்
வாட்டமில்லா ரவிதனிலே வாசிபூட்டி
மகத்தான கேசரியை வணங்கிமைந்தா
தேட்டமுட நீயிருந்து யோகஞ்செய்யத்
திறமுனக்கு யில்லாட்டாற் செப்பக்கேளு
நாட்டமுடன் நந்தியிலே விந்தைப்பாய்ச்சி
நாதாந்த முத்திரையிலே நாடிநில்லே. 938

## ஞானயோகம்

நாடிநின்ற நயனமதை மைந்தாகேளு
நந்திகொலு வானதொரு மய்யமீதில்
சூடிநின்ற சூட்சமதை நன்றாய்ப்பாரு
தொடுகுறியும் வழிதுறையும் நன்றாய்க்காணும்
ஆடிநின்று வழிதுறையும் அறிந்துகொண்டால்
அனுதினமும் போகவர அறிவுண்டாகும்
தேடிநின்று அலையாதே அறிவானந்தம்
தெவிட்டாத அமுர்தமடா சத்தியுப்பே. 939

## சத்தியுப்பு மெழுகு

உப்பான உப்பதுதான் சத்தியுப்பு
உத்தமனே அமுர்தரச உப்புவாங்கி
அப்பான தண்ணீரும் உப்புமொன்றாய்
அறிந்துமிகக் கரைக்கையிலே பூரஞ்சேரு
செப்பாத பூரணமு நாதஞ்சேரு
சேகரமா யொன்றாக ரவியிற்போடு
துப்புறவாய் ரவியனலிற் காய்ந்துதானால்
சுகமான மெழுகாகி யிருக்கும்பாரே. 940

பாரப்பா மெழுகதனைப் பதனம்பண்ணி
பாறான பிருதிவியு முடியுங்கூட்டி
சேரப்பா பூரமொடு கெந்திகூட்டி
செம்மையுட னொன்றாக்கிப் பாண்டத்திட்டு
காரப்பா குளித்தயிலம் நன்றாய்வாங்கி
கருவான மெழுகிலிதை விட்டுக்கிண்டி
நேரப்பா பீங்கானிற் பதனம்பண்ணி
நேமமுட னந்திசந்தி பணவிடைதான்கொள்ளே. 941

கொள்ளடா பணவிடைதான் மண்டலமேகொண்டால்
குவிந்தெழுந்த தேகமதில் நின்றநோய்கள்
அல்லடா அப்போதே விலகிப்போகும்
ஆனந்த மதியமுர்தம் அமுர்தந்தன்னால்
உள்ளப்பா வாசியது உறுதியாகும்
உத்தமனே தேகமது இறுகும்பாரு
செல்லடா தேகமது சித்தியானால்
சிவசிவா சிவயோகத் திறந்தான்பாரே. 942

## இல்லறப் பெரியோர்

திறமாக இல்லறத்தே யிருந்துகொண்டு
சிவபூசை குருபூசை செய்துமைந்தா
பரமான பராபரமே கெதியென்றெண்ணி
பலகாலம் பூரணத்திற் பதிவாய்நின்று
உரமாக அவனவன்செய் நடத்தைபார்த்து
உறுதியுடன் கண்காட்சி நன்றாய்ப்பெற்று
அறமான யில்லறத்தோ டொத்துவாழ்ந்து
அமர்ந்திருப்பார் சீவனிலை யறிந்தோர்தானே. 943

தானென்ற சீவினிலை யறிந்தோர்தானும்
சதாபோத மார்க்கமுள்ள தவசிதானும்
ஊனென்ற உள்ளுணர்ந்த யோகிதானும்
உற்றகலைக் கியானமுள்ள ஞானிதானும்
பானென்ற பலசமயத் தோர்கள்தானும்
பரராச மகுடபதி யானபேரும்
கோனென்ற குருமகிமை பெற்றோர்தானும்
குவலயத்திற் பலவுயிர்கள் பயிர்கள்காணே. 944

காணவே சொன்னவுயிர் பயிர்களெல்லாம்
கதித்துமிகச் செனித்ததெல்லாம் வெளிதானபபா
பேணவே ...சனித்துமிக ஆடிப்பாடி
பிரண்டுருண்டு போனதுவும் வெளிதானப்பா
தோணவே அண்டபிண்டம் வெளிதானாப்பா
துலங்குகின்ற ரவிமதியும் வெளிதானப்பா
ஊணவே வெளியதுவும் வெளிதானப்பா
உத்தவெளிக் கப்பாலே யேதோயேதோ. 945

ஏதென்று சொன்னதப்பா வெளிதான்மைந்தா
ஏகபர ரூபமென வேதமோதும்
ஊதென்று கால்தலைதான் மண்விண்ணாச்சு
உத்தமனே தண்ணீரும் வாய்வுந்தீயும்
மாதென்ற உடலுயிரு மறிவதாச்சு
மகத்தான பஞ்சகர்த்தா வழியிதாச்சு
வாதென்ற பஞ்சகர்த்தா வழியைப்பார்த்தால்
மவுனமென்ற நாதவிந்து வழிதான்பாரே. 946

பாரப்பா நாதவிந்து வழிதப்பாமல்
பாலகனே நீயறிந்து பணிந்தாயானால்
நேரப்பா வாதமது நிலைநின்றாடும்
நிலையான தீபமது நேரதாகும்
காரப்பா காயாதி கற்பமாகும்
கருணைவளர் வாசிசிவ யோகமாகும்
மேரப்பா கெவுனமதுக் குறுதியாகும்
வேதாந்த மதுவாகும் வெளிதானாமே. 947

ஆமப்பா வெளியான நாதவிந்த
அடங்கியுருத் தரித்தவொரு மணியுமாச்சு
தாமப்பா அம்மணிக்குக் கலசப்பாலைத்
தான்புகட்டிப் பார்க்கையிலே கலையுண்டாச்சு
ஓமப்பா கலைபொருந்து மணிக்கிநல்ல
உத்தமனே காரமுடன் சாரம்ரெண்டும்
நாமப்பா சொல்லுகிறோ மணிக்கிப்பூசி
நந்தியொளி செந்தீயிலே வாட்டிக்காணே. 948

வாட்டிமிகப் பார்க்கையிலே மைந்தாகேளு
மணியான மனோன்மணியாள் கிருபையாலே
தாட்டிகமாய் நின்றமணி குருவுமாச்சு
சமத்தான வாதமதுக் குறுதியாச்சு
நாட்டியதோர் வாசியதுக் குயிறுமாச்சு
நாதாந்த சிவயோக மதுதானாச்சு
பூட்டியதோர் ராதாரந் தனக்குமைந்தா
பொருந்திநின்ற உயிராச்சு போதமாச்சே. 949

## சிங்கி சுண்ணம்

போதமயமான சிவயோகம் பார்க்க
புண்ணியனே பூமியுட நாதம்வாங்கி
நீதமுள்ள வெடியுப்பு துருசுகாரம்
நிசமான பூரமுட னஞ்சுங்கூட்டி
சூதமென்ற நீராலே யரைத்துமைந்தா
சுத்தமென்ற மிருதார சிங்கிக்கப்பி
பேதமொன்று நினையாமல் கவசம்பண்ணி
பேரறிந்து கருவறிந்து புடத்தைப்போடே. 950

போட்டபுட மாறினபின் னெடுத்துப்பார்த்தால்
புண்ணியனே மிருதார சிங்கிதானும்
தேட்டமுட னுருகியது கட்டிமைந்தா
செம்மையுட னீரியது சுண்ணாம்பாச்சு
நாட்டமுள்ள சுண்ணமதை யெடுத்துக்கொண்டு
நஞ்சான துருசதற்குக் கவசம்பண்ணி
தாட்டிகமாய் மண்சீலை யணிந்துமைந்தா
தாய்பதத்தை யர்ச்சித்துப் புடத்திற்சேரே. 951

சேரப்பா புடமறிந்து புடத்திற்சேர்க்க
சிவசிவா பச்சையென்ற துருசுதானும்
நேரப்பா நின்றதுவுஞ் சுண்ணமாச்சு
நேர்மையுள்ள சுண்ணமதைப் பதனம்பண்ணி
சாரப்பா சுண்ணமதுக் கிடைதான்சாரம்
சங்கையுடன் தான்பொடித்துப் பனியில்வைக்க
நீரப்பா தான்பெருகிச் செயநீராச்சு
நிசமான நீரதிலே வீரஞ்சேரே. 952

சேரடா வீரமது சேர்ந்தபோது
சிவந்துசெய னீரதுவுங் காரமாச்சு
காரடா காரமுள்ள செயனீர்வாங்கி
கருவான பாஷாணந் தனக்குமைந்தா
வீரடா தானடங்கச் சுருக்குப்போட
வேகமுள்ள பாஷாண மடங்கிக்கட்டும்
பாரடா பாஷாணங் கட்டினாலே
பரிசமுள்ள சந்தான வேதையாமே. 953

வேதைவெகு துருசான துருசுச்சுண்ணம்
வேகமுள்ள ரசமதுக்கு நாலிலொன்று
சூதையறிந் தென்மகனே சுண்ணம்போட்டு
சுத்தமுள்ள காமசெலந் தன்னாலாட்டி
வாதையென்று யெண்ணாமல் வளித்துருட்டி
வரிசையுடன் புடம்போட மகிழ்ந்துநீரும்
போதைவெகு ஞானமென்ற ரசநீர்தன்னை
பூரணமாய்த் தானெடுத்து வைத்துக்காணே. 954

காணவே அமுர்தரசச் சுண்ணந்தன்னை
கைமுறையாய்த் தானெடுத்து காசிற்பூசிப்
பூணவே வோட்டில்வைத்துப் புடத்தைப்போட்டுப்
புண்ணியனே தானெடுத்துப் பார்த்தாயானால்
தேணவே செம்புகளிம் பற்றுநல்ல
சோதிவடி வானதொரு தங்கந்தானாம்
பேணவே உலகமதுக் குயிராய் நின்று
பிரபலமாய் நின்றுவிளை யாடுந்தானே. 955

தானென்ற சிங்கிதனை யார்தான்காண்பார்
சங்கையுள்ள வங்காதி சிங்கிதன்னை
ஊனென்ற கருவறிந்து சுண்ணம்பண்ண
உற்றரச வாதியெல்லாம் மயங்கினார்கள்
கோனென்ற குருவருளால் குருவெடுத்து
கோடிவித்தை நிமிடமதில் கூர்ந்துபார்த்து
தேனென்ற அமுர்தரச பூரணத்தினாலே
தெளிந்தனடா சிங்கிவித்தை திறந்தான்பாரே. 956

**சித்தர் கூட்டம்**

பாரப்பா சித்தாதி பதினென்பேரும்
பதிவான சதுரகிரி மலையிற்கூடி
நேரப்பா நின்றுதவஞ் செய்யும்போது
[illegible]மையுள்ள யெக்கியமா முனிதான்வந்து
தேரப்பா வென்றுசிங்கி வித்தைதன்னைச்
செம்மையுடன் யெந்தனுக்கு உபதேசித்தார்
வீரப்பா கொண்டதொரு சிங்கிதன்னை
வேணவிதங் குருமுடித்து விசைகண்டேனே. 957

**கருவூரார் நிலை**

கண்டதொரு காட்சிதனைச் சித்தர்க்கெல்லாம்
கைமுறையாய்ச் சொன்னதிலே கருவூரான்தான்
விண்டபடி தனைய்றிந்து சிங்கிவித்தை
விபரமுடன் கைமுறையாய் வேதைபார்த்து
அண்டகே சரிமாது கெதியென்றெண்ணி
அடங்கிநிலை தனையறிந்து யோகம்பார்த்து
மண்டலங்கள் மூன்றினுட வளமைகண்டு
மார்க்கமுடன் பூரணத்தில் மகிழ்ந்தான்பாரே. 958

**கொங்கணர் நிலை**

பாரப்பா கொங்கணவன் வீரத்தாலே
பத்திகொண்டு ஆறுவரைக் கப்பாலேகி
நேரப்பா நின்றுஅந்த நிலையைப்பற்றி
நிலைதவறாப் பூரணமாய் நிஷ்டைகூடி
சாரப்பா வெகுகோடி காலமட்டும்
சார்ந்துசிவ யோகமதில் தானேநின்று
மேரப்பா மேருகிரி வாசமாகி
வேதாந்த பூரணத்தி லொடுங்கினாரே. 959

ஒடுங்கிமனந் தனைநிறுத்தி யருபமாகி
உற்றதொரு பஞ்சகர்த்தா நிலையைப்பார்த்து
அடங்கியவர் மண்ணுடனே மண்ணைச்சேர்த்தார்
அப்பனே செலத்தோடே செலத்தைச்சேர்த்தார்
துடங்கியந்த நெருப்போடே நெருப்பைச்சேர்த்தார்
சுகமான வாய்வுடனே வாய்வைச்சேர்த்தார்
இடங்குவிந்து தன்னறிவாற் சேர்த்தபின்பு
எழும்பினார் ஆகாச இடத்திற்தானே. 960

தானென்ற ஆகாசந் தன்னில்சென்று
தன்மயமு விண்மயமு மொன்றாய்ப்பார்த்து
கோனென்ற குருபதமே கெதியென்றெண்ணி
குவிந்தமனம் விரியாமல் கூர்மையாகி
வானென்ற வெளியோடே வெளியாய்நின்று
மாசற்ற சோதியிலே சேர்ந்தார்பாரு
தேனென்ற கொங்கணவன் வீரத்தபலே
சிவசிவா வெளியொளியாய் சேர்ந்தார்காணே. 961

### போகர் நிலை

காணப்பா கயிலாச போகர்தானும்
கருவான யேமரசந் தன்னாலமைந்தா
பேணப்பா அமுர்தரச முண்டுகொண்டு
பேரான அண்டமெல்லாஞ் சுத்திப்பார்த்து
ஊணப்பா உள்ளுணர்வா யுணர்ந்துகொண்டு
ஒருகோடி காலம்வரை ஒடுக்கஞ்சென்று
பூணப்பா மனம்பூண்டு யோகஞ்செய்து
பூரணத்தின் பதவியிலே நின்றார்பாரே. 962

பாரப்பா கேசரியில் மனதைவைத்து
பரமான சிவயோக சிவயோகத்தில்
நேரப்பா உகாந்தவரை நிலையில்நின்று
நிலையான நிருவிகற்ப சமாதியாகி
வீரப்பா கொண்டுமனம் போகாமல்தான்
வெளியான பரமவெளி வெளிதன்னோடே
சாரப்பா யென்றவரும் மாயமானார்
தன்னறிவே தானாகத் தனித்துக்காணே. 963

காணுகிற காட்சியெல்லா மாயாமாயம்
கனயோக நிஷ்டையெல்லா மாயாமாயம்
பூணுகிற ஆசையெல்லா மாயாமாயம்
பொருந்துகின்ற அட்டசித்து மாயாமாயம்
பேணுகிற பூசையெல்லா மாயாமாயம்
பேசாத மவுனமது மாயாமாயம்
ஆணுவமாய்க் கொண்டசத்தம் மாயாமாயம்
அண்டமொடு புவனமெல்லாம் மாயமாச்சே. 964

மாயமென்ற வாழ்க்கையடா உலகவாழ்க்கை
மனுநீதி யில்லாத வாழ்க்கைதன்னை
நேயமுடன் அனுசரித்து உபாயமாக
நீமகனே விட்டகன்று அண்டமேவி
தாயகமாய் வாசியுட நிலையைப்பற்றி
சதாகாலம் பூரணத்திற் சேர்ந்துகொண்டு
காயமென்ற கருவிகளை வசியஞ்செய்து
கருணையுடன் அம்சிவா. உம்மென்றோதே. 965

ஓதிமன மொன்றாக நிலையைப்பற்றி
உண்மையென்ற மவுனரச பானங்கொண்டு
சோதிமய மாகவேதான் தன்னைப்பார்த்தால்
சுழன்றுநின்ற மாயமெல்லாந் துலைந்துபோகும்
நீதியுடன் மாய்கையெல்லாந் துலைந்துதானால்
நிசமான வாழ்க்கைசிவ யோகவாழ்க்கை
ஆதிமனோன் மணியினுட கிருபையாலே
அட்டாங்க யோகமதி லறிவாய்நில்லே. 966

## சட்டை முனி

அறிவான சட்டைமுனி அய்யர்தானும்
ஆதியென்ற சவுக்காரச் சுண்ணத்தாலே
குறியான குறியறிந்து அண்டமேவி
கோடிகற்ப காலவரை யிருந்துகொண்டு
நெறியான பூரணத்தை அனுசரித்து
நேமமுடன் பூசைசிவ யோகமெல்லாம்
சரியாகக் கண்டுமன துறுதியாலே
சாலோக பதவியிலே சார்ந்தார்பாரே. 967

சார்ந்துகொண்டு சட்டைமுனி சட்டைதின்று
சந்திரபுஷ் கரணியிலே ஸ்நானம்பண்ணி
தேர்ந்துகொண்டு வெளியோடே வெளியாய்நின்று
திறமாக யிருளோடே யிருளாய்நின்று
கூர்ந்துஅந்த ஒளியோடே ஒளியாய்நின்று
குணமான அண்டர்பதந் தானாய்நின்று
நேர்ந்துவெகு மாயமென்ற மாயமாகி
நிச்சயத்தில் பூரணமாய் நின்றார்பாரே. 968

### கமலமுனி

பாரப்பா கமலமுனி அண்டச்சத்து
பத்தியுடன் தானெடுத்து மெழுகுபண்ணி
நேரப்பா நின்றவரும் வேதைபார்த்து
நிலையான கமலமலர்த் தமுர்தங்கொண்டு
சாரப்பா மேருவிலே தவசுபண்ணி
சதாகோடி யுகாந்தம்வரை தானேநின்று
காரப்பா யென்றவருங் கமலத்தேகி
கண்ணிறைந்த பரவெளியிற் கலந்தார்காணே. 969

### மச்ச முனி

கலந்திருந்த மச்சமுனி கெந்திச்சத்து
கருவாகத் தானெடுத்துக் கருணையாக
மலர்ந்துநின்ற முருக்கமலர் போலேமைந்தா
மாசற்ற செந்தூரந் தானேசெய்து
வளர்ந்துமிகத் தானவனாய் வேதைபார்த்து
வாழ்ந்தாரே கோடியுகம் வரிசையாக
தளர்ந்துஜெடம் போகாமல் சிவயோகத்தில்
தானாகத் தானவனாய் தானானாரே. 970

தானாகத் தானிருந்து தானேதானாய்
சச்சுதா னந்தமய மாகவேதான்
ஊனாக உள்ளுணர்ந்து தன்னைப்பார்த்து
ஓமுடிந்த காட்சியிலே உறுதிவைத்து
வானாக நின்றவெளி தன்னிலேதான்
வந்தவழி செல்லாமல் மனக்கண்ணாலே
கோனாகி நின்றபர வெளியில்மைந்தா
குருவான ஒளியோடே ஒளியானாரே. 971

## திருமூலர்

ஒளியான திருமூலர் கெவுரிசத்து
உண்மையுடன் தானெடுத்து செந்தூரித்து
வழியான துறையறிந்து வேதைபார்த்து
மார்க்கமுடன் கோடான கோடிகாலம்
நெளியாமல் மனம்நிறுத்தி நேமமாக
நிலைதவறாப் பூரணமாய் நிட்டைகூடி
அளியாத மணிமகுட முடியிற்சென்று
அரகரா பூரணத்தி லடங்கினாரே. 972

அடங்குநிலை தனையறிந்து அடங்கிநல்ல
ஆகாசம் பரமவெளி யருளைக்கண்டு
துடங்கியந்த அருள்பெருகும் ஒளியிலேதான்
சுகசீவப் பிராணனொலி தன்னைச்சேர்த்து
இடங்குவிந்து தானாகிச் சோதியாக
ஏகாந்த செகசோதி யின்பமாகி
மடங்குவிந்த ஆகாச வெளியிலேதான்
மாசற்ற பூரணமா யொளியானாரே. 973

## நந்தீசர்

ஒளியாகி நின்றதொரு நந்திதானும்
உண்மையென்ற அயக்காந்தச் சத்துவாங்கி
தெளிவான கருவதனால் செந்தூரித்து
செகசால மோட்சகெதி வேதைபார்த்து
வெளியான பூரணமே கெதியென்றெண்ணி
வெகுகோடி யுகாந்தம்வரை தவமேசெய்து
வழியான மோட்சமென்ற அண்டத்தேகி
மகத்தான சோதியிலே மகிழ்ந்தார்பாரே. 974

பாரப்பா மகிழ்ந்ததெல்லாஞ் சோதியென்றும்
பஞ்சசபை யானதெல்லாம் சோதியென்றும்
நேரப்பா கண்டதெல்லாஞ் சோதியென்றும்
நிட்டைமுதல் சமாதியெல்லாஞ் சோதியென்றும்
காரப்பா கண்காட்சி சோதியென்றும்
கருவான அண்டபிண்டஞ் சோதியென்றும்
பேரப்பா கொண்டதெல்லாஞ் சோதியென்றும்
பேரண்டச் சோதிமய மானார்காணே. 975

### சுந்தரானந்தர்

காணவே சுந்தரா னந்தர்தானும்
    கருவான களியுப்பு தன்னைவாங்கி
பேணவே தானீத்திச் சுண்ணாம்பாக்கி
    பேறான நவலோக வேதைபார்த்து
பூணவே தன்னிலையைத் தானறிந்து
    பொற்கமல மீதேறிப் புனிதமாகத்
தோணவே தவசிருந்தா ரனந்தகாலஞ்
    சுத்தமுடன் பூரணத்திற் சொக்கினாரே. 976

சொக்கியந்த அறிவோடே நின்றுபார்த்து
    சுகமான அண்டபத முடிவிலேகி
திக்குமுதற் திசைகளெல்லாம் பார்க்கப்பார்க்க
    சிவசிவா சிவயமயமாய்ச் சோதியாச்சு
மெய்குமிந்தச் சோதியிலே சோதியாகி
    வேதாந்தச் சோதியினில் சூட்சமாகி
ஐக்கியமாய்ச் சூட்சாதி சூட்சமாகி
    அகண்டவெளி பூரணமா யானார்பாரே. 977

### கோரக்கர் நிலை

பாரப்பா கோரக்க நாதர்தானும்
    பதிவான நவக்கிரக பூசைபண்ணி
நேரப்பா பூரணத்திற் சொக்கிநின்று
    நிசமாகக் கோடிவரை நிட்டையாகி
பேரப்பா பெற்றகயி லாசமேவி
    பேசாத மவுனமதில் மவுனங்கொண்டு
சேரப்பா பூரணத்திற் சேர்ந்துகொண்டு
    சிவசிவா பரமபதஞ் சேர்ந்துகொண்டு. 978

### காலாங்கி புண்ணாக்கீசர் நிலைமடபதி

பாரான காலாங்கி புண்ணாக்கீசர்
    பதிவான வியாக்கிரமர் கூனக்கண்ணர்
நேரான சிவவாக்கியர் சண்டிகேசர்
    நிசமான இடைக்காட்டா ரேழுபேரும்
பேரான சத்திசிவ பூசைபண்ணி
    பெருகிநின்ற வாசியினால் மவுனங்கொண்டு
மேரான மேருகிரி உச்சமீதில்
    விளக்கொளியின் சோதியிலே மேவினாரே. 979

மேவியந்தச் சோதியிலே மனதைநாட்டி
வேதாந்த பூரணமே கெதியென்றெண்ணி
தாவியந்தப் பூரணத்தைக் கண்டுகொண்டு
சதாகோடி யுகாந்தம்வரை தவமேசெய்து
கூவியந்தச் சத்தமடா சுத்தமாக
குருனாடு மடபதியுங் குருவைக்காண
ஆவியந்தச் சோதியிலே சூட்சமாகி
அரகரா பரவெளியி லயிக்கியமாச்சே. 980

ஆச்சப்பா மடபதிக ளறுபத்துநாலில்
அருமையுள்ள சமையகுரு பேரேதென்றால்
மூச்சப்பா நிலையறிந்து சின்மயானந்தர்
முத்தியுள்ள மோட்சகெதி பூரணானந்தர்
நீச்சப்பா நிலையறிந்து அமுர்தவானந்தர்
நிசமான குருவறிந்து சிசுவானந்தர்
பேச்சப்பா மவுனமுள்ள சித்தானந்தர்
பேருலகில் நிறைந்தசிவா னந்தர்தானே. 981

தானென்ற சச்சுதா னந்தர்தானும்
சங்கையுள்ள சமையவா னந்தர்தானும்
ஊனென்ற கருணையா னந்தர்தானும்
உற்றகம லானந்தர் முத்தானந்தர்
வானென்ற சூரியா னந்தரோடு
மகத்தான சுந்தரா னந்தர்தானும்
கோனென்ற தூருவா னந்தமூர்த்தி
குணமான கருவானந் தரும்நீபாரே. 982

பாரப்பா சதானந்தர் சருகானந்தர்
பரமான குருவான குருவானந்தர்
நேரப்பா நிசமான திருவானந்தர்
நின்றநிலை தவறாத வாலையனந்தர்
மேரப்பா மேருகிரி பரமானந்தர்
விசையான வாசியென்ற கூர்மானந்தர்
சாரப்பா சார்வான லோகவானந்தர்
சத்தியமுள்ள சத்தியா னந்தர்தானே. 983

தானான கெதியறிந்த விசுவானந்தர்
　　தன்மயமாய் நின்றிலங்குஞ் சறுவானந்தர்
வானான கேசரியாம் பிரமாந்தர்
　　மகத்தான சித்தான சுத்தானந்தர்
தேனான அமுர்தரச வித்தானந்தர்
　　செகமெல்லாங் கண்டதொரு காலானந்தர்
ஊனான உயிரறிந்த நந்தியானந்தர்
　　உண்மையென்ற பூரணவா னந்தர்காணே. 984

காணப்பா கண்குளிரக் கருணைசிவமுனியும்
　　கண்ணான கண்மணியாம் பதஞ்சலிமாமுனியும்
பேணப்பா பிரமமுனி விஷ்ணுமுனிதானும்
　　பேரண்ட மானதொரு சதாசிவமாமுனியும்
ஊணப்பா உண்மையுள்ள சண்டிகமாமுனியும்
　　உண்மையென்ற மச்சமுனி ராசமுனிதானும்
பூணப்பா அகோரமுனி விசுவமுனிமைந்தா
　　பூரணமா மவுனமுனி வாசமுனிதானே. 985

தானென்ற ஆதிமுனி சைதன்யமுனியும்
　　தன்மயமாய் நின்றதொரு அகத்தியமாமுனியும்
தேனென்ற அமுர்தரச ஆனந்தமுனியும்
　　திருவிருந்த குருவான கோரக்கமுனியும்
ஊனென்ற சட்டைமுனி யதீதமுனிதானும்
　　உற்றசிவ சுக்கிரமுனி கெவுதமுனிதானும்
வானென்ற மகாமுனியும் புலத்தியமாரிடியும்
　　வளமையுள்ள பிரமரிஷி சித்தரிஷியாரே. 986

பாரப்பா பரமான யேகரிஷிஅய்யா
　　பதிவான யோகரிஷி ருத்திரரிஷிதானும்
நேரப்பா நின்றதொரு மூலரிஷிதானும்
　　நிசமான விசுவரிஷி வியாசரிஷிதானும்
காரப்பா சுகரிஷியோ டறுபதிநாலும்
　　காசினியிற் சமயகுரு மடபதிகள்தானும்
தேரப்பா கண்டுமனம் நின்றுகொண்டு
　　தெளிந்துநின்ற சமையகுரு தீர்க்கங்கேளே. 987

தீர்க்கமுட னின்றுமனந் தீர்க்கமாகி
சிவசிவா திருவான அமுர்தநாதம்
மார்க்கமுடன் மனதறிவால் அமுர்தநாதம்
வாங்கிமனப் பூரணமாய் பூசைபண்ணி
ஏர்க்கையுடன் தவசிருந்தா ரனந்தகாலம்
ஏகாந்த மானரச வமுர்தத்தாலே
சேர்க்கையுள்ள திருஉருவைத் திறமாய்க்கண்டு
திருவுருவை அருபமதாய்த் தெளிந்தார்பாரே. 988

பாரப்பா வுருவறிந்து தெளிந்துகொண்டு
பரைஞான கேசரியில் வாசமாகி
நேரப்பா நின்றபர வெளியைப்பார்த்து
நிசமான அவ்வெளியி லொளியைக்கண்டு
சாரப்பா வென்றவரும் ஒளியிற்சார்ந்து
தன்னொளிவும் விண்ணொளியும் தானேதானாய்
சேரப்பா யென்றவரும் பூரணத்திற்சேர்ந்து
சிவாக்கினியி லயிக்கியமாய்த் தெளிந்தார்தானே. 989

தானென்ற சித்தரிஷி முனிவர்தேவர்
தன்மயமே தானாகத் தவமேசெய்து
ஊனென்ற உடல்வெருத்துப் பசியடக்கி
உற்றகலை வாசியென்ற அகாரத்தைக்கொண்டு
வானென்ற ஆகாச வெளியிற்சென்று
மகத்தான சோதியுடன் சோதியானார்
ஏனென்று வந்ததுவுஞ் சோதிசோதி
எங்குஞ்சிவ மயமான சோதிதானே. 990

சோதியென்ற சோதியுடன் சோதியானார்
சூழ்ந்துநின்ற அண்டமதில் நன்றாய்ப்பாரு
ஊதியதோர் மந்திரங்கள் சோதியெல்லாம்
ஒளிவிளக்காய் நின்றுதடா அங்கேபாரு
நீதியுடன் பார்க்கையிலே அண்டந்தன்னில்
நிறைந்துநின்ற நட்சேத்திரச் சோதியெல்லாம்
ஆதியென்ற நாதாக்கள் காந்திகாந்தி
அண்டமதில் சூழ்ந்துதடா அறிந்துகாணே. 991

அறிந்துகொண்ட தேவாதி தேவரெல்லாம்
அவர்கள்செய்யுந் தவமதைத்தா னென்னசொல்வேன்
தெரிந்துகொண்ட யெக்கியமா முனிதான்சொன்னார்
சிவசிவா தேவாதி தேவாரூபம்
விரிந்துஅந்த அருபமதா யிருந்துகொண்டு
மகத்தான பிராணத்தா ரகமேசெய்து
இருந்துபர வெளியோடே வெளியுமாகி
யேகபரா பரமாகி யிருந்தாபாரே. 002

பாரப்பா பரமதுவும் பராபரமாய்நின்று
பார்விசும்பு நிராதரமாய் நிர்மலநிற்குணமாய்
நேரப்பா நித்தியமாய் நிட்களமுமாகி
நிராமயமாய் நின்றபூ ரணமுமாகி
மேரப்பா வொளியாகி யிருளுமாகி
மெஞ்ஞான சூட்சாதி சூட்சமாகி
சாரப்பா சராசரத்தின் சூட்சமாகி
தனிமையாய் நின்றபரந் தன்மைதானே. 993

தன்மயமாய் நின்றபரந் தானேதானாய்
தானாடி யாடியது தாண்டிமேலே
உண்மையுட னின்றதுவும் பரந்தானப்பா
ஒடுங்கிமிகப் போனதுவும் பரந்தானப்பா
சின்மயமாய் நின்றதுவும் பரந்தானப்பா
தெளிந்தசெக சோதியது பரந்தானாப்பா
நன்மைதின்மை யானதுவும் பரந்தானப்பா
நாதாந்த பூரணத்தை நாட்டிப்பாரே. 994

பாரப்பா பராபரத்தைப் பதிவாய்ப்பார்க்க
பதிவான ஆதார மூலத்தேகி
நேரப்பா நின்றதொரு வாசிதன்னை
நிலையறிந்து ரேசகபூ ரகமுஞ்செய்து
காரப்பா கருணைவிழிக் கண்ணாலந்த
கடாட்சமதால் கும்பகத்தைக் கருத்தில்வைத்து
சேரப்பா ஒட்டியான பெந்தம்பண்ணி
திருவான கேசரத்தில் தெளிவைக்கானே. 995

## ஒட்டியான யோகத்தெண்டு

காணவே யோகமதுக் காதாரமான
கருணையுள்ள யோகமென்ற ஒட்டியானந்தான்
பூணவே அளவது;தான் சொல்லக்கேளு
புத்தியுடன் அகலமது அணிவிரல்நாலாகும்
பேணவே நீளமது யென்னவென்றால்
பெருவிரலி னளவதுக்கு அன்பத்தொன்று
தோணவே கடைதலையு மொன்றாய்ச்சேர்த்து
சுத்தமுள்ள ஒட்டியான பெந்தஞ்செய்யே. 996

செய்யப்பா யிவ்விதமொட்டி யானஞ்செய்து
செம்மையுடன் சிவயோகத் திருந்தாயானால்
மெய்யப்பா வாசியது அகலாதய்யா
விசையான கண்டமதில் நன்றாய்நிற்கும்
மய்யப்பா மய்யமதில் நின்றுபாயும்
மகத்தான புருவமதில் தீபங்காணும்
பய்யப்பா தசவாய்வு பகையாதய்யா
பாலகனே ஒட்டியானப் பலன்தான்காணே. 997

காணப்பா ஒட்டியானந் தனக்குமைந்தா
கருவான ஆதாரம் யோகத்தெண்டு
பூணப்பா யோகமென்ற தெண்டுதன்னை
புத்தியுடன் அளவிடைகள் செல்லக்கேளு
பேணப்பா ஆதாரந் தனக்குமைந்தா
பெருமையுட னிருபுறமுஞ் சிங்கஞ்செய்து
தோணப்பா அஞ்சுவிரல் பருமன்தன்னில்
சுகமான சந்தனத்தாற் கம்புசேரே. 998

சேரப்பா கம்பதுவை நன்றாய்ச்சேர்த்து
சேர்த்தகம்பு நீளமதைச் செப்பக்கேளு
காரப்பா அணிவிரலால் முப்பத்திரெண்டு
கணக்கறிந்து யோகதெண்டு கருவாய்ச்செய்து
நேரப்பா சந்தனக்கற் பூரஞ்சேர்த்து
நிலையான யோகதெண்டுக் கங்கிபூட்டி
பாரப்பா யெதிராக முன்னேவைத்து
பத்தியுடன் சடாட்சரத்தை பதிவாயோதே. 999

ஓதியொரு மனதாகக் கையில்வாங்கி
உத்தமனே கையறிந்து உள்கைகொண்டு
நீதியுடன் தானிருந்து மைந்தாமைந்தா
நேர்மையுடன் வாசியைநீ புருவத்தேத்தி
வாதியென்று நினையாமற் சோதிபார்த்து
வலசாரி இடசாரி வகையாய்க்கொண்டால்
சோதியென்ற வாசியடா புருவத்தேகி
சுயஞ்சோதி யானதொரு தீபங்காணே. 1000

காணவே தீபமதைக் கண்ணால்பார்த்து
கருணையுடன் மேலோகங் கீலோகம்ரெண்டும்
பூணவே தானறிந்து லோகவாழ்க்கை
புத்தியுடன் சொல்லுகிற புதுமைகேளு
தோணவே நடுவான முக்கோணத்தில்
சுத்தமுடன் தான்னறிவால் மனக்கண்வைத்து
பேணவே உம்கிலி டம்மென்றேதான்
பெருமையுடன் தினம்நூறு உருவேசெய்யே. 1001

செய்யடா உருவறிந்து தினந்தான்மைந்தா
செம்மையுடன் செய்ததினாற் பலத்தைக்கேளு
மெய்யடா சொல்லுகிறேன் தேகந்தன்னில்
வினையான வல்பிணிகள் வெந்துநீருங்
கையடா வுதவுவது போலேமக்காள்
காசினியில் நடத்தையெல்லாங் காணலாகும்
வையடா மூலமதில் மனதைமைந்தா
வைத்துஅந்த அட்சரத்தை மருவியோதே. 1002

ஓதியே இகலோகந் தன்னில்வாழ்க
உண்மையென்ற மந்திரத்தை உரைத்தேனப்பா
சோதியென்ற பரலோகந் தன்னிலப்பா
சுகமாகத் தானிருந்து சுகத்தைப்பார்க்க
ஆதியென்ற அட்சரந்தான் சிங்வங்கிம்மென்று
அப்பனே ஓங்காரக் கம்பத்தேகி
நீதியென்ற புருவமதில் மனதைவைத்து
நேமமுட னுருவறிந்து உருவைக்காணே. 1003

காணவே வுருவறிந்து தினம்நூறப்பா
கண்மூக்கு மத்தியிலே கருத்தைவைத்து
தோணவே செபித்திடவே மைந்தாகேளு
சூழ்ந்ததிரை தானகற்றிச் சோதிகாணும்
பேணவே சோதியிலே மனதைவைத்து
பிரியமுடன் பரலோகந் தன்னைப்பார்த்தால்
தோணவே நினைத்ததெல்லா மங்கேகாணும்
சுகமான பரவெளியின் சூட்சந்தானே. 1004

தானென்ற இகலோக மூலமப்பா
தருவான மேலோக மண்டத்துச்சி
கோனென்ற மூலமதை முன்னேபார்த்து
குவிந்தமன துருமையினா லுச்சிப்பார்த்து
வானென்ற உச்சிதனைப் பார்த்துமைந்தா
மார்க்கமுட னின்றதினால் வளமைகேளு
ஊனென்ற தேகமது சோதிபோலே
ஒளிவிளக்காய்த் தோணுமடா உண்மைதானே. 1005

உண்மையுள்ள யெக்கியமா முனிதான்மைந்தா
உறுதியுடன் யெக்கியத்திற் பிறந்ததாலே
நன்மையுள்ள பஞ்சகர்த்தாள் வசியமாச்சு
நாதாந்த பூரணமும் வசியமாச்சு
தன்மையுடன் சகலகலை வசியமாச்சு
சராசரங்கள் சகலமுமே வசியமாச்சு
நுண்மையுள்ள வாதமுதல் சகலசித்தும்
நொடிக்குமுன்னே விளையாட வசியமாச்சே. 1006

ஆச்சப்பா வசியமுத லெட்டெட்டுந்தான்
அருளான வேதியன்பேர் சொன்னபோதே
மூச்சப்பா தானடங்கி முன்னேநின்று
முத்தியுட னடிபணிந்து நிலைநின்றாடும்
பாச்சப்பா மெழுகுமுதற் சந்தானவேதை
பதிவான பற்பமொடு செந்தூரங்கள்
காச்சப்பா கட்டுமுதற் சரக்குவைப்பு
கருவாக நிமிடமதிற் கரைகண்டாரே. 1007

**புருஷாமிருகயோகி**

கரைகண்ட காட்சியிலே யின்னமொன்று
கற்பூர தீபகிரி யடிவாரத்தில்
வரைகண்ட புருஷாதி மிருகயோகி
வாழ்ந்திருக்கும் ஆசிரமந் தன்னில்மைந்தா
நிறைகின்ற பூரணமாய்ச் சென்றாரப்போ
நீமகனே யாரெனவே யென்றாரப்போ
திரைகண்டு திரையகற்றித் தீபங்கண்ட
சிவாயகுரு கும்பமுனி யென்றேன்பாரே. 1008

பாரப்பா கும்பமுனி யென்றபோது
பதிவாக வாவெனவே அருகிருத்தி
நேரப்பா அமுர்தரச வர்க்கமீய்ந்து
நீமகனே வந்தவகை யென்னவென்றார்
காரப்பா கற்பூர தீபகிரிநடுவிற்
கருணைவளர் யோகிமகா யோகிகளும்
ஆரப்பா அறியாத சித்துவித்தை
அறியலா மென்றுமிக வந்தேன்பாரே. 1009

வந்தவகை சொல்லுமுன்னே அறிந்துகொண்டு
மனமகிழ்ந்து சொல்லுகிறேன் வகையாய்க்கேளு
சொந்தமுடன் சகலசித்துந் தானேதானாய்
துலங்குதற்கு அந்தமடா மந்திரமூலம்
அந்தமுள்ள மூலமடா சிறீங்அம்மென்று
அசைவற்று மவுனமதா யருட்கண்மேவி
பந்தமுடன் கம்பமதாய் நின்றாயானால்
பலனான தவப்பலத்தைப் பகுந்துகேளே. 1010

**சகல ரூபமுண்டாக**

கேளப்பா தவபலத்தைச் சொல்லக்கேளு
கிருபையுடன் சிவயோகத் திருக்கும்போது
சூளப்பா மனிதர்கண்டால் மனிதர்போலாம்
சுகமான பெண்கள்கண்டால் பெண்கள்போலாம்
மேலப்பா யோகிகண்டால் யோகிபோலாம்
விசையான மிருகங்கள் கண்டுதானால்
காலப்பா அந்தந்த வகைபோற்தோணும்
கருணையுடன் தவசிருந்த கருத்தைப்பாரே. 1011

கருத்தாக வாசியைநீ வாங்கவேணும்
கருணையுடன் சிவயோகத் திருக்கவேணும்
உருத்தாகச் சிவயோகத் திருந்துகொண்டு
உனதுதிரு நயனமதை உச்சத்தேத்தி
திருத்தமுடன் சிவஞான யோகத்தீபந்
தீர்க்கமுடன் தானிருந்து பார்க்கவேணும்
விருத்தராய்ப் போனபின்பு யென்னஞானம்
வெகுகடினம் வெகுகடினம் விரசுபோச்சு. 1012

விரசுகொண்டு ஆடுகிற சக்கரத்தை
வினையமுற்றுப் பாராமல் வீணாய்ப்போன
பிரசைதனைக் கண்டதினா லேதுண்டப்பா
பிலமாக மூலமதில் மனதைவைத்து
உரமான வாசியினால் மைந்தாமைந்தா
உள்ளாடுஞ் சக்கரத்தை உன்னியாட்டே
திறமாகச் சீவகளை கெதிகொண்டாடும்
தீர்க்கமுடன் கேசரியி லிருந்துபாரே. 1013

## நாககிரி

இருந்துநிலை தனையறிந்து கெவுனங்கொண்டு
யேகாந்த நாககிரி மலையிற்சென்று
வருந்திமிக நால்புறமும் பார்க்கும்போது
மகத்தான அகோரமதாய் நாககன்னி
அருந்தவசு செய்துமிக யோகங்கொண்டு
அமர்ந்திருக்கும் பதிதனிலே அருகில்நின்று
திருந்தியவள் முகம்பார்த்துப் பேசும்போது
சீரியவள் கோபமதாய்ப் பார்த்தாள்பாரே. 1014

பாரப்பா சீரியவள் பார்க்கும்போது
பதிவான வணக்கமதாய் வணங்கிநின்றேன்
நேரப்பா வணங்கிநின்ற நிலையைப்பார்த்து
நீமகனே யாருடைய வர்க்கமென்றாள்
மேரப்பா கயிலாச வர்க்கத்தோர்க்கும்
மேலான மூலவர்க்க மானபேர்க்கும்
தேரப்பா வென்றுதச தீட்சைசொன்ன
திறமான வேதியர்க்கு மடுமைகாணே. 1015

காணவே அடுமையென்று சொன்னசத்தம்
 காதிலே கேட்டவுடன் கருணைகூர்ந்து
பேணவே கண்மணியே வாவாவென்று
 பிரியமுட நாகரெட்ன மாலைசாத்தி
தோணவே அமுர்தரச பானமீய்ந்து
 சித்தமுள்ள சித்தாநீ வந்ததென்ன
பூணவே சொல்லுமென்று நாககன்னி
 பொருந்திமனக் கனிவாலே கேட்டாள்பாரே. 1016

கேட்டவுடன் வந்தவகை சொல்வேனம்மா
 கெம்பீர மானதொரு நாகந்தானும்
நாட்டமுடன் கண்டவுடன் பணிந்துநிற்க
 நற்வசன மானதொரு மந்திரந்தான்
தேட்டமுடன் சொல்லுமென்று கேட்டேனப்பா
 திருவான முகமலர்ந்து தீர்க்கமாக
தாட்டிகமாய் நறீசிம்மறீசிங்கென்று
 தன்னிலையிற் தானிருந்து உருவேசெய்யே. 1017

### பாம்புத்தடை - கட்ட - ஓட்ட

செய்யடா உறுதியுட னுருவேசெய்ய
 தீர்க்கமுடன் மந்திரந்தான் சித்தியாகும்
மெய்யடா பத்தியுடன் சித்தியானால்
 வெருண்டெழுந்த நாகமடா அரண்டேநிற்கும்
தொய்யவே அரண்டதொரு நாகந்தன்னை
 சுத்தமுடன் பார்த்துநீ சீஊவென்றால்
பய்யடா அந்தரவு நகண்டுநல்ல
 பத்தியுட னோடிவிடும் பாருபாரே. 1018

### விஷத்துக்கு

பாரப்பா விஷந்தீண்டித் தலைமேற்கொண்டால்
 பாலகனே மந்திரத்தைத் தியானம்பண்ணி
நேரப்பா விபூதியைநீ கடாட்சித்தாக்கால்
 நிமிஷமதில் விஷமதுவும் நீங்கிப்போகும்
வீரப்பா கொண்டதொரு சிலந்திப்புண்கள்
 மெய்நிறைந்த சுரதோஷ வியாதிக்கெல்லாம்
நீரப்பா தானெடுத்துத் தியானம்பண்ணி
 நேர்மையுடன் தான்கொடுக்க விலகும்பாரே. 1019

விலகிப்போ முனதுதிரு முகங்கண்டோர்க்கு
வினையான பில்லிமுதற் சூனியங்கள்
விலகிப்போங் கண்ணேறு நாவேறுந்தான்
மெய்நிறைந்த பயித்தியங்கள் தோசமெல்லாம்
விலகிப்போ மவனுடைய கலிகளெல்லாம்
வேதாந்தச் சுருதியுட திருநீர்கண்டால்
விலகிப்போம் சருவாங்க சாபமெல்லாம்
விபரமுடன் பூரணத்தில் விரும்பிநில்லே. 1020

விரும்பிமிகப் பூரணத்தில் நில்லென்றேதான்
வேதபூ ரணமான நாககன்னி
விரும்பியவள் சொல்வசனம் பெற்றுக்கொண்டு
மேலான நாககிரி மலையைவிட்டு
விரும்பிமனங் கொண்டேகிப் பொதிகைதன்னில்
வேதியர்முன் நடந்தகதை விள்ளும்போது
விரும்பியந்த வேதியருஞ் சந்தோஷித்து
மேன்மைபெற்று வந்ததுதா னருமைகாணே. 1021

தானென்ற நாககிரி மலையிற்சென்று
சங்கையுடன் திரும்பினபே ராருமில்லை
ஊனென்ற நாககன்னி மூச்சுப்பட்டால்
உத்தமனே அப்போதே வெந்துநீரும்
வானென்ற கெவுனிகள்தான் மலையைக்கண்டால்
வணங்கிமிகத் தான்பாய்ந்து வலஞ்செல்வார்கள்
தேனென்ற கண்மணியே திரும்பிவந்த
திறமதுதான் கும்பமதின் செயல்தான்பாரே. 1022

பாரப்பா யெக்கியமாங் கும்பந்தன்னில்
பாய்ந்துவந்த கருணையினால் மைந்தாநீயும்
நேரப்பா மனந்தேறி வந்தாயென்று
நேர்மையுடன் திருநீற்றுக் காப்பணிந்து
பேரப்பா பெற்றுவந்த மந்திரந்தன்னை
பேருலகி லறிந்தவர்க ளாருமில்லை
காரப்பா மனதடங்கிக் கருத்தாய்நீயும்
கருத்துடனே வாழுமென்று கடாட்சித்தாரே. 1023

கடாட்சமுள்ள புலத்தியனே யோகவானே
காலகண்ட மானதொரு அஷ்டநாகம்
படாட்சரமாய் முன்னேறிப் பாய்ந்துவந்தால்
பாலகனே மந்திரத்தை பணிந்துவோது
சடாட்சரத்தின் வலுவாலே தம்பித்தேதான்
தானடங்கிப் போகுமடா தனதாய்ப்பார்த்தால்
விடாச்சுரமும் வல்விஷமும் விலகிப்போகும்
வேதாந்தக் கருணையிலே விரும்பிநில்லே. 1024

## மருத்துமா மலைவனம்

விரும்பிமனம் தனைநிறுத்திக் கெவுனங்கொண்டு
மேலான அண்டவரை சுத்தும்போது
திரும்பிமனங் கோணாமல் நேரேநின்று
செல்கையிலே மருத்துவமா மலையைக்கண்டு
அருந்தவமாய் விரும்பியந்த மலையிற்சென்று
ஆசைகொண்டு நால்புறமும் பார்க்கும்போது
பொருந்திநின்ற கெந்தருவ ரிடியைக்கண்டு
பூரணமா யவர்களிடஞ் சென்றேன்பாரே. 1025

பாரப்பா அவர்களிடஞ் செல்லுப்போது
பதிவாகக் கெந்தருவ ரிடிதான்பார்த்து
ஆரப்பா யென்றவரு மழுத்திப்பார்த்தார்
அப்போது கும்பமுனி யென்றுசொன்னேன்
நேரப்பா நிறைந்தகும்ப முனிவாவென்று
நேர்மையுடன் னருகிருத்தி அமுர்தமீய்ந்து
கூறப்பா யிம்மலைக்கி வந்தகாரியம்
கூறுமென்று கெந்தருவ ரிடிசொன்னாரே. 1026

சொன்னதொரு கெந்தருவ ரிடியைப்பார்த்துச்
சுகமாகக் கெவுனமதா யண்டஞ்சுத்தி
முன்னேறி வருகையிலே கண்டேனிந்த
முத்தியுள்ள மலைவளத்தைப் பார்ப்போமென்று
உன்னிமிகத் தானிறங்கி வந்தேனய்யா
உற்றமலை யதிசயத்தை யுரைக்கவேணும்
நன்னயமாய்க் கேட்டவுடன் நல்லதென்று
நாடிநின்று மலைமுடிவிற் சென்றோம்பாரே. 1027

பாரப்பா நால்புறமுஞ் சுத்திப்பார்த்து
பதிவான கெந்தருவ ரிடிதான்மைந்தா
நேரப்பா மூலிகையின் விபரமெல்லாம்
நேர்மையுடன் சொன்னதைநான் பெற்றுக்கொண்டு
வீரப்பா பதிவான லகிரிமுட்டி
விசையான மனவேகக் கெவுனங்கொண்டு
மேரப்பா சதுரகிரி நிதானங்கண்டு
மேலான கொடுமுடிசென் றிருந்தேன்காணே. 1028

காணவே மருத்துவமா மலையிற்சென்று
கண்டதைநான் சொல்லுகிறேன் புலத்தியாகேள்
பூணவே கெந்தருவ ரிடியைக்கண்டு
பொருந்திநின்ற மூலிகையின் திறங்கள்பெற்று
தோணவே வந்ததொரு திரங்கள்தன்னை
சுத்தமுடன் சொல்லுகிறேன் சுகமாய்க்கேளு
பூணவே தன்னகத்தைத் தானேகண்டால்
பொருந்திநின்ற மூலிகையைக் காணலாமே. 1029

## கருநெல்லி

காணவே சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
கருநெல்லிப் பழத்தினுட சாருவாங்கி
பேணவே அதுக்குநிகர் தேனுங்கூட்டி
பிரியமுடன் அந்திசந்தி கொண்டாயானால்
பூணவே வாசியது பொருந்திநின்று
பூரணமாய்த் தேகமது சித்தியாகும்
ஊணவே தேகமது சித்தியானால்
ஒருதீங்கு மில்லையடா சோதியாச்சே. 1030

ஆச்சப்பா அந்தரசந் தன்னைமைந்தா
அரகரா விஷரோகஞ் சகலத்துக்கும்
நீச்சப்பா நிலையறிந்து கடாட்சித்தாக்கால்
நீங்காத விஷரோகம் நீங்கிப்போகும்
பாச்சப்பா பதியறிந்து கெதியைக்கண்டு
பதியான கெதிதனிலே பார்வையாகி
பேச்சப்பா பேசாத மவுனங்கொண்டு
பெருமையுட னின்னமொரு பாகங்கேளே 1031

## கருநெல்லித் தயிலம்

பாகமுள்ள கருநெல்லிப் பழத்தைமைந்தா
பதமாகத் தானுலர்த்திப் பாண்டத்திட்டு
ஏகமுள்ள மூலிகையாங் கடுக்காய்சேர்த்து
இன்பமுடன் கற்பூர தீபங்கூட்டி
ஆகமுடன் குளித்தயிலம் நன்றாய்வாங்கி
அரிபூசை சிவபூசை அன்பாய்ச்செய்து
தாகமுடன் பரணிதனில் பதனம்பண்ணி
சதானந்த பூரணமாய்த் தன்னைப்பாரே. 1032

தன்னைத்தான் தானறிந்து தயிலந்தன்னை
சங்கையுடன் பணவிடைதான் தனதாய்க்கொண்டால்
விண்ணைத்தா னோக்குதற்குக் கெவுனமுண்டாம்
மேலான அண்டமதில் தீபந்தோற்றும்
கண்ணைத்தான் கண்டுமன தறிவினாலே
கற்பூர தீபமதைக் கண்டாரானால்
உண்மைதான் வாசியது ஒதுங்காதய்யா
உறுதியுள்ள தயிலமடா வுண்டுதேரே. 1033

தேரடா தயிலமதைத் தினந்தான்கொண்டு
சிவசிவா பூரணத்தில் திறமாய்நின்று
வீரடா கொண்டதொரு லோகத்தோர்க்கு
வேதாந்த அமுர்தரசத் தயிலந்தன்னை
நேரடா பணவிடைதா னந்திசந்தி
நேர்மையுடன் மூன்றுநாள் குடிக்கும்போது
பாரடா சயரோகம் பாண்டுகுன்மம்
பகையான மகோதரங்கள் பறந்துபோமே. 1034

போமடா திரிகடுகு பொடித்துக்கொண்டு
பூரணமாய்த் தயிலமதில் சேர்த்துக்கிண்டி
ஆமப்பா லேகியம்போற் பாகம்பண்ணி
அப்பனே அந்திசந்தி பணவிடைதான்கொண்டால்
ஓமடா தேகமதில் வாதபித்தம்
ஒடுங்காத சேத்துமத்தா லெடுத்தநோய்கள்
தாமடா யிருமூன்று நாளிலேதான்
தன்மையுடன் தீர்ந்துவச்சிர தேகமாமே. 1035

### வல்லாரைக் கற்பம்

காயமென்ற காயாதி கற்பந்தன்னை
காசினியிற் கண்டவர்கள் கோடிக்கொன்று
நேயமுட னின்னமொரு கற்பங்கேளு
நிசமான ஆரையடா வல்லாரைதான்
தாயகமாய்க் கொண்டுவந்து நிழலிலுலர்த்தி
சங்கையுடன் சூரணமாய்த் தானேசெய்து
மாயமென்ற சந்திரகலைத் தயிலஞ்சேர்த்து
மக்களே லேகியம்போற் பாகஞ்செய்யே. 1036

செய்ததொரு லேகியத்தைப் பதனம்பண்ணி
சிந்தைமனந் தான்குளிரத் திருவைநோக்கி
மெய்தவறா பூரணமா யந்திசந்தி
மேன்மைபெற மண்டலமே கொண்டாயானால்
கொய்ததொரு தேகமதிற் காந்திமீறி
கோடிரவி உதயமது போலாந்தேகம்
சைதன்ய மானதொரு வாசிதானுந்
சதாபோதை பூரணமாய்த் தான்தானமே. 1037

ஆமப்பா வல்லாரை லேகியத்தில்
அப்பனே ஆதியுப்புச் சுண்ணஞ்சேர்த்து
ஆமப்பா அந்திசந்தி இருபோதையா
அரகரா நோயாளர் தனக்குயீய்ந்தால்
ஆமப்பா ஆஷ்டகுன்ம மஷ்டகாசம்
அடங்காத மூலமொடு பவுத்திரங்கள்
ஆமப்பா லேகியத்தைக் கொண்டபோது
அப்போதே தீர்ந்துவிடு மருளைப்பாரே. 1038

### பூரண லேகியம்

அருளான பூரணமா மூலிதன்னை
அறியிரது அரிதரிது அறிந்துகொண்டால்
திருவான மூலிதன்னை நன்றாய்வாங்கிச்
செயமான தயிலமதால் மைபோலாட்டிக்
கருவான பூரணமே கெதியென்றெண்ணி
காலைசந்தி யிருபோது கருணைவைத்து
உருவான தேகமதில் மைந்தாகேளு
உறுதியுடன் பணவிடைதா னுண்மைபாரே. 1039

உண்மையுடன் பணவிடைதான் கொள்ளும்போது
உத்தமனே வாசியது சுத்தமாகி
நன்மையுள்ள நவக்கிரகங் கெட்டியாகி
நாதாந்த அனுக்கிரகந் தன்னிலேதான்
தன்மையுள்ள நாதமடா காதிற்கேட்கும்
தன்பதியாஞ் சுழினையிலே தீபங்காணும்
உண்மையுட னாகாச கெவுனந்தொட்டு
நோக்குமுன்னே அண்டபதங் காணலாமே. 1040

ஆமப்பா அண்டபதங் காணுதற்கு
அருளான லேகியந்தா னொன்றுகேளு
நாமப்பா சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
நாதாந்த மானதொரு சோதிமூலம்
தாமப்பா மூலமென்ற மூலிதன்னை
சங்கையுடன் கொண்டுவந்து சடைமேலாக
வாமப்பால் பூரணத்தை விட்டுநல்ல
மார்க்கமுடன் சுத்திமுறை நன்றாய்ச்செய்யே. 1041

செய்யப்பா சுத்திமுறை நன்றாய்ச்செய்து
தீர்க்கமுடன் தானுலர்த்தித் தானேசெய்து
மெய்யப்பா சாதிக்காய் சாதிப்பத்திரி
மேலான கிறாம்புடனே யேலஞ்சுக்கு
வையப்பா வால்மிளகு தன்னோடொக்க
மார்க்கமுள்ள சூரணமே செய்துகொண்டு
நெய்யப்பா யிருபொடியு மொன்றாய்க்கூட்டி
நாதாந்த பூரணமு மொன்றாய்ச்சேரே. 1042

சேர்த்துநன்றா யொன்றாக ரேகித்தப்பா
தீர்க்கமுட னதற்குநிகர் பஞ்சதாரை
பார்த்திபனே வெல்லமுண்டு பனைவெல்லந்தான்
பத்தியுடன் சூரணத்தில் பதிவாய்க்கூட்டி
கார்த்துநின்றா யாதியந்தத் தயிலத்தாலே
கலந்துஒன்றாய்க் கல்வமதில் நன்றாயாட்டி
நேர்த்தியாய் மைபோலே நன்றாயாட்டி
நேர்மையுடன் பீங்கான்றன் பரணிசேரே. 1043

சேரப்பா பீங்கான்றன் பரணிதன்னில்
    செம்மையுடன் தான்சேர்த்துப் பதனம்பண்ணி
நேரப்பா நிலையறிந்து குருவைப்போற்றி
    நிசமான பூரணலே கியத்தைமைந்தா
காரப்பா பணவிடைதான் தினமுங்கொண்டு
    கருத்துறவே பூரணமாய் நின்றாயானால்
வீரப்பா கொண்டதொரு தேகந்தானும்
    வேதாந்தத் தேகமது விளங்கும்பாரே. 1044

பாரடா தேகமதிற் காந்திமீறி
    பரியான வாசியது சுழினைக்கேறி
நேரப்பா நிலைதனிலே தீபங்காணும்
    நிசமான பூரணத்தி நேர்மையாலே
காரடா கருணையுடன் சிவயோகத்தை
    கருவான மூலமதி னாவியாலே
தேரடா தேறிமனங் கொண்டாயானால்
    தேகவச்சிர காயமடா சித்திதானே. 1045

சித்தியுள்ள பூரணலே கியத்தைமைந்தா
    தீர்க்கமில்லா மாந்தருக்குச் செய்யவேண்டாம்
புத்தியுடன் தானிருந்து புருவமேவி
    பூரணமாம் லேகியத்தைப் புத்தியாக
பத்தியுட னான்டொன்று கொள்ளும்போது
    பாய்ந்தேறித் திரும்புவரக் கெவுனமுண்டாம்
சுத்தமுடன் தூரதிருஷ்டி நடத்தைகாணும்
    சுருதியுள்ள அண்டமது தோணும்பாரே. 1046

## பூரணகற்பம்

பாரப்பா யின்னமொரு பாகங்கேளு
    பரமான பூரணமுஞ் சத்தியுப்பும்
நேரப்பா நாதமுட னொன்றாய்க்கூட்டி
    நிலையான செயநீரில் கரைத்துமைந்தா
காரப்பா ரவிதனிலே காயப்போட்டு
    கசடறவே காய்ந்தபின்பு யெடுத்துநீயும்
சேரப்பா அமுர்தரச நாதநீரைத்
    சேர்த்துநன்றா யாட்டியதைச் சிமிழில்வையே. 1047

வையப்பா சிமிழ்தனிலே பதனம்பண்ணி
வரிசையுடன் சற்குருவைத் தியானஞ்செய்து
மெய்யப்பா மெய்நிறைந்த கற்பந்தன்னை
மேன்மையுடன் பணவிடைதான் கொண்டாயானால்
அய்யப்பா வென்றதொரு கபங்களெல்லாம்
அப்போதே அகன்றுவிடும் அபானத்தாலே
செய்யப்பா சிவபூசை சத்திபூசை
தீர்க்கமுள்ள வாலையுட பூசைதானே. 1048

தானென்ற வாலையுட பூசைசெய்து
தன்மையுட னாதார மூலத்தேகி
மானென்ற கேசரியில் மனக்கண்வைத்து
மகத்தான பூரணத்தைப் பூசைபண்ணி
கோனென்ற குருவருளால் தன்னைப்பார்த்து
குருவான பதிதனிலே தீபங்கண்டு
தேனென்ற பூரணமாய் நின்றாயானால்
தேகமடா திவ்யரசத் தேகமாச்சே. 1049

ஆச்சப்பா தேகமது தேவரூபம்
அடங்காத வாசியது அசைவானந்தம்
மூச்சப்பா சொலித்துநின்ற முக்கோணத்தில்
முத்தியுட னந்திடத்திற் சித்தம்வைத்து
பேச்சப்பா பேசாத மவுனங்கொண்டு
பிலமாக நின்றுஅடி முடியைப்பார்த்தால்
நீச்சப்பா நிலையாத அண்டந்தோற்றும்
நிசமான அண்டமெல்லாம் நீதானாமே. 1050

ஆமப்பா அண்டமெல்லாம் நீதானாகும்
அருளான பரமவெளி நீதானாகும்
வாமப்பா பூரணமு நீதானாகும்
மதியிரவி யானதுவும் நீதானாகும்
போமப்பா வாசியது நீதரனாகும்
பொருந்திநின்ற சிவயோகம் நீதானாகும்
தாமப்பா சகலமுமே நீதானாகும்
சதாபோத மானபரம் நீதானாமே. 1051

## தயிலம்

ஆமப்பா பொடுதலையுஞ் சவுரிகூட்டி
அப்பனே யிடைசரியாய்ச் சாருவாங்கி
நாமப்பா சொல்லுகிறோஞ் சாறுவீதம்
நல்லெண்ணெய் தான்கலந்து நயமதாக
தாமப்பா எண்ணைபடி யொன்றுக்குந்தான்
தன்மையுள்ள மிளகுபலஞ் சாற்றாலாட்டி
ஓமப்பா எண்ணைதனில் கரைத்துமைந்தா
உத்தமனே மெழுகுபதந் தன்னில்வாங்கே. 1052

வாங்கியந்த எண்ணைதன்னை வாரந்தோறும்
வரிசையாய் முழுகிவரக் குணத்தைக்கேளு
தாங்கிநின்ற கபாலவலி கபாலக்குத்து
சளமான பீனிசங்கள் தானேதீரும்
தூங்கலாய் நின்றதொரு சோம்புதீரும்
துன்பமுள்ள நீர்க்கடுப்பு துலைந்துபோகும்
ஏங்கியதோர் வறச்சியெல்லா மோடிப்போகும்
என்மகனே ராசாங்க வயித்தியங்காணே. 1053

காணவே யின்னமொரு பாகங்கேளு
கருவான பொடுதலையுஞ் சவுரிக்கொத்தும்
பூணவே யிருவகையி னிலையினோடே
புத்தியுடன் மிளகதுவுந் தானேசேர்ந்து
பேணவே பசுவின்பால் தன்னாலாட்டி
பிரியமுடன் பால்தனில் கரைந்துகொண்டு
தோணவே மெழுகுபதம் போலேகாய்ச்சி
சுகமாக யிளஞ்சூடாய் தலையிற்பூசே. 1054

பூசிநன்றாய்த் தான்தேய்த்து வெந்நீரிவிட்டு
புத்தியுடன் தான்முழுகி வந்தாயானால்
நேசமுடன் நாலாஞ்சு தினத்தில்மைந்தா
நீங்காத பீனிஷங்கள் நீங்கிப்போகும்
பாசமுள்ள கபாலஇடி கபாலக்குத்து
பறக்குமடா யிம்முறையை வெளியிடாதே
காசமுள்ள பலகாசந் தீர்ந்துபோகும்
கருவான வயித்தியமடா கண்ணைப்பாரே. 1055

பாரப்பா தேகமென்ற யென்சாணுக்கும்
 பதிவான பிரதானஞ் சிரசேயாகும்
நேரப்பா சிரசிலுள்ள வியாதிக்கெல்லாம்
 நிசமான பொடுதலையுஞ் சவுரிக்கொத்தும்
காரப்பா மிளகுடனே மூன்றுமல்லால்
 காசினியில் வேறேயொரு மருந்துமில்லை
சாரப்பா யிம்முறையிற் சார்ந்துகொண்டு
 தலையிலுள்ள வியாதியெல்லாஞ் சன்னியாடே. 1056

ஆடென்ற சொன்னமுறை மைந்தாகேளு
 அப்பனே யெண்ணெயிலே பாகம்பண்ணி
வீடென்ற உலகத்தோர் தனக்குமைந்தா
 விபரமுடன் முழுகிவர மெத்தநன்று
தேடென்ற சிவயோகி கற்பத்தோர்க்கு
 சிவசிவா பாலதனாற் செம்மையாகும்
மேடென்றும் பள்ளமென்ற மறிந்துகொண்டு
 வினையமுடன் வயித்தியத்தை விரும்பிப்பாரே. 1057

## நூல் விபரம்

விரும்பியப்பா வயித்தியங்கள் நன்றாய்ச்சொன்னேன்
 விபரமுள்ள ஆயிரத்தி யறுநூறும்பாரு
விரும்பியப்பா ரன்பதிலே ஆறுஞ்சொன்னோம்
 மேன்மைபெற முண்ணூறி லஞ்சுசொன்னோம்
விரும்பிப்பார் சூத்திரநூ ராறுஞ்சொன்னோம்
 வினையமுடன் அறுநூறு ஆறுசொன்னோம்
விரும்பிப்பா றாயிரமா யஞ்சுசொன்னோம்
 வேகமடா ஐந்நூறு ஆறும்பாரே. 1058

பாரப்பா வயித்தியத்திற் கோடாகோடி
 பாடினோம் வயித்தியத்தி லக்கோயில்லை
நேரப்பா மாந்தரீக மனந்தஞ்சொன்னோம்
 நிலையில்லா மானிடர்க்கு மனுவிக்கியானம்
சீரப்பா ஆயிரத்தில் நன்றாய்ச்சொன்னோம்
 சிவசிவா தத்துவமப் படியேசொன்னோம்
தேரப்பா வினோதவகை மோடியங்கம்
 தெரிந்துபதி னாயிரமாய்ச் செப்பினோமே. 1059

செப்பினோம் பூரணத்திற் திறமாய்நின்று
சீவசர ராசியெல்லாந் திறமாய்க்காண
ஒப்பிமனங் கொண்டுவெகு கோடாகோடி
உண்மையென்ற சாத்திரங்க ளனந்தஞ்சொன்னோம்
துப்புறவாய்ச் சொன்ன சாத்திரங்களெல்லாம்
துகையறிந்து தேடுதற்கு வயதோகொஞ்சம்
இப்புவியில் கொஞ்சவய தானாலென்ன
என்மகனே இருந்தெழுந்த யிடத்தைப்பாரே. 1060

பாரப்பா இருந்தெழுந்த யிடத்தைப்பார்த்து
பதிவான சத்திசிவ பூசைபண்ணி
நேரப்பா நின்றநிலை தன்னைப்பார்த்து
நிசமான திவ்யரச வமுர்தமுண்டு
காரப்பா கலைக்கியானங் கமலமேவிக்
கற்பூர தீபமென்ற கடாட்சம்பெற்று
மேரப்பா மேருகிரி வாசமானால்
வேதாந்தத் தேகமது சித்தியாச்சே. 1061

சித்தியுள்ள தேகமடா பிரமரூபஞ்
சிவசிவா மந்திரக்கலைக் கியானதேகஞ்
சுத்தமுள்ள தேகமதைத் தியானம்பண்ண
சோர்வொருநா ளில்லையடா சோதிதன்னை
நித்தமுமே கண்ணுமனக் கண்ணால்நீயும்
நின்றெழுந்த வாசியினாற் தன்னைப்பாரு
பத்தியுள்ள மனதாலே பார்த்தாயானால்
பரமகயி லாசமென்ற தேகங்காணே. 1062

## சதுரகிரி பொதிகை விபரம்

காணவே தேகமிது சதுரகிரிமைந்தா
கருணைவளர் சிரசதுதான் பொதிகைக்கும்பம்
தோணவே அக்கினிதான் மறையோனாகும்
சுகமான வாசிஅகத் தீசராகும்
ஊணவே நின்றமனக் கண்தான்மைந்தா
உற்றகலைக் கியானமென்ற சோதியாகும்
பேணவே நின்றதொரு ஆறாதாரம்
பெருகிநின்ற பரந்தானே மாய்கையாச்சே. 1063

மாயமென்ற தேகமதை யறிந்துகொண்டு
மகத்தான சிவரூப மிதுவென்றெண்ணி
தாயகமா யனுதினமுந் தன்னைப்பார்த்து
சதாபோத வாசிமலர் தன்னைவாங்கி
நேயமுடன் நிட்சயமாய்ப் பூசைபண்ணி
நின்றார்கள் தேவரிடி யனந்தகாலம்
காயமென்ற காயமதைக் கண்டுகொண்டால்
கயிலாச வாசமதாய் வாழலாமே. 1064

### கட்டு வகை

ஆமப்பா வாழ்வதற்குச் சூட்சங்கேளு
ஆதிநில வுப்பறிந்து உப்பைவாங்கி
ஓமப்பா யிஞ்சிமஞ்சள் தேனோடெக்க
உப்பறிந்து துப்புறவா யரைத்துக்கொண்டு
காமப்பா வாயுவென்ற சரக்குக்கெல்லாம்
தான்பூசிப் புடம்போடத் தானேகட்டும்
போமப்பா தேயுவென்ற சரக்கெல்லாந்தான்
புத்தியுட னீறியது பற்பமாச்சே. 1065

பற்பமொடு கட்டுவகைத் திட்டங்கண்டால்
பதிவான வாசிகே சரியிற்சேரும்
உற்பனமாய் வாசிகே சரியாய்சென்றால்
உண்மையென்ற மவுனபூ ரணநீரூரும்
கற்பமென்ற பூரணநீர் கொண்டாயானால்
காலனென்ற கபமகலுங் கண்துலங்கும்
விற்பனவி தட்சனமால்க் கண்ணைக்கண்டால்
மேல்கீழுந் தன்வசமாய்க் காண்பாய்பாரே. 1066

### ஆத்ம தத்துவம்

பாரப்பா தன்வசமாய்த் தன்னைக்காணப்
பதிவான பூதவகை யஞ்சும்பாரு
நேரப்பா ஞானமென்ற இந்திரியமஞ்சு
நிலையான பொரியஞ்சு புலனைந்துதான்
காரப்பா கர்மமென்ற இந்திரியமஞ்சு
கருவான அந்தமென்ற கரணம்நாலு
தேரப்பா யிதுவெல்லாம் ஆத்துமகத்துவம்
தெரிந்துகொண்டு இன்னமுமே செப்பக்கேளே. 1067

கேளப்பா வித்தியா தத்துவந்தானேழு
    கிருபையுள்ள சீவதத் துவமுமைந்து
மேலப்பா உள்க்கருவி முப்பத்தாறு
    விபரமுடன் கண்டுகொண்டு விண்ணைப்பற்றி
காலப்பா புரக்கருவி அறுபதுந்தான்
    கண்டுகொள்ளு தொண்ணூற்றார் தத்துவமாச்சு
சூழப்பா தத்துவத்தை நன்றாய்ப்பார்த்து
    சுருக்கமுள்ள அனுக்கிரகத் துறையில்நில்லே. 1068

துறையான அனுகிரகத் துறையில்நின்றால்
    சுத்தமுள்ள தத்துவங்கள் செந்தீப்பட்டு
திரையான திரையகன்று சோதிகாணும்
    தீபமென்ற போதநெறி யறிவானந்தம்
நிறையான அறிவான போதங்கண்டால்
    நிலையான சிவயோக மதுதானப்பா
வரையான வரைகடந்து திரையைநீக்கி
    மாசற்ற சோதியிலே மகிழ்ந்துகாணே. 1069

## வெண்சாரை கருநெல்லி விபரம்

காணவே கயிலாச மேருகிரிக்கப்பால்
    கமலமென்ற கண்ணாடிச் சுனையிலேதான்
பேணவே அச்சுனைக்கு மேலதாக
    பிலமாகச் சோதியென்ற விருட்சமுண்டு
தோணவே அவ்விருட்சந் தன்னில்நின்று
    சுகமான கண்ணாடிச் சுனையைப்பார்த்தால்
ஊணவே அச்சுனையில் நின்றுவாழும்
    உறுதியுள்ள நீர்ச்சாரை காணலாமே. 1070

காணலாம் நீர்ச்சாரை மாயாரூபம்
    கண்டவுடன் வசிவசியென் றுருவேசெய்தால்
பூணவே அச்சாரை கையில்தங்கும்
    பிரியமுடன் சாரைவள ரிடத்தில்மைந்தா
ஊணவே அந்தயிட மறிந்துகொண்டு
    ஊறுதியுடன் சாரையைநீ செலுத்தினாக்கால்
பேணவே சாரைவள ரிடந்தான்மைந்தா
    பிலமாக நின்றிலங்கும் வீடுதானே 1071

வீடான வீடறிந்து சாரைதன்னை
விபரமுடன் கண்டுமனங் கொண்டபின்பு
சோடான கருஞ்சாரை சுனைக்குங்கீழே
சுத்தமுடன் தான்புடைத்து வளமாய்க்காணும்
வாடாம லிடம்வலமாய்க் கண்டால்மைந்தா
மார்க்கமுட னிடமறிந்து கொண்டாயானால்
சூடான மூலஅனல் சொலித்துமைந்தா
துன்பமென்ற தீவினைகள் சுத்தமாமே. 1072

சுத்தமுடன் கருநெல்லிப் பழத்தைமைந்தா
சுகமாக உண்டுருசி காண்பதற்கு
வித்தான விந்துநீர் தன்னைவாங்கி
விபரமுடன் தான்பொசிக்க ருசியுண்டாகும்
சித்தான சித்தனையே கண்டபோது
சேர்ந்துநின்ற நாதவிந்தால் தேகஞ்சித்தி
சத்தான சித்துதனைத் தானேகண்டு
சாயுச்ச மோட்சகெதி தன்னைக்காணே. 1073

## புரியட்டகம்

காணவே புரியட்ட மெட்டுங்கேளு
கதித்தெழுந்த பூதமைந்து நாதமொன்று
தோணவே விந்தொன்று சத்தியொன்று
துகையான புரியட்ட மெட்டுமாச்சு
பேணவே புரியட்ட மெட்டும்பார்த்தால்
பெலமான சீவகளை நாலுந்தோற்றும்
ஊணவே சீவகளை கண்டாயானால்
உத்தமனே சகலசித்துந் தானாய்பாரே. 1074

## சீவகளை விபரம்

பாரப்பா சீவகளை நாலுதானும்
பரிவான பூரணமாய் நின்றுதய்யா
நேரப்பா பூரணத்தைச் சொல்லக்கேளு
நிசமான ஒளிப்பாழாய் நின்றதொன்று
காரப்பா வெளிப்பாழாய் நின்றதொன்று
கருவான வெளியொளிப்பா ழானதொன்று
சாரப்பா நிற்குணப்பா ழொன்றுமாச்சு
சாரியான சீவகளை நாலுங்காணே. 1075

காணவே சீவகளை நாலும்பார்த்து
கருணையுடன் பூரணமாய் நின்றாயானால்
ஊணவே ஆதார மாறாதாரம்
ஊண்மையுடன் தானறிந்த மேலாதாரம்
பேணவே ஆதார மீறாருக்கும்
பெலமான வாசியடா சுவாசத்தந்தம்
தோணவே அந்தமென்ற ஆதியந்தம்
தொடுகுறிபோற் சொல்லுகிறேன் தேகமாச்சே. 1076

ஆச்சப்பா தேகமென்ற ஆதாரத்தில்
அவத்தையென்ற அஞ்சையுமே சொல்லக்கேளு
மூச்சப்பா லாடத்திற் சாக்கிரந்தானென்று
முனையான கண்டத்திற் சொற்பனந்தானொன்று
நீச்சப்பா மார்பின்கீழ் சுழுத்தியொன்று
நிசமான உந்தியிலே துரியமொன்று
வீச்சப்பா விந்தின்மேற் துரியாதீதம்
விளங்கிநின்ற அவத்தைஅஞ்சுங் கண்டுகொள்ளே.1077

கொள்ளப்பா அவத்தையஞ்சுங் கண்டுகொண்டு
குறியறியச் சாகரத்தில் மனதைவைத்து
விள்ளப்பா உந்தியிலே துரியம்பார்த்து
வேதாந்த விந்தின்மேற் துரியாதீதம்
நில்லப்பா அந்தநிலை தன்னிலேதான்
நீமகனே மூன்றையுமே நன்றாய்ப்பார்த்து
தள்ளப்பா சொற்பனமுஞ் சுழுத்திரெண்டும்
சங்கையுடன் பாராதே தன்னைப்பாரே. 1078

தன்மைகத் தானறிந்து வாசியேறித்
தானவனாய்த் துரியதீ தத்தில்நின்று
கண்ணைமிகத் தானறிந்து உந்திபார்த்து
கருணைவளர் துரியமதில் காலையூணி
நன்னயமாய்ச் சொற்பனமுஞ் சுழுத்திநீக்கி
நாட்டமுடன் சாக்கிரத்தில் நயமாய்நின்றால்
விண்ணைமிகத் தான்கடந்த சோதிபாதம்
வேதாந்த உச்சியிலே விளங்கும்பாரே. 1079

விளங்கிநின்ற உச்சியிலே மனதைநாட்டி
வேதாந்த நயனமதாற் பார்க்கும்போது
களங்கமற்ற சோதியடா கண்ணிற்காணும்
கற்பூர தீபவொளிக் காட்சியாலே
உளங்கனிந்து ஆதாரம் நன்றாய்க்காணும்
உத்தமனே வாசியது உறுதியாகும்
முளங்கிநின்ற நாதவொலி காதிற்கேட்கும்
மூச்சறிந்த பேச்சதினாற் சத்தம்பாரே. 1080

**வேதைத் துகை களங்குவகை 551**

சத்தமுள்ள வேதையுட துகையயேதென்றால்
சங்கையில்லாக் களங்குவகை யென்னசொல்வேன்
பத்தமுடன் ஐநூத்தி யன்பத்தொன்று
பதிவான களங்குவகை யறிந்துகொள்ளு
சுத்தமுடன் களங்குவகை யறிந்துகொண்டால்
சுகமான வேதைமுகங் காணலாகும்
புத்தியுடன் வேதைமுகங் கண்ணிற்கண்டால்
பூரணமாய்ச் சிவயோகம் புனிதம்பாரே. 1081

**செந்தூரத்துவகை 1010**

பாரப்பா செந்தூர வகையயேதென்றால்
பத்தியுடன் னாயிரமும் பத்துமாச்சு
நேரப்பா ஆயிரமும் பத்துமாக
நின்றிலங்குஞ் செந்தூரந் தன்னைப்பார்த்தால்
காரப்பா கல்மலைகள் வேதையாகும்
கருவான கற்பமது உறுதியாகும்
பேரப்பா சொன்னவகை ஆயிரத்துப்பத்தும்
பெரிதான புத்தியினா லறிந்துபாரே. 1082

**பற்பவகை 705**

அறிந்துபார் குருபற்ப வகையயேதென்றால்
அப்பனே சொல்லுகிறேன் எழுநூற்றஞ்சு
விரிந்துநின்ற பற்பவகை யெழுநூற்றஞ்சு
மெஞ்ஞான குருதேசி தன்னாற்கண்டால்
தெரிந்துகொண்ட வேதைமுகந் தெளிவாய்க்காணும்
தெளிந்தமன துறுதியினாற் தேகஞ்சித்தாம்
வருந்திமனங் குவிந்தெழுந்த வாசியாலே
மகத்தான சிவயோகம் வருந்திக்காணே. 1083

காணவே வருந்திமனங் கொண்டுமைந்தா
கருவான உலகமதில் வாழும்போது
ஊணவே உலகமதுக் குறுதியான
உத்தமனே பொருளோடே அருளும்வேணும்
பூணவே செபம்வேணுந் தவமும்வேணும்
பொருந்திநின்ற வாசியுட திறமும்வேணும்
தோணவே வாசியுட திறத்தால்மைந்தா
சுத்தமுடன் சமாதியஞ்சுஞ் சுத்தமாமே. 1084

### மெழுகுவகை 307

சுத்தமுள்ள மெழுகுவகை சொல்லக்கேளு
சொல்லுகிறேன் முன்னூத்தி யேழுமாச்சு
சித்தமுள்ள சித்தமதாய் முன்னூத்தியேழும்
செம்மையுடன் வகைதெரிந்து செய்துகொண்டால்
பத்தமுள்ள நவலோகந் தன்னிலேதான்
பதமான மெழுகுசத்தே பட்டுதானால்
வெத்தியுள்ள வேதையடா கண்கொள்ளாது
விஞ்சையென்ற மெழுகினுட வேகந்தானே. 1085

வேகமென்ற வாசியைத்தான் கார்க்கவேணும்
வேதமொடு சாத்திரங்கள் பார்க்கவேணும்
ஆகமுடன் சிவதபங்கள் செய்யவேணும்
அறிவான போதசிவ யோகம்வேணும்
பாகமுடன் பலசமயந் தானேதானாய்
பதிவான மனதுருமை யாகவேணும்
ஏகமுடன் எங்குமதாய் நிறைந்தசோதி
யிருதயமே தானாக யிருந்துபாரே. 1086

### செயநீர் வகை 105

பாரப்பா செயநீரின் வகையைக்கேளு
பாலகனே யென்னசொல்வே னூத்தஞ்சப்பா
காரப்பா நூத்தஞ்சு வகையைநீயும்
கருவான செயநீரைக் காணும்போது
வீரப்பா கண்டதொரு பாடாணங்கள்
மெய்யான காரசா ரங்களெல்லாம்
நேரப்பா கட்டாகு மெழுகுமாகும்
நிலையான வேதையுமாய் நிசமுமாமே. 1087

நிசமான நிசமதிலே நின்றால்மைந்தா
நினைத்தபடி முடிக்கும்வகை சும்மாபோமோ
திசமான கேசரியே கெதியென்றெண்ணி
தீர்க்கமுடன் பூரணமாய் நின்றாயானால்
பிசகாமல் வாசியது பிலனாய்நிற்கும்
பிராணமய மானசிவ சோதிகாணும்
வசமான சோதியிலே மனக்கண்வைத்து
மனமகிழ்ந்து மனக்கண்ணால் காட்சிபாரே. 1088

## திராவக வகை 66

காட்சியென்ற காட்சியிலே மைந்தாகேளு
கருவான திராவகந்தா னென்னசொல்வேன்
நீச்சென்ற திராவகத்தின் வகைதான்பார்த்தால்
நிசமான வகையதுவும் அறுபத்தாறு
ஆச்சப்பா அறுபத்து ஆறுவகைதன்னை
அறிந்துநீ திராவகத்தை யன்பாய்ச்செய்தால்
மூச்சென்ற பாடாண மறுபத்தினாலும்
முக்கியமாய் முன்னடங்கிக் கட்டும்பாரே. 1089

பாரப்பா பாடாண நவலோகங்கள்
பதிவான உபசரங்கள் காரசாரம்
நேரப்பா இனமறிந்து தோய்த்துவாட்டில்
நின்றிலங்குந் திராவகத்தால் நிசமாய்க்கட்டும்
வீரப்பா கொண்டதொரு நவலோகத்தில்
விதவிதமாய் நின்றஉப ரசங்களெல்லாம்
பேரப்பா கொண்டுநின்ற திராவகத்தால்
பிறட்டியதைப் புடம்போட நீறுங்காணே. 1090

காணவே காரசா ரங்கள்தன்னைக்
கருவாகத் திராவகத்தால் தோய்த்துமைந்தா
ஊணவே ரவிதனிலே வைத்துப்பார்த்தால்
உறுதியுள்ள ரவியனலில் மெழுகாய்ப்போகும்
பேணவே கருவிபரம் நன்றாய்ப்பார்த்து
பிரியமுடன் திராவகத்தைச் செய்துகொண்டு
தோணவே நினைத்தபடி வேதைபாரு
சுகமாகத் தேகமதைச் சுத்திபண்ணே. 1091

பண்ணப்பா தேகமென்ற ஆலயத்தை
　　பதிவாகச் சுத்திபண்ணி யிருந்தாயானால்
பொன்னப்பா பொன்னதுபோற் புனிதமாகும்
　　புனிதமுடன் நின்றதினாற் களையுண்டாகும்
எண்ணப்பா வென்றுஅந்த ஆலயத்தை
　　எண்ணாமல் வேற்றுமையா யிருந்தாயானால்
மண்ணப்பா தான்மீறித் தூசிசெத்தை
　　மண்டியது தான்தகர்ந்து மடிந்துபோமே. 1092

மடியாம விடியாமல் மனதுகூர்ந்து
　　மார்க்கமுடன் தன்னகத்தைச் சுத்திபண்ணி
யிடியாமல் நீயிருந்து வாழ்ந்துகொண்டால்
　　ஏகநிறா மயமான சோதிகாணும்
அடியான மூலமதில் மனதைநாட்டி
　　ஆனந்த மதியமுர்தம் அப்போவுண்டு
முடியான கேசரியில் நின்றாயானால்
　　முத்தியுள்ள சித்தமதாய் வாழலாமே. 1093

## நவலோக நீறு 51

ஆமப்பா நவலோக நீற்றுவகைதானும்
　　அப்பனே அன்பத்து ஒன்றுமாச்சு
ஓமப்பா நீற்றுவகை அன்பத்தொன்றும்
　　உண்மையுள்ள கருவகைக ளறிந்துகொண்டு
தாமப்பா தன்னிலையே போதமென்று
　　தன்மையுடன் தானீத்திக் கொள்வாயானால்
வாமப்பால் பூரணத்தின் மகிமையாலே
　　மகத்தான வேதையடா கண்கொள்ளாதே. 1094

கண்கொள்ளாக் காட்சியைப்போற் சோதிகாணும்
　　கருவாக நவலோக நீற்றினாலே
விண்காணும் அண்டமெல்லாந் தானேகாணும்
　　வேதாந்த வாசியது நிலைநின்றாடும்
முன்காணும் பின்காணும் யெல்லாங்காணும்
　　முத்திதரு மணிவாசல் மோட்சங்காணும்
தன்காலைத் தானறியா மடையர்தன்னை
　　தன்னறிவால் தானகற்றி விண்ணைப்பாரே. 1095

விண்ணைப்பார் மண்ணைப்பார் தன்னைப்பாரு
வேதமென்ற வாசிநிலை வேகம்பாரு
கண்ணைப்பார் மனக்கண்ணால் தன்னைப்பாரு
கருவுருவாய் நின்றதொரு காலைப்பாரு
தன்னைப்பார் காலறிந்து தலைமேற்கொள்ளத்
தன்னிலையை யறியாத சவங்கல்மாடு
பெண்ணைப்பார்த் தேங்கியவன் பிலமுங்கெட்டு
பேய்முனியும் நாய்முகமாய்ப் பேசுவானே. 1096

பேசுமொழி தனையறிந்து பேசவேணும்
பிசகாமல் வாசிதனை நிறுத்தவேணும்
நேசமுடன் வாசிதனை நிறுத்திக்கொண்டு
நேர்மையுடன் சிவயோகத் திருக்கவேண்டும்
பாசமுடன் சிவயோகத் திருந்துகொண்டு
பதியான கேசரியில் மனக்கண்வைத்து
வாசமுட னாகாச உச்சிமீதில்
மகத்தான சோதிதனை வணங்கிப்பாரே. 1097

**சிங்கி வகை 7**

பாரப்பா சிங்கியென்ற சிங்கிதன்னை
பதிவான சிங்கிவகை யேழுமாகும்
நேரப்பா சிங்கிவகை யேழுஞ்செய்தால்
நிலையான கல்மரங்க ளெல்லாந்தங்கம்
காரப்பா கருவகைகள் கருவாய்க்கண்டு
கருணையுடன் சிங்கிவகை கருவாய்ச்செய்தால்
பேரப்பா சிங்கியுட வாசம்பட்டால்
பெரிதான நவலோகந் தங்கமாச்சே. 1098

தங்கரதி மாதுதன்னை யங்கமாகத்
தன்னறிவாற் தானிருந்து பூசைசெய்தால்
எங்குமடா தங்கமய மாகக்காணும்
என்னசொல்வேன் சிங்கியுட யியல்புதன்னால்
மங்காது சீவகளை சோதிபோலே
மார்க்கமுட னின்றிலங்கு மனதாய்ப்பாரு
சங்கையுடன் தன்னறிவாற் தானேபாரு
சதாகோடி வேதைமுகங் காணலாமே. 1099

காணலாங் கண்குளிரத் தங்கத்தாயை
கண்டுமன மகிழ்ச்சியினால் வாசித்தாயை
பேணலாம் வாசியினால் யோகத்தாயை
பிலமான அறிவதனால் தீபத்தாயை
தோணலா மனங்குவிந்து சொன்னகாட்சி
சொன்னமொழி தனையறிந்து சோதிபார்த்தால்
வானெல்லாஞ் சென்றுவரக் கெவுனமுண்டாம்
மகத்தான சிங்கியைநீ வணங்கிப்பாரே. 1100

### தயிலவகை 7

வணங்கிமன துறுதியினால் சிங்கிபார்த்து
மார்க்கமுடன் தயிலவகை சொல்லக்கேளு
இணங்கிநின்ற தயிலமதின் வகைதான்யேழு
இன்பமுடன் கருவறிந்து தயிலஞ்செய்தால்
பணங்களென்ற பாடாண முழுதுங்கட்டும்
பதிவான நவலோகம் வேதையாகும்
குணங்களொரு மனதாகித் தயிலந்தன்னை
கூர்மையுடன் கண்டறிந்து செய்துபாரே. 1101

பாரப்பா தயிலவகை யறிந்துசெய்தால்
பதிவான தேகமதுக் குறுதியாகும்
நேரப்பா வாசியது அகலாதய்யா
நிசமான அறிவுகளு மங்காதய்யா
தேரப்பா தயிலவகை கண்டுதேறி
தெளிவான அறிவதனாற் தீபம்பார்த்து
சாரப்பா சார்வான தலத்திலேதான்
சதாபோதை பூரணமாய்த் தானேகாணே. 1102

### குளிகை வகை 1008

காணவே தயிலவகை தன்னைக்கண்டு
கருவான குளிகைவகை யென்னசொல்வேன்
தோணவே குளிகைவகை தன்னைக்கேளு
சொல்லுகிறே னாயிரத்தி னெட்டுமாகும்
பேணவே தானிருந்து குளிகைசெய்தால்
பேரண்டஞ் சித்தண்டம் ரெண்டுங்காணும்
பூணவே குளிகையுட மார்க்கத்தாலே
பூலோக ராசரிடி யாகலாமே. 1103

ஆகமுடன் சற்குருவின் கடாட்சத்தாலே
ஆதியந்தப் பூரணத்தாற் குளிகைசெய்தால்
வேகமுடன் லோகமெல்லாஞ் சுத்திமீண்டு
விசையான அண்டமெல்லாங் கண்டுதேறி
தாகமுடன் பரவெளியிற் பட்சிபோலே
தன்னறிவால் நின்றுவிளை யாடலாகும்
பாகமுட னின்றுவிளை யாடுதற்கு
பத்திகொண்டு நாதவிந்தைப் பணிந்துபாரே. 1104

பாரப்பா நாதவிந்து ஒன்றாய்நின்று
பதிவான ரசகுளிகை மணியுமாச்சு
நேரப்பா ரசகுளிகை மணிக்கிமைந்தா
நிசமான நாதவிந்து சேனைபூட்டி
வீரப்பா கொண்டதொரு லகிரிபோட்டு
மேலான சீவகளை விசையுண்டாக்கி
தேரப்பா தன்னகமே அறிவாய்நின்று
தெளிவான பூரணத்திற் திறமாய்நில்லே. 1105

திறமான நாதவிந்தை யறியாமற்தான்
செகமெல்லாஞ் சீரணித்துச் செயலுமற்று
உறமான இருளதிலே ஒடுக்கமாகி
ஓமுடிந்து போகுதடா உலகவாழ்வு
பரமான வாழ்வதிலே பதிவாய்நின்று
பாலகனே கேசரியே வாசமாகி
சரமான சற்பமடா வாசியேறி
சரந்தொடுத்துச் சரமதனைத் தணிந்துபாரே. 1106

பாரப்பா சரமதனை யெடுத்துக்கொண்டு
பத்தியுடன் சாத்திரங்கள் கண்டுதேறி
நேரப்பா வாசியைநீ பூசைபண்ணி
நேர்மையுடன் சிவயோக நிலையைப்பற்றி
சாரப்பா பூரணமே கெதியென்றெண்ணி
சதாயோக போதநெறி தவறாமற்தான்
மேரப்பா தாரகமாய் வாசமாகி
விளையாடுஞ் சித்தர்வெகு சுத்தமாமே. 1107

சுத்தமுடன் ஞானநெறி பெற்றோர்க்கப்பா
சுகமாகக் காயாதி கற்பம்வேணும்
சித்தமுள்ள செந்தூர பற்பம்வேணும்
சிவசிவா களங்குவகை மெழுகுவேணும்
பத்தமுடன் செயனீர்கள் திராவகங்கள்
பரிவான சிங்கியொடு தயிலப்போக்கு
வெத்தியுள்ள ரசகுளிகை யிதுகளெல்லாம்
வேண்டிமனங் கொண்டவனே யோகிதானே. 1108

தானென்ற ஞானியென்றும் யோகியென்றும்
சதாபோதை யானபர தேசியென்றும்
கோனென்ற குருவான சித்தனென்றும்
குவலயத்தில் பேரெடுத்துக் கொண்டாரானால்
ஊனென்ற உடலைமிக அறியவேணும்
உத்தமனே காயாதி கற்பம்வேணும்
தேனென்ற அமுர்தரச பானம்வேணும்
சிவசிவா சமாதிநிலை தெளிந்துபாரே. 1109

பாரப்பா சரமறிந்து சரத்தைக்கொண்டு
பத்தியுடன் ரசவாதம் பார்க்கவேணும்
நேரப்பா நிலையறிந்து நிலையிலேதான்
நிலைதவறாக் கெவுனமதாய் நிற்கவேணும்
வீரப்பா கொண்டதொரு லகிரியெல்லாம்
விபரமுட னுண்டுநிலை காணவேண்டும்
தேரப்பா உண்டுநிலை கண்டுகொண்டு
சிவசிவா கூர்மம்போல் தெளிவாய்க்காணே. 1110

**நீத்தினக் கரு 9**

தெளிவாக நீத்தினத்தின் கருவைச்சொல்வேன்
செயமான வீரமொடு புனுகுபூரம்
ஒளியான குருவண்டு சூதஞ்சூடன்
உத்தமனே கார்முகியும் உறமுமாகும்
வழியான சவுக்காரச் சுண்ணமாகும்
வகையாக ஒன்பதையு மறிந்துகொண்டால்
பழியான சரக்குவகை லோகமெல்லாம்
பத்தியுடன் தானறிந்து நீத்தலாமே. 1111

**உருக்கினம் 15**

ஆமப்பா சகலமுமே நீற்றுதற்கு
அப்பனே கருமானஞ் சொன்னேனையா
ஓமப்பா உருக்கினத்தின் வகையைக்கேளு
உண்மையுள்ள சவாதுடனே சாரங்காரம்
சாமப்பா வெடியுப்பு கல்லுப்புத்தான்
சார்வான மால்தேவி துருசுரெண்டும்
நாமப்பா சொல்லுகிறேன் வெள்ளைக்குன்றி
நலமான வெள்ளையுட ஆமணக்குவித்தே. 1112

வித்தான தேனுடனே புறாவினெச்சம்
விஞ்சயான சத்திசிவ உப்புங்கூட்டி
முத்தான சரக்குவகை பதினைந்தப்பா
முறையோடே கண்டறிந்து கொண்டாயானால்
சித்தான பாடாணச் சரக்கெல்லாந்தான்
திறமான உபரசங்கள் காரசாரம்
பத்தாசை கொள்வதற்கு உருக்கலாகும்
பதிவாகக் கருவறிந்து பத்திப்பாரே. 1113

பாரப்பா நீத்தினமு முருக்கினமுங்கண்டால்
பரராச ராசமுனி நீயேயாகும்
ஆரப்பா அறிவார்க ளாருமில்லை
அரகரா கோடியிலே ஒருவன்காண்பார்
தேரப்பா கருவறிந்து கருவைக்கொண்டு
சிவசிவா பூரணமே கெதியென்றெண்ணி
மேரப்பா மேருகிரி வாசமாகி
வேதாந்த சித்தாந்தம் ரெண்டுங்காணே. 1114

**செந்தூர யினம் 7**

காணவே செந்தூர யினங்கள்தன்னை
கருணையுடன் சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
பூணவே மனதுறுதி யாகமைந்தா
புத்தியுடன் மால்தேவி மனோசீலையுமப்பா
தோணவே அப்புரகங் கெவுரிதுத்தம்
துடியான வெடியுப்புக் கெந்திகூட்டி
பேணவே சரக்குவகை யேழுங்கண்டால்
பிலமான செந்தூரம் பிசகாதென்னே. 1115

## வர்ண வகை 6

என்னவே வர்ணவகை சொல்லக்கேளு
ஏகாந்த நாதமுடன் தங்கஞ்சூதம்
வன்னமுன்ன சத்திசிவம் நிமிளையுப்பு
வகையான வர்ணத்துக் காதியாகும்
சொன்னமொழி தவறாமல் நன்றாய்ப்பார்த்தால்
சோதியென்ற தங்கமடா அதிககாந்தி
கண்ணிநிமை தானறிந்து காந்திகண்டால்
கயிலாச பூரணத்தைக் காணலாமே. 1116

காணலாம் ரவிமதியின் கலைகள்தன்னை
கண்டதினா லென்னபலன் கருவைக்கேளு
தோணலாம் ரவிமதியைக் கண்டபோது
சூச்சமுள்ள ரவிதனிலே மதியைச்சேர்த்து
பேணலா மிருகலையு மொன்றாய்நின்று
பிலமான அனுக்கிரகம் பீடத்தேகி
பூணலா மனதுருமை யாகநின்றால்
பொற்கமலச் சோதிவெகு சோதியாச்சே. 1117

சோதிமய மானகா வியத்தைப்பாரு
துலக்குகின்ற ஆயிரத்தி யிருநூறும்பாரு
நீதியுடன் பார்க்கையிலே மைந்தாகேளு
நிசமான பூரணத்தி நிலையில்நின்று
ஆதியென்ற நிலையறிந்து நிலையில்நின்றால்
ஆனந்த மானசிவ சூட்சந்தோனும்
சோதியென்ற சூட்சமதைக் கண்டால்மைந்தா
துரையான அட்டசித்தின் சூட்சம்பாரே. 1118

பாரப்பா அட்டசித்துச் சூட்சம்பார்த்து
பதிவாக பூரணத்தில் நின்றுகொண்டு
நேரப்பா நிலையறிந்து அனந்தங்கோடி
நிலையான சாத்திரங்கள் வெகுவாய்பாடி
மேரப்பா மேருநிலை யறிந்தோர்க்கையா
வேண்டிமன துருமையினா லீய்ந்தோம்பாரு
சீரப்பா அறியாத மூடர்கட்கோதான்
செப்பினேன் அரிதரிது தெளிந்தோர்பாரே. 1119

தெளிந்துமனந் தெளிந்தோர்க்குச் சாத்திரங்கள்சித்தி
சிவசத்தி யானதொரு மந்திரங்கள்சித்தி
அழிந்திநின்ற ஆதார மூலஞ்சித்தி
அதிலெழுந்த சகலகலை வாசிசித்தி
குளிர்ந்தகலை வாசியானால் யோகஞ்சித்தி
குறியான யோகமதால் ஞானஞ்சித்தி
நெளிந்துமனம் போகாமல் ஞானத்தேகி
நீமகனே நித்தியமுஞ் சோதிகாணே. 1120

## அட்டாங்கம் 8

காணவே அட்டாங்க மெட்டுங்கேளு
கருவாகச் சொல்லுகிறேன் கண்டுகொண்டு
பூணவே இமயமொடு நேமமைந்தா
புத்தியுட னாசனமும் பிராணாயந்தான்
தோணவே தாரணையும் பிரத்தியாகாரம்
சூட்சமென்ற சமாதியொடு தியானம்பத்தும்
பேணவே யெட்டுமடா அட்டாங்கயோகம்
பெருமையுள்ள காவியத்தைக் கண்டுதேறே. 1121

## இயமம் 11

தேரப்பா தேர்ந்துமனங் கண்டுகொள்ள
சிவசிவா இயமமென்றால் பதினொன்றாச்சு
நேரப்பா பதினொன்றுஞ் சொல்வேன்கேளு
நிசமான அங்கிஷமுஞ் சத்திஆர்த்தீகம்
காரப்பா விரதமொடு ஆச்சரியமதமும்
கண்டுகொள்ளு ஆட்சேபஞ் சமயமோடுதிருதி
சாரப்பா சவுசமொடு இதாகாரமைந்தா
சங்கையுடன் பதினொன்றுஞ் சார்ந்துபாரே. 1122

பாரப்பா சார்ந்துபதி னொன்றும்பார்த்தால்
பாலகனே இயமமென்ற தெல்லாஞ்சித்தி
நேரப்பா ஆதார நிலையுஞ்சித்தி
நேர்மையுடன் சகல்கலை யெல்லாஞ்சித்தி
காரப்பா அடிநடு முடிமூன்றொன்றாய்
கருவான கண்ணறிந்து கண்ணாற்பார்த்து
தேரப்பா இயமமென்ற தெல்லாங்கண்டு
தெளிந்தகொண்டு நேமமதைத் திறமாய்க்காணே. 1123

### நேமம் பத்து

காணவே நேமமது யீரஞ்சப்பா
கண்டுகொள்ள வகைவிபரஞ் சொல்லக்கேளு
பூணவே நேமமொடு தவசுசந்தோஷம்
புத்தியுடன் கண்டுகொள்ளு ஆஸ்தீகஞ்சந்தானம்
பேணவே சிவபூசை சிரவனஞ்சித்தாந்தம்
பிலமான லட்சயமும் விரதமொடுபத்தும்
தோணவே கண்டுமனம் கருதிப்பார்த்தால்
சுகமாக நேமவகை பத்துஞ்சித்தே. 1124

### ஆசனம் 9

சித்தமுடன் நேமவகை பத்துக்கண்டு
தெளிந்துசிவ யோகமது திறமாய்நிற்க
வெத்தியுள்ள ஆசனந்தா னொன்பதப்பா
விபரமுடன் சொல்லுகிறேன் விரும்பிக்கேளு
பத்தியுள்ள கொத்திகங்கோ முகமும்பத்மம்
பதிவான பீரம்பத்திரஞ் சிங்கமொடுமுத்த
முத்தியுள்ள மயூரமொடு சுகமதுவுமைந்தா
முதலான நவக்கிரகம் ஒன்பதுஆசனமே. 1125

ஆசனமாய் நின்றதொரு ஒன்பதையுங்கண்டு
அதிலிருந்து தவசுசிவ யேகாஞ்செய்தால்
பூசணமாய் நின்றிலங்கு மாசனந்தான்மைந்தா
புத்தியுட னாசனமே லிருந்துகொண்டு
வாசனையாய் மனதுகந்து வாசிபார்த்து
மனமகிழ்ந்து சிவயோக நிலையில்நின்று
நேசமுடன் பிராணாயஞ் செய்துகொண்டு
நிச்சயமாய்க் கற்பூர தீபம்பாரே. 1126

### பிராணா யாமம் 5

பாரப்பா கற்பூர தீபம்பார்க்கப்
பதிவான பிராணாய வகைதானஞ்சு
நேரப்பா வகையஞ்சு நன்றாய்க்கேளு
நிசமான ரேசகபூ ரகமுங்கும்பகம்
காரப்பா சவுபீசம் நிர்பீசமஞ்சும்
கண்டுகொண்டு பிராணாயம் நன்றாய்ப்பார்த்தால்
மேரப்பா மேருகிரி வாசமாகி
வேதாந்த சிவயோக முத்தியாமே. 1127

## பிரத்தி யாகாரம் 6

முத்தியுடன் சிவயோகத் திருந்துகொண்டு
மோட்சமென்ற பிரத்தியா காரந்தன்னை
சித்தியுடன் பார்க்கவென்றால் வகைதானாறு
தீர்க்கமுடன் சொல்லுகிறேன் சரீரயிந்திரியம்
பத்தியுள்ள பிராணனொடு காரணகாமியமும்
பாங்கான சறுவசங்கம் புத்தியுடனாறும்
சுத்தமுடன் கண்டறிந்து சித்தமொருமித்தால்
சுகமாக ஆறுவகைத் தாரணையைப்பாரே. 1128

## தாரணை 6

பாரடா தாரணைதா னாறுவகைதன்னை
பதிவான பூத்தா ரணைதானொன்று
நேரடா பிராணதா ரணைதானொன்று
நிசமான காரணத்தா ரணைதானொன்று
தேரடா தெய்வதா ரணைதானொன்று
சேர்ந்துநின்ற தத்துவதா ரணைதானொன்று
சேரடா பிரம தாரணைதானொன்று
சித்தமுட னாறுவகை தாரணைதான்பாரே. 1129

## தியானம் 10

பாரப்பா ஆறுவகை தாரணையில்நின்று
பதிவான தியானவகை பத்துங்கேளு
நேரப்பா சடாதார தியானமொன்று
நிசமான தேகமென்ற தியானமொன்று
காரப்பா மண்டலத்திற் தியானமொன்று
கருணையுள்ள பிராமாவின் தியானமொன்று
சாரப்பா மாலுடைய தியானமொன்று
சதாயோக ருத்திரனார் தியானங்காணே. 1130

காணவே தேவாதி தியானமொன்று
கண்கண்ட விசுவனுட தியானமொன்று
பூணவே பிரணவத்தின் தியானமொன்று
பொருந்திநின்ற நிராதார தியானமொன்று
பேணவே தியானவகை பத்தும்பார்த்து
பேரண்டங் கெதியெனவே நின்றாயானால்
தோணவே சமாதியிலே துலங்கலாகும்
சுத்தமுடன் சமாதியுட வகையைக்கேளு. 1131

## சமாதி 5

கேளப்பா சமாதியஞ்சு நன்றாய்ச்சொல்வேன்
கிருபையுள்ள தத்வலய சமாதியொன்று
சூளப்பா சவ்விகற்ப சமாதியொன்று
சுருக்கான நிருவிகற்ப சமாதியொன்று
வாளப்பா சஞ்சார சமாதியொன்று
மகத்தான ஆரூட சமாதியொன்று
ஆளப்பா அஞ்சுவகை சமாதியொன்று
அட்டாங்க யோகமதி லறிவாய்நில்லே. 1132

அறிவாகத் தானிருந்து அந்தத்தேகி
அறுபத்து நாலுவகை யறிந்துகொண்டு
விரிவாக நீயிருந்து பார்த்தால்மைந்தா
விண்ணடங்காக் காட்சியடா யென்னசொல்வேன்
குறியான குறிப்பறிந்து குருவைக்காத்து
குருவினுப தேசமதைக் குணமாய்ப்பெற்று
நெறியான நெறியறிந்து நெறியில்நின்றால்
நிச்சயமாய்ச் சகலசித்து மாடலாமே. 1133

## பஞ்ச பூதச் சரக்குகள்

ஆடவே அட்டசித்துந் தானேயாட
அடங்கிநின்ற பூதவகைச் சரக்குக்கேளு
போடவே காரவகை பதிமூன்றுந்தான்
பாங்கான பிருதிவியென் றறிந்துகொள்ளு
கூடவே சாரவகை பன்னிரெண்டுந்தான்
குறியாக அப்புவெனக் கூர்ந்துபாரு
வாடவே வைப்புவகை முப்பத்திரெண்டு
வரிசையுடன் தேயுவென மகிழ்ந்துகாணே. 1134

காணவே விளைவுவகை முப்பத்திரெண்டுங்
கருவான வாயுவெனக் கனிந்துபாரு
பூணவே உபரசம்நூத் திரண்டுபத்தும்
புத்தியுட னாகாச மென்றுபாரு
தோணவே வகையறிந்து பஞ்சபூதம்
சுத்தமுள்ள சரக்குவகை யறிந்துகொண்டு
பேணவே சத்துருமித் துருவைக்கண்டு
பிரியமுடன் சரக்குகளைக் கட்டிப்பாரே. 1135

பாரப்பா பிருதிவிதா னப்பைக்கொல்லும்
பாங்கான அப்பதுதான் தேய்வைக்கொல்லும்
நேரப்பா தேய்வுந்தான் வாய்வைக்கொல்லும்
நிலையான வாய்வதுதா னாகாசத்தில்
வீரப்பா கொண்டதிலே மடிந்துபோச்சு
வேதாந்த பஞ்சகர்த்தாள் கூத்திதாச்சு
சாரப்பா தன்னறிவாற் சார்ந்துகொண்டு
சகலகரு வேதைமுகஞ் சார்ந்துபாரே. 1136

### துருசு சத்துரு

பாரப்பா சத்துருமித் துருவைநீயும்
பாலகனே சுருக்கமுடன் கொஞ்சங்கேளு
நேரடா துருசுசத் துருவைக்கேளு
நிசமான சவுக்காரம் வங்கம்நாகம்
காரடா யிந்துப்பு காந்தஞ்சிங்கி
கல்சவடு பாடாணங் கல்லுப்புத்தான்
சேரடா அப்பிரக மிணங்கன்சூடன்
சிவசிவா அஞ்சனக்கல் சவுடுதொட்டி. 1137

தொட்டியுடன் சத்துருவை நன்றாய்ப்பார்த்து
துருசுதனைத் துரிதமுடன் சுண்ணம்பண்ணி
திட்டமுடன் வேதைமுறை நன்றாய்ப்பார்த்தால்
தேர்ந்துமனஞ் சிவுயோகத் திறத்தில்நிற்கும்
சட்டமுடன் சிவயோகத் திறத்தில்நின்றால்
சகலகலை வல்லசிவ யோகியாகும்
இட்டமுடன் சத்துருவாற் செயமேசெய்து
இன்பமுடன் மித்துருவை யிருந்துகாணே. 1138

### துருசுக்கு – மித்துரு

காணவே மித்துருவைச் சொல்வேன்மைந்தா
கருவான லிங்கமுடன் கெவுரிபண்ணை
பூணவே நிமிளையொடு கெவுரிசிலைபூரம்
பூரணமாஞ் சூதமொடு கெந்திவீரம்
தோணவே வெங்காரஞ் சாரமரிதாரம்
சுத்தமுள்ள துருசதற்கு மித்ருவாய்நிற்கும்
ஊணவே சத்துருவால் சங்காரம்பண்ணி
உத்தமனே மித்துருவா லுகந்துகாணே. 1139

## சாரத்தின் சத்துரு

காரப்பா சாரத்தின் சத்துருவைக்கேளு
கல்லுப்பு யிந்துப்பு படியிருகாந்தஞ்
சாரப்பா வளகிலுப்பு வங்கங்காரீயம்
கருவாக மடிந்தசுகக் கான்யேரண்டத்தோல்
வீரப்பா கொண்டகடல் னுரையுங்கல்சுண்ணம்
விசையான கிளிஞ்சியொடு சவுடுச்சத்துருவாம்
நேரப்பா சத்துருவாற் சாரந்தன்னை
நேர்மையுடன் கட்டிவிளை யாடிப்பாரே. 1140

## சாரத்தின் மித்ரு

பார்க்கவே சராச்சத் துருவைச்சொன்னேன்
பத்தியுடன் மித்துருவைப் பகரக்கேளு
ஏர்க்கவே செம்புடனே வங்கம்நாகம்
இசைவான நிமிளையொடு கெவுரிகல்நார்
சேர்க்கவே வெடியுப்பு லிங்கம்வீரம்
சிலையுடனே தாரமொடு கெந்திகாரம்
தீர்க்கவே சாரமதுக் கிதுதான்மைந்தா
சிவசிவா மித்துருவாய்த் தெளிந்துபாரே. 1141

## வெடியுப்பின் சத்துரு

தெளிந்துநின்ற வெடியுப்பின் சத்துருவைக்கேளு
திருவான அண்டமொடு சுரைக்காய்கெந்தி
நெறிந்துநின்ற தீமுருக்கல் சிங்கிதொட்டி
நிலையான நிலைகாந்தஞ் செம்பிரும்பு
அளியாத வெள்ளியுடன் துருசுகூடன்
அடங்கிநின்ற காரீயம் வெள்ளீயஞ்சவுடு
வளிந்துமே வெடியுப்புச் சத்துருவேயாகும்
மார்க்கமுடன் மித்துருவை வணங்கிக்கேளே. 1142

## வெடியுப்பு மித்துரு

கேளடா கடல்நுரையும் நிமிளைவெள்ளை
கெடியான ரோமமொடு நாகந்தந்தம்
வாளப்பா தாளகமுந் துத்தம்வீரம்
மகத்தான கல்லுப்பு காரம்லிங்கம்
ஆளப்பா படிகியுட னிந்துப்புத்தான்
அப்பனே வெடியுப்பு மித்துருவாய்பாரு
சூளப்பா சத்துருமித் துருவைப்பார்த்து
சுகமான சரக்குவகை யறிந்துகட்டே. 1143

## கல்லுப்பு சத்துரு

கட்டவே கல்லுப்புச் சத்துருவைக்கேளு
கருவான சிங்கிசிலை பழம்புளியுமாகும்
முட்டவே சவட்டுப்புப் பவழப்புத்து
முனையான வீரமொடு ராசவர்க்கம்
இட்டமுடன் இதுவெல்லாம் கல்லுப்புச்சத்துருவேயாகும்
இசைவான மித்துருவைச் சொல்லக்கேளு
திட்டமுடன் மித்துருவைக் கண்டுகொண்டு
சிவசிவா கல்லுப்பைச் செயமேபண்ணே. 1144

## கல்லுப்புக்கு மித்துரு

பண்ணப்பா கல்லுப்பின் மித்துருவைக்கண்டு
பதிவாக அப்பிரகம் லிங்கம்வங்கம்
பொன்னப்பா நிமிளையொடு தாளகமும் வெள்ளை
பொருந்திநின்ற வெங்காரம் கெவுரிநாகம்
கண்ணப்பா செம்பிரும்பு பூரமெல்லாம்
கல்லுப்பின் மித்துருவாய்க் கனிந்துகொண்டு
கண்ணப்பா சற்குருவா லறிந்துமைந்தா
நாட்டமுடன் சரக்குகளை நன்றாய்ச்செய்யே. 1145

## காரத்தின் சத்துரு

செய்யவே காரத்தின் சத்துருவைக்கேளு
சலாசத்து புளியுடனே அண்டஞ்சூடன்
நய்யவே சுண்ணமொடு பூரமெல்லாம்
நயமான காரத்தின் சத்துருவேயாகும்
பய்யவே காரமதைச் சத்துருவாற்கட்டி
பதிவான வேதைமுகம் நன்றாய்ப்பார்த்தால்
அய்யனே யென்னசொல்வே னதிககாந்தி
அப்பனே தங்கமய மாகும்பாரே. 1146

## காரத்தின் மித்துரு

பாரப்பா காரத்தின் மித்துருவைக்கேளு
பாடாண முபரசங்கள் லோகமெல்லாம்
நேரப்பா மித்துருவா யறிந்துகொண்டு
நிசமான சரக்குகளை உருக்கிப்பாரு
வீரப்பா கொண்டுநின்ற சரக்கெல்லாந்தான்
விபரமுடன் கட்டியது வேதையாகும்
தேரப்பா வேதைமுகங் கண்டுமைந்தா
சிவாயகுரு பாதமதிற் தெளிவாய்நில்லே. 1147

## சீனச் சத்துரு மித்ரு

தெளிவான சீனமதின் சத்துருமித்துருதான்
செம்மையுடன் சொல்லுகிறேன் நன்மையாக
ஒளிவான காரத்தின் சத்துருமித்துருதான்
உண்மையுள்ள சீனமதுக் குகந்துநிற்கும்
வழியான வழியறிந்து வகையுங்கண்டு
மார்க்கமுள்ள கருக்குருவின் மகிமையாலே
நெளியாமல் நின்றுகரை யேறிமைந்தா
நேர்மையுட நின்றதினா லெல்லாஞ்சித்தே. 1148

### தங்கத்தின் சத்துரு

சித்தான தங்கமதின் சத்துருவைக்கேளு
சிவசிவா சவ்வீரங் காந்தங்கெந்தி
வித்தான அண்டோடு கிளிஞ்சியப்பிரகம்
விசையான சவுட்டுப்பு அரிதாரஞ்சிங்கி
சுத்தான இணங்கனொடு கெவுரிலிங்கம்
சுகமாக கண்டருடன் வெள்ளைநாகம்
பத்தான குதிரைப்பல் கோமுகம்பொன்னம்பர்
பதிவான தங்கச்சத் துருவுமாச்சே. 1149

### தங்கத்தின் மித்துரு

ஆச்சப்பா தங்கமதின் சத்துருவைச்சொன்னேன்
அருள்பெருகு மித்துருவை யறியக்கேளு
பேச்சப்பா யானறிந்து சொல்லக்கேளு
பெரிதான தங்கச்சத் துருவைநீக்கி
காச்சப்பா மற்றதெல்லா மித்துருவேயாகும்
கருவதிலே கண்டறிந்து கருத்தாய்ப்பாரு
மூச்சப்பா முன்னிலையாய்ப் பார்த்தாயானால்
முத்தியுள்ள சித்துகளைக் காணலாமே. 1150

### ரசத்தின் மித்துரு

காணவே சூதத்தின் மித்துருவைக்கேளு
கருவாக நாகமுடன் காரீயம்வங்கம்
பூணவே வெள்ளிசெம்பு துருசுசாரம்
பொன்னான வெங்காரம் அப்பிரகந்துத்தம்
தோணவே கெந்தகமு மரிதாரம்வீரம்
துலங்கியே அப்பிரகம் பவழப்புத்து
பேணவே தீமுருக லஞ்சனக்கல்சிலையும்
பெலமான சூதத்தின் மித்துருவைப்பாரே. 115·

## சூதத்தின் சத்துரு

பாரப்பா மித்துருவை நன்றாய்ப்பார்த்து
பதிவான சத்துருவைப் பகரக்கேளு
நேரப்பா சிங்கியுடன் கெவுரிசத்திசாரம்
நிசமான யிரும்புடனே காந்தஞ்சூடன்
காரப்பா கல்சவுடு வெடியுப்புபூரம்
கலந்துநின்ற பூனீறு நிமிளைபொன்னம்பர்
தேரப்பா குதிரைப்பல் பாடாணத்தோடு
சிவசிவா சத்துருவென் றறிந்துகாணே. 1152

## இரும்புச் சத்துரு

காணப்பா யிரும்புக்குச் சத்துருவைக்கேளு
கருவான வெங்காரம் அண்டமப்பிரேகம்
பூணப்பா வெங்கலம் நிமிளைவங்கம்
பொருந்திநின்ற கிளிஞ்சியுடன் திருவுங்கெந்தி
பேணப்பா மனோசிலையும் சவ்வீரஞ்சாரம்
பெருகிநின்ற சிங்கியொடு கெவுரிவெள்ளை
ஊணப்பா சிலாசத்து பூனீரெல்லாம்
உத்தமனே யிரும்புசத் துருவாய்ச்சேரே. 1153

## இரும்புக்கு மித்துரு

சேரப்பா யிரும்புக்குச் சத்துருவைக்கண்டு
திறமான மித்துருவைத் தேர்ந்துகேளு
நேரப்பா செம்புவெள்ளி நாகங்காந்தம்
நிலையான கெவுரியொடு பூனாகம்பூரம்
சாரப்பா தங்கமொடு ராசவர்க்கம்
சங்கையுள்ள கெந்திசெம்பு பூரச்செம்பு
காரப்பா சூடன்முதல் மித்துருவேயாகும்
கைமுறையாய்க் கருவறிந்து கசிந்துகாணே 1154

## நாகத்தின் சத்துரு

காண்டா நாகமதின் சத்துருவைக்கேளு
கல்லுப்பு வெடியுப்புக் கிளிஞ்சியண்டம்
பேண்டா படிகமொடு வங்கந்தங்கம்
பிலமான திருவுடனே வெங்கலமும்வெள்ளி
ஊண்டா நண்டோடு மிருதார்சிங்கி
உத்தமனே வீரம்வெள்ளை வளகிலுப்பு
பூண்டா அபின்மிளகு அன்னபேதி
புத்தியுட னாகத்தின் சத்துருவாயெண்ணே. 1155

## நாகத்தின் மித்துரு

எண்ணியே மித்துருவைச் சொல்லக்கேளு
இரும்புசெம்பு காந்தமொடு நிமிளைசிலாசத்து
உண்ணியே கெவுரியொடு அப்பிரேகங்கெந்தி
ஓங்கியே சூதமொடு பூனாகஞ்சாரம்
வன்னியென்ற கருநாக மயூரச்செம்பு
மத்தான நாகத்தின் மித்துருவேயாகும்
கண்ணிறைந்த காட்சியினால் சத்துருமித்துருவை
கண்டறிந்து நின்றபடி காருவாய்க்காரே. 1156

## கருவங்கச் சத்துரு

கருவான காரீய சத்துருவைக்கேளு
கசகாத அயக்காந்தம் நிமிளையண்டம்
உருவான ராசவர்க்கம் கிளிஞ்சிநண்டோடு
உத்தமனே கெவுரியொடு கெந்திநத்தை
திருவான பூனீரு யிதுவெல்லாந்தான்
தீர்க்கமுள்ள காரீயச் சத்துருவேயாகும்
குருவான பதியறிந்து குருவைக்கண்டால்
குறித்தபடி கருவறிந்து திருத்தலாமே. 1157

## கருவங்க மித்துரு

திருத்தமுள்ள சத்துருவைச் சொன்னேன்மைந்தா
தீர்க்கமுடன் மித்துருவைச் செப்பக்கேளு
வருத்தமில்லாச் சூதமொடு வங்கம்வெள்ளி
வகையான மயூரமொடு நாகம்செம்பு
உருத்தான பூனாக மிதுவெல்லாந்தான்
உத்தமனே மித்துருவென் றுகந்துபாரு
கருத்தான கருத்துவைத்துப் பார்த்தாயானால்
கனகமென்ற காட்சியைத்தான் காணலாமே. 1158

## புடநிதானம்

காணவே புடம்போட நிதானங்கேளு
காடையென்ற புடமதுக்கு யெருத்தானொன்று
பேணவே கவுதாரி யெருமூன்றாகும்
பிலமான குக்குடந்தான் யெருபத்தாகும்
ஊணவே வராகமெரு ஐம்பதாகும்
'உத்தமனே கனபுடந்தான் யெருநூறாகும்
பூணவே கெசபுடந்தான் சொல்லக்கேளு
புகலாதே தட்டெரு ஆயிரந்தானாமே. 1159

## யெரிப்புத் திட்டம்

ஆமப்பா யெரிப்புமுறை சொல்லக்கேளு
அப்பனே தீபமது விறகொன்றாகும்
ஓமப்பா கமலமது விறகோரெண்டு
உத்தகா டாக்கினிதான் விறகஞ்சாகும்
தாமப்பா யெரிப்புமுறை நன்றாய்ப்பார்த்து
தன்மையுள்ள திராவகங்கள் செந்தூரங்கள்
நாமப்பா சொன்னபடி கருவைப்பார்த்தால்
நல்லபிறை யோகமெல்லாம் நாடலாமே. 1160

**ஊத்து முறை**

ஆமப்பா ஊத்துமுறை துருத்திகேளு
அப்பனே ஊத்துக்கு துருத்தியொன்று
நாமடா உருக்கினத்துக் கய்யாகேளு
நாட்டமுடன் துருத்தியது ரெண்டோயாகும்
தாமடா சகலமுமே சத்துவங்கச்
சங்கையுடன் சொல்லுகிறேன் துருத்திநாலு
ஓமடா யிம்முறையாய்ப் பார்த்தாயானால்
உத்தமனே சகலமுந்தான் சித்தியாமே. 1161

**சரக்கு முடிக்குங்காலம்**

சித்தமுடன் அற்பசியுங் கார்த்திகைமார்கழியும்
தீர்க்கமுட னுருக்கினதின் காலமாகும்
பத்தமுடன் தைமாசி பங்குனிதனிலே
பதிவான செயநீரின் காலமாகும்
புத்தியுடன் சித்திரைவை காசிஆனி
பொருந்தியிந்த மூன்றினிலே குருமுடிக்கலாகும்
சுத்தமுடன் ஆடிஆவணி புரட்டாசியுமே
சுகமாகத் திராவகங்கள் செந்தூரம்பண்ணே. 1162

பண்ணுவது செந்தூரந் திராவகமுஞ்செயனீர்
பாங்கான மெழுகுடனே பற்பவகையெல்லாம்
திண்ணமுடன் காலாகா லங்கற்கண்டு
தீர்க்கமுள்ள கருமுறைகள் குருமுறைகள்கண்டு
எண்ணமுடன் கைமுறைகள் தப்பாமற்தான்
யேகாந்த மாயிருந்து பார்த்தாயானால்
சொன்னபடி தான்முடித்துக் கொள்ளலாகும்
சோதிதரு வாசியிலே சுகமாய்நில்லே. 1163

**ஆகாத வழியுடையவன்**

சுகமான சுகமறிய மாட்டாமற்தான்
தொல்லுலகில் மானிடர்கள் வேடம்பூண்டு
செகமாய்கை யதனிலுள்ள பூசைசெய்து
தீனியினி லாசைவைத்துத் தின்பான்மட்டை
அகமான சுகமதனை யறியாமல்தான்
அப்பனே வேர்தனைக்குக் காப்புக்கட்டி
பகவான்போல் தானிருந்து கண்ணைமூடி
பார்க்கும்நிலை யறியாமல் பசப்புவானே. 1164

வானான வடிவுதனை யறியமாட்டான்
மகத்தான பூமிதனைக் காணமாட்டான்
ஊனான உரிசைதனை யரியமாட்டான்
உறுதியுள்ள வாசிநிலை காணமாட்டான்
தேனான அமுர்தரசங் காணமாட்டான்
திருவிருந்த மூலமதை யறியமாட்டான்
கோனான குருசமுகம் காணமாட்டான்
குவிந்தெழுந்த பூரணத்தின் குறிகாணானே. 1165

குறிகாணா மடையர்வெகு கோலங்கண்டு
கூடுகட்டி யதனிலொரு பீடம்போட்டு
நெறிகாணாப் பாவிகள்தா னிருந்துகொண்டு
நிசமில்லா யெந்திரங்கள் சிலைகள்வைத்து
பரிகாணாப் பாவிகள்தான் மலைத்துக்கொண்டு
பதியாமல் மனதுளன்று பரதவித்து
திரிகரண சுத்திதனை யறியாமல்தான்
சித்தமுள்ள பெரியோரைப் பழிப்பான்பாரே. 1166

## ஞான யோகம்

பழியான உலகமதை யறியவேணும்
பதிவான பெரியோரை வணங்கவேணும்
முழியாகத் தானிருந்து முதுகண்பார்த்து
முனையான சுழினையி லேறவேணும்
வெளிப்பார்வை கொண்டதினா லேதுண்டப்பா
வேகமுட னுள்புகுந்து மேலேபாரு
நெளிப்பாக நின்றதினா லொன்றுமில்லை
நீமகனே அட்டதிசை வட்டம்பாரே. 1167

வட்டமென்ற சுழினையுட திட்டம்பார்த்தால்
மதிகதிரின் சோதியடா கண்ணேகூசும்
திட்டமுடன் கண்ணறிந்து கூசும்போது
திருத்தமுட னிருத்திநன்றாய் நிருத்திப்பாரு
இட்டமுடன் தானிருந்து நிருத்திப்பார்த்தால்
யேகவெளி தீக்காடு யேகாந்தத்தீ
சட்டமுடன் யேகாந்தத் தீயைமைந்தா
தனித்திருந்து வாசியினா லூதிப்பாரே. 1168

ஊதையிலே வாசியது ஒன்றாய்சேர்ந்து
ஓமுடிந்து தான்வளர்த்து செந்தீப்பற்றி
பூதையிலே போதைவெகு நீதமாச்சு
பொற்கமல நந்தியொளி காணலாச்சு
வாதையிலே போகாமற் போதைபாரு
மகிழ்ந்திருந்து மதியமுர்தம் வாசியாலே
பாதியிலே பிசகாமல் நேரேநின்றால்
பார்க்குமனஞ் சுத்தமடா யார்க்குந்தானே. 1169

### வெங்காரக் கட்டு

ஆர்க்கும்வெகு சுகங்காண மைந்தாகேளு
ஆதியென்ற நாதமடா பூமிநாதம்
ஏர்க்கவே பூமியுட நாதம்வாங்கி
என்மகனே அதுக்குநிகர் சாரம்சேர்த்து
மார்க்கமுடன் தானரைத்து வழித்துநல்ல
மகத்தான காரமதுக் கங்கிபூட்டி
சேர்க்கையுடன் ரவிமுகத்தில் காயவைத்துத்
திறமாக மண்சீலை வலுவாய்ச்செய்யே. 1170

### செம்பூச் சுத்தி

செய்யப்பா மண்சீலை வலுவாய்ச்செய்து
தீர்க்கமுடன் வகையறிந்து புடத்தைப்போடு
மெய்யப்பா புடமாறி யெடுத்துப்பார்த்தால்
வேகமுள்ள காரமது கட்டிநிற்கும்
கையப்பா தவறாம லெடுத்துநீயும்
களிம்பான செம்பதுதா னுருகும்போது
வையப்பா காரமது பத்துக்கொன்று
மார்க்கமுடன் தானுருக்கி யெடுத்துப்பாரே. 1171

எடுத்துமிகப் பார்க்கையிலே செம்பிலேதான்
இருந்துகளிம் பற்றதுவுஞ் சோதியாச்சு
தொடுத்தசெம்பு தானதுவுஞ் சொகுசாயாச்சு
சொகுசான செம்பிற் தங்கஞ் சேர்த்தபோது
கடுத்ததொரு செம்பதுவுந் தங்கமாச்சு
களிம்பற்ற செம்பதனைக் காணப்போமோ
அடுத்தமனை நடுவீதி ஆதிபார்த்தால்
அந்தமனை சொகுசுவெகு சொகுசாம்பாரே. 1172

பாரப்பா யின்னமொரு பருவங்கேளு
பதிவான சத்துவகை யார்தான்காண்பார்
பேரப்பா பெற்றதொரு சத்துவாங்கி
பெலமான சாரமுடன் பூனீர்கூட்டி
வீரப்பா கொண்டதொரு வாய்நீர்தன்னால்
விசையாகத் தானரைத்து மேலேகேளு
காரப்பா காரமதுக் கங்கிபூட்டி
கருவறிந்து புடம்போடக் கட்டும்பாரே. 1173

கட்டிநின்ற காரமதை யெடுத்துமைந்தா
கருவான வீரமதுக் கிடையேசேர்த்து
திட்டமுடன் வாய்நீரா லரைத்துநல்ல
சிறுமணிபோ லண்டைசெய்து உலர்த்திமைந்தா
நாட்டமுள்ள செம்புதனை யுருக்கிக்கொண்டு
நயமான வீரமணி யொன்றுபோட்டு
இட்டமுடன் தானுருக்கிப் பார்த்தால்மைந்தா
யென்னசொல்வேன் செம்புநிறத் தங்கமாச்சே. 1174

### சாரக்கட்டு

தங்கமய மாகும்வகை யின்னங்கேளு
தானவனாய் நின்றதொரு பூமிநாதம்
அங்கமென்ற நாகமுடன் துருசுகாரம்
அப்பனே வீரமுட னுலுங்கூட்டி
சங்கையுடன் வாய்நீரா லரைத்துமைந்தா
சாரமதுக் கேகவசந் தானேசெய்து
செங்கமலச் சோதியிலே காயவைத்து
தீர்க்கமுடன் மண்கவசந் திறமாய்ச்செய்யே. 1175

செய்யடா கவசமது நன்றாய்ச்செய்து
சிவசிவா சற்குருவைத் தியானஞ்செய்து
கையடா தவறாமற் புடத்தைப்போடு
கண்ணான சாரமது கட்டிப்போகும்
மெய்யடா சாரமது கட்டிப்போனால்
மேன்மைபெறச் சாரமதை வாங்கிமைந்தா
வையடா நாகமதைக் குகையிலேதான்
மார்க்கமுடன் தானுருக்க வகையைக்கேளு. 1176

## நாகக் கட்டு

வகையாகக் கருமானஞ் சொல்லக்கேளு
மகத்தான நாகமது உருகும்போது
பகையான காரமதை முன்னேபோட்டு
பதிவான சாரமதைப் பின்னேபோடு
திகையாமல் வரிசைமுறை நன்றாய்ப்பார்த்து
திறமான நாகமதை யுருக்கிப்பாரு
தகையாமற் தானுருக்கிப் பார்க்கும்போது
தன்மையிள்ள ரசமணிபோ லிருக்கும்பாரே. 1177

இருக்குமந்த நாகமணி தன்னைமைந்தா
ஏகாந்தத் தங்கமது கூடச்சேர்த்து
உருக்கமுடன் தானுருக்கிப் பாருமைந்தா
உருவான நாகதங்க மொன்றாய்ச்சேர்த்து
திருக்கரவே தானுருக்கிச் செம்மையாகும்
செம்மையுட னின்னமொரு கருவைக்கேளு
கருக்கான இரும்புசெம்பு உருகும்போது
கனகமென்ற நாகமணி கருக்காய்ச்சேரே. 1178

சேர்க்கையுடன் னேற்கவேதா னுருக்கிப்பாரு
திருவான களங்குவெகு குருவாய்நிற்கும்
ஏர்க்கையுடன் குருவான களங்கைவாங்கி
வென்மகனே வெள்ளிசெம்பு யிடையாய்ச்சேர்த்தால்
மார்க்கமுட னுருகையிலே பத்துக்கொன்று
வளமான குருகளங்கு ஒன்றுபோட்டு
தீர்க்கமுடன் தானுருக்கிப் பார்த்தாயானால்
திருவான தங்கம்வெகு சோதியாச்சே. 1179

ஆச்சப்பா சோதிமயமான தங்கம்
அண்டகே சரிமாது ஆனதங்கம்
பேச்சப்பா பேசாத மவுனத்தங்கம்
பெருகிநின்ற வாசிநிறைந் திருக்குந்தங்கம்
மூச்சப்பா முகியாத அருளாந்தங்கம்
முத்திதரு அமுர்தரச மானதங்கம்
நீச்சப்பா நிலையாத வாசிதங்கம்
நிசமான தங்கமடா சோதிகாணே. 1180

### லிங்கக் கட்டு

சோதியென்ற வீரமுடன் பூரஞ்சேர்த்து
சுகமான காரமுடன் சாரங்கூட்டி
நீதியுடன் தம்பலத்தின் சாற்றாலாட்டி
நிசமான லிங்கமதுக் கங்கிபூட்டி
ஆதியென்ற ரவிதனிலே உலர்த்திமைந்தா
அசையாமல் மண்சீலை யழுத்தம்பண்ணி
வாதியென்ற போர்நிறுத்திப் புடத்தைப்போடு
மகத்தான லிங்கமடா கட்டிப்போச்சே. 1181

### லிங்கக்கட்டு வேறு

போச்சென்று விடுகாம லின்னமொன்று
பூரணமாய்ச் சொல்லுகிறேன் புதுமையாக
பேச்சென்று நினையாதே வீரம்பூரம்
பிலமாக நின்றதொரு காரசாரம்
மூச்சென்ற அரிதாரங் கெந்தியாறும்
முத்தியுடன் சமபாகங் கல்வத்திட்டு
நீச்சென்ற அமுர்தரச முலைப்பால்தன்னால்
நீமகனே தானரைத்து நிசத்தைக்கேளே. 1182

நிசமான நிசவசனஞ் சொல்லக்கேளு
நீண்டகம்பிச் சாதிலிங்கக் கட்டிவாங்கி
வசமாகத் தானரைத்த மருந்தைப்பூசி
மார்க்கமுடன் காயவைத்து மண்ணுஞ்செய்து
பிசகாமற் சற்குருவைத் தியானம்பண்ணி
பிலமறிந்து புடமதனைப் பேணிப்போடு
திசமான சிவசூட்சத் தாலேமைந்தா
தீர்க்கமுடன் லிங்கமது கட்டும்பாரே. 1183

கட்டிநின்ற லிங்கமுடன் மைந்தாகேளு
கரியுப்பு வெடியுப்புச் சூடன்மூன்றுந்
திட்டமுடன் தானரைத்துப் புடத்தைப்போட்டால்
சிவமான கரியுப்புக் கட்டிபோகும்
சட்டமுடன் கட்டிநின்ற கரியுப்போடே
சாதிலிங்கக் கட்டுடனே கல்வத்திட்டு
இட்டமுடன் கமலரசந் தன்னாலாட்டி
இறுகவொரு வட்டதுபோற் திட்டம்பண்ணே. 1184

பண்ணப்பா வட்டதுபோற் திட்டம்பண்ணி
பதிவான ஓட்டில்வைத்து மண்ணுஞ்செய்து
விண்ணப்பா தானோக்கிப் புடத்தில்வைக்க
வேதமென்ற உப்புடனே லிங்கங்கூட்டி
கண்ணப்பா கண்மணிபோ லருகிக்கட்டும்
கட்டிநின்ற லிங்கமதின் களையைக்கேளு
நண்ணப்பா செம்புவெள்ளி ஒன்றாய்க்கூட்டி
நாட்டமுடன் பத்துக்கொன்று தங்கஞ்சேரே. 1185

சேரப்பா மூன்றுமொன்றாய்க் குகையிலிட்டு
தீர்க்கமுடன் தானுருகி நிற்கும்போது
காரப்பா கட்டிநின்ற லிங்கமொன்று
கணக்காகத் தான்கொடுத்து யெடுத்துப்பார்த்தால்
பேரப்பா பெற்றதொரு தங்கமாகும்
பெலமான தங்கமடா அதிகமாத்து
ஆரப்பா அறிவார்கள் தங்கமாத்து
ஆதிசிவ சோதியுட யோகம்பாரே. 1186

## யோகம்

பாரப்பா யோகமொன்றா லறிவானந்தம்
பதிவான தீபமென்றால் மனக்கண்பார்வை
நேரப்பா வாசியென்றா லமுர்தபானம்
நிசமான பிரமமென்றால் மாய்கைமாய்கை
காரப்பா மாய்கைவெளிக் கண்ணேசூட்சம்
கருவான சூட்சமடா நாதவிந்து
வீரப்பா கொண்டெழுந்த நாதவிந்து
விபரமுட னித்தனையு மறியலாச்சே. 1187

ஆச்சப்பா அறிவான நாதவிந்து
அடங்கிஉருத் திரண்டுஒரு ரூபமாகி
மூச்சப்பா அடங்கிவந்த பிண்டந்தானும்
முத்தியுடன் அசைவாகி ஆஊவென்று
பேச்சப்பா பேச்சற்ற தாலேமைந்தா
பெருகிநின்ற பிராணனல்லோ அறிவானந்தம்
நீச்சப்பா நிசமான அறிவானந்தம்
நின்றுவிளை யாடுகிற நிசத்தைக்கேளே. 1188

## கணபதி

கேளப்பா ஆதார மூலமான
கெணபதியின் பதிதனிலே மனதைவைத்து
கேளப்பா ஓம்சிவா வென்றுசொல்லி
கிருபையுடன் கண்ணுமனக் கண்ணுங்கொண்டு
கேளப்பா சகலசௌ பாக்கியங்கள்
கெணிதமுடன் தருகவென்று புருவமேவி
கேளப்பா மனதுரிமை யாகநின்றால்
கேட்டதெல்லாந் தருமிந்தப் பதிதான்பாரே. 1189

## பிர்மா

பாரப்பா துரியாதீ தத்தில்நின்று
பதிவான பிரமாவை மனதிலெண்ணி
நேரப்பா நம்சிவஓம் மென்றேதான்
நேர்மையுடன் மனக்கண்ணால் புருவமேவி
காரப்பா இல்லறத்தோ டொத்துவாழ்ந்து
கனயோக வாழ்க்கையதா யிருக்கவென்று
சேரப்பா மனத்தோடே தியானம்பண்ணில்
செல்வமென்ற கனபவுசு தீர்க்கமாமே. 1190

## மால் பதி

தீர்க்கமென்ற துரியமணி விட்டிலேதான்
திறமான மலரடியைத் தியானம்பண்ணி
தீர்க்கமுடன் மங்சிவ உம்மென்றேதான்
திருவான புருவமதில் மனக்கண்வைத்து
தீர்க்கமென்ற தீர்க்கமுடன் உலகில்வாழ்ந்து
செல்வபதி யாகவென்று தியானஞ்செய்தல்
தீர்கமுட னினைத்தபடி யாடுந்தெய்வம்
திருவான லெட்சிமியைத் தியானம்பண்ணே. 1191

## ருத்திரன்

பண்ணப்பா சுழுத்தியென்ற முக்கோணத்தில்
பரிவான ருத்திரனை தியானம்பண்ணி
விண்ணப்பா தானோக்கிச் சிங்சிவஓமென்றால்
வெத்திபெற அட்டதிசை தானேஆண்டு
பொன்னப்பா கனயோக மக்கள்சூழப்
பொருந்திநின்ற உலகமதில் தானேவாழ்ந்து
கண்ணப்பா கண்ணுமனக் கருத்தோடேதான்
காசினியில் வாழ்ந்திருப்பார் கருத்தாய்ப்பாரே. 1192

## மயேசுபரன்

கருவான சொற்பனமான் விசுத்திவீடு
கருணையுள்ள மயேசுபரனைத் தியானம்பண்ணி
திருவாக வசிசிவ ஓமென்றாக்கால்
செகராச மகுடபதி தேவர்சூழ
பெருவாழ்வு தனைவிரும்பிப் பூசைசெய்தால்
பேருலகெல் லாம்நிறைந்த சோதியாலே
உருவான தேகமது சித்தியாகி
உண்மையுடன் வாழ்ந்திருப்பார் உலகில்தானே. 1193

## சதாசிவம்

தானென்ற சாக்கிரமா வட்டத்துள்ளே
சதாசிவனார் மனோன்மணியைத் தியானம்பண்ணி
கோனென்ற குருவருளால் யம்சிவஓமென்றாக்கால்
குருவான சிவயோகி யாகியேதான்
வானென்ற கேசரியிற் சோதிபோலே
மகுடரெட்ன பதித்னிலே வாழ்ந்துகொண்டு
தேனென்ற அமுர்தரச திவ்வியமாகி
செகராச ராசரிடி யாவாய்ப்பாரே. 1194

பாரப்பா சாகரத்தின் மேலதாக
பருதிமதி தனையறியப் பார்க்கவென்றால்
நேரப்பா மூலவோங் காரக்கம்பம்
நிசமான கம்பமென்ற வாசியேறி
காரப்பா சதாசிவத்துக் கப்பால்நின்று
கருவான சோதியிரு சுடரைப்பார்த்தால்
வீரப்பா கொண்டதொரு கெவுனந்தங்கும்
மேலான அத்தொய்தஞ் சுத்தமாமே. 1195

சுத்தமுள்ளரவிமதிக்கு மேலதாகச்
சொல்லிறந்த பரவெளியில் சுகத்தைக்காணில்
சித்தமுள்ள பஞ்சகர்த்தாள் வெளியுமாச்சு
சிவமான தவயோகம் வெளியுமாச்சு
சத்தமுள்ள கோடியடா யேழுகோடி
சங்கையுள்ள மந்திரங்கள் வெளியுமாச்சு
வித்தான வித்துகளும் வெளியுமாச்சு
வேதமொடு சாத்திரங்கள் வெளிதான்பாரே. 1196

பாரப்பா அண்டமொடு புவனமெல்லாம்
பதிவான யெழுவகையின் தோற்றமெல்லாம்
நேரப்பா நினைவாலே பார்க்கும்போது
நிட்சயங்க ளொன்றுமிதில் காண்பதில்லை
காரப்பா நிட்சயங்க ளேதென்றாக்கால்
கண்ணான பரவெளியே பரசொரூபம்
தேரப்பா பரசொரூபந் தானேதானாய்
சிவாயகுரு வருளதனால் கடாட்சங்காணே. 1197

காணடா சற்குருவின் கடாட்சத்தாலே
கருணையுள்ள ஆதார தீட்சைபெற்று
பூணடா சத்திசிவ பூசைபண்ணி
பொற்கமலத் துச்சியிலே மனதைவைத்து
பேணடா ரேசகபூ ரகமும்பண்ணி
பிசகாமல் கும்பகத்தில் நின்றுகொண்டு
ஊணடா ஓங்காரக் கம்பத்தேகி
எளியான பரவெளியி லுகந்துபாரே. 1198

பாரப்பா மனதுகந்து மைந்தாநீயும்
　　பரமான பூரணத்தைப் பணிந்துகொண்டு
காரப்பா சரிகையொடு கிரிகையோகம்
　　கருவான ஞானசா தனங்கள்கண்டு
பேரப்பா நவக்கிரக சூட்சம்பார்த்து
　　பிலமான அனுக்கிரக பீடத்தேகி
நேரப்பா நின்றுவழி பார்த்தாயானால்
　　நிசமான வழியெல்லாம் வெளிதான்பாரே. 1199

வெளியான வெளியதுதான் பரசொரூபம்
　　வேதாந்த ரூபமடா சொரூபானந்தம்
வழியான அந்தமடா சொரூபனந்தம்
　　மகத்தான பூரணமா மந்தங்கண்டு
நெளியாம லாதாரங் கடந்தப்பாலே
　　நெருப்பாறு மயிர்ப்பால வழியேசென்று
அளியாத பரமவெளி வெளியோடேவெளியாய்
　　ஆனந்த பூரணமா யமருவதுமுற்றே. 1200

முத்தான புலத்தியனே அய்யாகேளு
　　முழுதுமிதை ஆதிதொடுத் தந்தமாக
சித்தாக நின்றபரி பூரணத்தைநீயும்
　　செம்மையுடன் பூரணமாய்ப் பார்த்ததாலே
வத்தாத பாக்கியமும் வயதுஞ்சித்தி
　　மகத்தான யோகமொடு ஞானஞ்சித்தி
வித்தான மாய்கையற்றுச் சுத்தமான
　　வேதபர வெளியில்மன வெளிசேர்முற்றே. 1201

**அகத்தியர் பரிபூரணம் 1200**

**மு ற் றி ற் று.**



